# வேதாகமம் கண்ணோட்டம்

வேதாகமத்தில் உள்ள 66 புத்தகங்களின் சுருக்கவுரை




*GotQuestions.org*

BIBLE MINUTES

**WOG BOOKS 102**

First Edition 2023

**Author / *ஆசிரியர்:***

www.GotQuestions.org

**Creator / *உருவாக்கியவர்:***

Bible Minutes, a unit of www.WordOfGod.in

**Published By:**

www.GotQuestions.org via Website, iOS App, Android App, Alexa, etc



**Download / *பதிவிறக்கம்:***

www.WordOfGod.in and www.Archive.org

**Contact Us:**

Website: https://www.gotquestions.org/tamil/

**Follow Us:**

**iOS App:** https://apps.apple.com/us/app/got-questions/id366553550

**Android App:** https://play.google.com/store/apps/details?id=com.gotquestions.gqandapp&hl=en

**Amazon Alex:** https://www.amazon.com/gp/product/B07VX73L12

# பொருளடக்கம்

# 1. வேதாகமம் கண்ணோட்டம்

வேதாகமத்தின் ஒரு நல்ல சுருக்கம் / கண்ணோட்டத்தை அடைவதென்பது ஒரு கடினமானதொன்றாகும். வேதகாமத்தில் 2 ஏற்பாடுகள், 66 வெவ்வேறு புத்தகங்கள், 1189 அதிகாரங்கள், 31173 வசனங்கள் மற்றும் 773692 வார்த்தைகள் அடங்கியுள்ளன. வேதாகமத்திலுள்ள வெவ்வேறு புத்தகங்கள் வெவ்வேறு தலைப்புகளை உள்ளடக்கியது மற்றும் வெவ்வேறு வாசகர்களுக்கு எழுதப்பட்டன. சுமார் 1500 வருட காலப்பகுதியில் சுமார் 40 வெவ்வேறு மனிதர்களால் வேதாகமத்தினுடைய புத்தகங்கள் எழுதப்பட்டன. எனவே முழு வேதாகமத்தின் சுருக்கம் / கண்ணோட்டத்தை மேற்கொள்வது என்பது ஒரு முக்கிய பணியாகும்.

அதே நேரத்தில், பரிசுத்த ஆவியானவர் வேதாகமத்தின் "உந்துதலளிக்கும்" எழுத்தாளராக இருந்தார். தேவன் தம்முடைய வார்த்தையை "சுவாசித்தார்", தீர்க்கதரிசிகளையும் அப்போஸ்தலர்களையும் பயன்படுத்தி அவருடைய வார்த்தையை எழுதினார் (2 தீமோத்தேயு 3:16-17; 2 பேதுரு 1:21). மேலும், இயேசு கிறிஸ்துவை விசுவாசித்த அனைவருக்கும் பரிசுத்த ஆவியானவர் அவர்களுக்குள் வந்து தங்கியிருக்கிறார்/வாசமாயிருக்கிறார் (ரோமர் 8:9; 1 கொரிந்தியர் 12:13). நாம் வேதாகமத்தைப் புரிந்துகொள்வதற்கு பரிசுத்த ஆவியானவர் உதவ விரும்புகிறார் (1 கொரிந்தியர் 2:10-16).

எங்களது வேதாகம சுருக்கம் / கண்ணோட்டத்தினுடைய பிரிவின் நோக்கம் வேதாகமத்தின் ஒவ்வொரு புத்தகத்தின் அடிப்படைப் பின்னணியைக் கொடுப்பதாகும். வேதாகமத்தின் ஒவ்வொரு புத்தகத்திற்கும், ஆசிரியர், எழுதப்பட்ட காலம், எழுதப்பட்டதன் நோக்கம், முக்கிய வசனங்கள் மற்றும் சுருக்கமான சுருக்கம் ஆகியவைகள் வழங்கப்படும். எங்களது வேதாகம சுருக்கம் / கண்ணோட்டம் பிரிவு வேதாகமத்தை நன்கு புரிந்துகொள்ள உங்களுக்கு உதவும் என்றும், மேலும் ஆழமான முறையில் வேதாகமத்தைப் படிக்க உங்களை ஊக்குவிக்கும் என்றும் நாங்கள் மெய்யாகவே நம்புகிறோம்.

# 2. பழைய ஏற்பாடு கண்ணோட்டம்

*பழைய ஏற்பாடு ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது: பெண்டடுக் / மோசேயின் ஆகமம் (ஆதியாகமம் முதல் உபாகமம் வரையுள்ள முதல் ஐந்து புத்தகங்கள்), வரலாற்றுப் புத்தகங்கள் (யோசுவாவின் புத்தகம் முதல் எஸ்தர் புத்தகம் வரையிலுள்ள பன்னிரெண்டு புத்தகங்கள்), கவிதை புத்தகங்கள் (யோபுவின் புத்தகம் முதல் சாலமோனின் உன்னதபாட்டு வரையிலுள்ள ஐந்து புத்தகங்கள்), பெரிய தீர்க்கதரிசிகள் (ஏசாயாவின் புத்தகம் முதல் தானியேலின் புத்தகம் வரையிலுள்ள ஐந்து புத்தகங்கள்) மற்றும் சிறிய தீர்க்கதரிசிகள் (ஓசியாவின் புத்தகம் முதல் மல்கியாவின் புத்தகம் வரையிலுள்ள பன்னிரண்டு புத்தகங்கள்). பழைய ஏற்பாடு சுமார் கி.மு. 1400-லிருந்து கி.மு. 400 வரையிலுள்ள காலங்களில் முதன்மையாக மொழியாக எபிரேய மொழியைக்கொண்டு எழுதப்பட்டது, சில சிறு பகுதிகள் மட்டும் அராமிய மொழியில் எழுதப்பட்டுள்ளன (அராமிய மொழி அடிப்படையில் எபிரேய மொழியிலிருந்து சில மாறுபாடுகளைக் கொண்டுள்ளது).*

*பழைய ஏற்பாடு முதன்மையாக தேவனுக்கும் இஸ்ரவேல் தேசத்திற்கும் இடையிலான உறவைப் பற்றியதாகும். பெண்டடுக் (மோசேயின் ஆகமங்கள்) இஸ்ரவேல் மற்றும் தேவன் இஸ்ரவேலுடன் ஒரு உடன்படிக்கை உறவை ஏற்படுத்துவதைப் பற்றியதாகும். வரலாற்றுப் புத்தகங்கள் இஸ்ரவேலின் வரலாறு, அதன் வெற்றிகள் மற்றும் வெற்றிகளுடன் அதன் தோல்விகளையும் பதிவு செய்கின்றன. இஸ்ரவேலுடனான தேவனுடைய உறவையும், அவரை ஆராதிப்பதற்கும் அவருக்குக் கீழ்ப்படிவதற்கும் இஸ்ரவேலுக்கான அவரது ஆழமான நெருக்கத்தையும் உறவையும் குறித்து கவிதை புத்தகங்கள் நமக்கு இன்னும் நெருக்கமான பார்வையைத் தருகின்றன. தீர்க்கதரிசன புத்தகங்கள் இஸ்ரவேலின் விக்கிரகாராதனை மற்றும் அவருக்கு விரோதமான அவர்களுடைய துரோகத்திலிருந்து மனந்திரும்பவும் கீழ்ப்படிதல் மற்றும் ஆவிக்குரிய விசுவாசத்தின் உறவுக்குத் திரும்பவும் தேவனுடைய அழைப்புகளைக் கொண்டுள்ளன.*

ஒருவேளை ஒரு சிறந்த தலைப்பு என்று பார்ப்போமானால், முதல் ஏற்பாடு என்பது மிகவும் சரியானதாக இருக்கும். "பழையது" என்ற சொல் "காலாவதியானது" அல்லது "பொருந்தாது" என்கிற கருத்தை அளிக்கிறது. மேலும் அது சத்தியத்திலிருந்து இருக்க முடியாது என்றாகிறது. பழைய ஏற்பாட்டின் ஒரு கண்ணோட்ட ஆய்வு என்பது ஒரு பயனுள்ள மற்றும் ஆவிக்குரிய நிலையை வளப்படுத்தும் முயற்சியாகும். பழைய ஏற்பாட்டின் பல்வேறு புத்தகங்களின் சுருக்கங்களுக்கான இணைப்புகள் கீழே உள்ளன. கிறிஸ்துவுடனான உங்கள் நடைப்பயணத்தில் எங்களது பழைய ஏற்பாட்டு கண்ணோட்ட ஆய்வு உங்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்று நாங்கள் நம்புகிறோம்.

# 3. புதிய ஏற்பாடு கண்ணோட்டம்

*புதிய ஏற்பாடு ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது: நற்செய்திகள் / சுவிசேஷ புத்தகங்கள் (மத்தேயு எழுதின சுவிசேஷம் முதல் யோவான் எழுதின சுவிசேஷம் வரையிலுள்ள நான்கு புத்தகங்கள்), வரலாறு (அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம்), பவுலின் நிருபங்கள் (ரோமருக்கு எழுதிய நிருபம் முதல் பிலேமோனுக்கு எழுதிய நிருபம் வரை), பொதுவான நிருபங்கள் (எபிரேயருக்கு எழுதின நிருபம் முதல் யூதா எழுதின நிருபம் வரை), மற்றும் தீர்க்கதரிசனம் (வெளிப்படுத்தின விசேஷம்). புதிய ஏற்பாடு ஏறக்குறைய கி.பி. 45 முதல் தோராயமாக கி.பி. 95 வரையிலுள்ள காலங்களில் எழுதப்பட்டதாகும். புதிய ஏற்பாடு பொதுவான என்னும் அர்த்தம் வருகிற கொய்னே என்னும் கிரேக்க மொழியில் எழுதப்பட்டதாகும் (இது கி.பி. முதல் நூற்றாண்டில் கிரேக்க மொழியின் அன்றாட பேச்சு வழக்கில் இருந்துவந்த பொதுவான கிரேக்க மொழியாகும்).*

*இயேசு கிறிஸ்துவின் பிறப்பு, அவரது வாழ்க்கை, ஊழியம், மரணம் மற்றும் உயிர்த்தெழுதல் பற்றிய விவரங்களை நற்செய்தி நூல்கள் நமக்குக் கொடுக்கின்றன. பழைய ஏற்பாட்டின் வாக்குப்பண்ணப்பட்ட மேசியாவாக இயேசு எவ்வாறு இருந்தார் என்பதையும், புதிய ஏற்பாட்டின் மீதமுள்ள போதனைகளுக்கு அடித்தளம் அமைப்பதையும் குறித்து சுவிசேஷ புத்தகங்கள் நிரூபிக்கின்றன. இரட்சிப்பின் நற்செய்தியை அறிவிக்க இயேசு உலகிற்கு அனுப்பிய மனிதர்களான இயேசுவின் அப்போஸ்தலர்களின் செயல்களை அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் பதிவு செய்கிறது. திருச்சபையின் ஆரம்பம் மற்றும் முதல் நூற்றாண்டில் அதன் விரைவான வளர்ச்சியைப் பற்றி அறிந்துகொள்வதற்கு அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் நமக்கு உதவுகிறது. அப்போஸ்தலனாகிய பவுல் எழுதிய பவுலின் நிருபங்கள் குறிப்பிட்ட திருச்சபைகளுக்கான கடிதங்களாகும் — ஆதிகாரப்பூர்வமான கிறிஸ்தவ கோட்பாடுகளையும் அந்த கோட்பாட்டைப் பின்பற்ற வேண்டிய நடைமுறையையும் தருகின்றன. பொதுவான நிருபங்கள் பவுலின் நிருபங்களில் குறிப்பிடப்பட்டுள்ள காரியங்கள் மேல் கூடுதல்*

விவரங்களை கற்பிக்கின்றன மற்றும் நடைமுறை பயன்பாட்டுடன் எடுத்துக்கூறி வலியுறுத்துகின்றன. வெளிப்படுத்தின விசேஷம் புத்தகம் இறுதி காலங்களில் இனி சம்பவிக்கப்போகும் நிகழ்வுகளை முன்னறிவிக்கிறது.

புதிய ஏற்பாட்டின் ஒரு கண்ணோட்ட ஆய்வு ஒரு சக்திவாய்ந்த மற்றும் பலனளிக்கும் ஆய்வாகும். நம்முடைய சார்பாக நமது ஸ்தானத்தில் சிலுவையில் இயேசு மரித்ததைப் பற்றியும், அவருடைய மரணத்திற்கு நம்முடைய பதில் என்னவாக இருக்க வேண்டும் என்பதையும் புதிய ஏற்பாடு சொல்கிறது. புதிய ஏற்பாடு அந்த போதனையைப் பின்பற்ற வேண்டிய நடைமுறை முடிவுகளுடன் உறுதியான கிறிஸ்தவ போதனைகளை வழங்குவதிலும் கவனம் செலுத்துகிறது. புதிய ஏற்பாட்டின் பல்வேறு புத்தகங்களின் கண்ணோட்டம்/சுருக்கங்களுக்கான இணைப்புகள் கீழே உள்ளன. கிறிஸ்துவுடனான உங்கள் நடைப்பயணத்தில் எங்களது புதிய ஏற்பாட்டு கண்ணோட்ட ஆய்வு உங்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்று மெய்யாகவே நாங்கள் நம்புகிறோம்.

# 4. ஆதியாகமம் புத்தகம்

## எழுத்தாளர்:

*ஆதியாகமம் புத்தகத்தின் எழுத்தாளர் யார் என்று குறிப்பாக அடையாளம் கண்டுகொள்ளப்படவில்லை. ஆனால், பாரம்பரியமாக, தொன்றுதொட்டு தொடர்ச்சியாக இந்த புத்தகத்தின் எழுத்தாளர் மோசே என்று நம்பப்பட்டும் கருதப்பட்டும் வருகிறது. ஆதியாகமத்தின் எழுத்தாளர் மோசேதான் என்பதை மறுப்பதற்கு உறுதியான காரணங்கள் எதுவும் இல்லை.*

## எழுதப்பட்ட காலம்:

*ஆதியாகமம் புத்தகம் எப்போது எழுதப்பட்டது என்று அதில் குறிப்பிடவில்லை. மோசே இஸ்ரவேலரை எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுவித்து புறப்படப்பண்ணி வெளியே அழைத்துச் சென்ற காலத்திற்கும் அவரது மரணத்திற்கும் இடையில், எழுதப்பட்டிருக்கலாம் என நம்பபடுகிறது. அதாவது கி.மு. 1440 முதல் கி.மு. 1400 வரையிலுள்ள காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*ஆதியாகமம் புத்தகம் சில நேரங்களில் முழு வேதாகமத்தினுடைய "விதைக்கரு" என்று அழைக்கப்படுகிறது. வேதாகமத்திலுள்ள பெரும்பாலான முக்கிய கோட்பாடுகள் ஆதியாகமம் புத்தகத்தில் "விதை" வடிவத்தில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. மனிதனின் வீழ்ச்சி, அவனுடைய இரட்சிப்பு அல்லது மீட்பினைக் குறித்த தேவனுடைய வாக்குறுதியும் பதிவு செய்யப்பட்டுள்ளது (ஆதியாகமம் 3:15). சிருஷ்டிப்பின் கோட்பாடுகள், பாவத்தின் குற்றச்சாட்டு, நீதிமானாக்குதல், பிராயச்சித்தம், சீரழிவு, கோபம், கருணை, இறையாண்மை, பொறுப்பு மற்றும் இன்னும் பலதும் ஆதியாகமம் எனப்படும் இந்த புத்தகத்தில் அவைகளின் தோற்றம் குறிப்பிடப்பட்டுள்ளன.*

வாழ்க்கையின் பல பெரிய கேள்விகளுக்கு ஆதியாகமத்தில் பதில் அளிக்கப்படுகிறது. (1) நான் எங்கிருந்து வந்தேன்? (தேவன் நம்மைப் படைத்தார் - ஆதியாகமம் 1:1) (2) நான் ஏன் இங்கே இருக்கிறேன்? (தேவனோடு உறவு கொள்ள நாம் இங்கு வந்துள்ளோம் - ஆதியாகமம் 15:6) (3) நான் எங்கே போகிறேன்? (மரணத்திற்குப் பிறகு நமக்கு ஒரு இடம் இருக்கிறது - ஆதியாகமம் 25:8). ஆதியாகமம் புத்தகம், விஞ்ஞானி, வரலாற்றாசிரியர், இறையியலாளர், இல்லத்தரசி, விவசாயி, பயணி மற்றும் தேவனுடைய மனிதனோ மனுஷியோ யாவருக்கும் ஏற்றதாக இருந்து முறையிடுகிறது. மனிதகுலத்திற்கான தேவனுடைய திட்டமான வேதாகமத்தின் கதைக்கு இந்த புத்தகம் ஒரு பொருத்தமான தொடக்கமாகும்.

## திறவுகோல் வசனங்கள்:

ஆதியாகமம் 1:1, "ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார்."

ஆதியாகமம் 3:15, "உனக்கும் ஸ்திரீக்கும், உன் வித்துக்கும் அவள் வித்துக்கும் பகை உண்டாக்குவேன்; அவர் உன் தலையை நசுக்குவார், நீ அவர் குதிங்காலை நசுக்குவாய் என்றார்."

ஆதியாகமம் 12:2-3, "நான் உன்னைப் பெரிய ஜாதியாக்கி, உன்னை ஆசீர்வதித்து, உன் பேரைப் பெருமைப்படுத்துவேன்; நீ ஆசீர்வாதமாய் இருப்பாய். உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்பேன், உன்னைச் சபிக்கிறவனைச் சபிப்பேன்; பூமியிலுள்ள வம்சங்களெல்லாம் உனக்குள் ஆசீர்வதிக்கப்படும் என்றார்."

ஆதியாகமம் 50:20, "நீங்கள் எனக்குத் தீமைசெய்ய நினைத்தீர்கள்; தேவனோ, இப்பொழுது நடந்துவருகிறபடியே, வெகு ஜனங்களை உயிரோடே காக்கும்படிக்கு, அதை நன்மையாக முடியப்பண்ணினார்."

## சுருக்கமான திரட்டு:

ஆதியாகமம் புத்தகத்தை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்: ஆதி வரலாறு மற்றும் முற்பிதாக்களின் வரலாறு. ஆதி வரலாற்றுப் பதிவுகள் (1)

சிருஷ்டிப்பு (ஆதியாகமம் 1-2 அதிகாரங்கள்); (2) மனிதனின் வீழ்ச்சி (ஆதியாகமம் 3-5 அதிகாரங்கள்); (3) ஜலப்பிரளயம் (ஆதியாகமம் 6-9 அதிகாரங்கள்); மற்றும் (4) சிதறடிக்கப்படுதல் (ஆதியாகமம் 10-11 அதிகாரங்கள்) ஆகியவற்றை பதிவுச் செய்கிறது. முற்பிதாக்களின் வரலாறு நான்கு முக்கியமான மனிதர்களின் வாழ்க்கையை பதிவு செய்கிறது: (1) ஆபிரகாம் (ஆதியாகமம் 12-25:8); (2) ஈசாக்கு (ஆதியாகமம் 21:1-35-29); (3) யாக்கோபு (ஆதியாகமம் 25:21-50: 14); மற்றும் (4) யோசேப்பு (ஆதியாகமம் 30:22-50:26).

தேவன் பாவத்தில் விழாத நன்றாக இருந்த ஒரு பிரபஞ்சத்தை படைத்தார். அவருடன் தனிப்பட்ட உறவைப் பெற தேவன் மனிதகுலத்தைப் படைத்தார். ஆதாமும் ஏவாளும் கீழ்ப்படியாமையால் பாவம் செய்து அதன் மூலமாக தீமையையும் மரணத்தையும் உலகிற்குக் கொண்டு வந்தார்கள். தேவன் எதையும் நல்லதாகக் காணும் ஒரே ஒரு குடும்பம் மட்டும் தவிர்த்து உலகில் மீதமுள்ள அனைவரும் அனைத்தும் தீமைக்குள்ளாக சீராக அதிகரித்து இருந்தன. தீமையைத் துடைக்க தேவன் ஜலப்பிரளயத்தை அனுப்பினார், ஆனால் நோவாவையும் அவருடைய குடும்பத்தினரையும் பேழையில் இருந்த விலங்குகளுடன் மீட்டார். ஜலப்பிரளயத்திற்குப் பிறகு, மனிதகுலம் மீண்டும் பலுகிப்பெருகி உலகம் முழுவதும் பரவத் தொடங்கியது.

தேவன் ஆபிரகாமைத் தேர்ந்தெடுத்தார், அவர் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களையும் இறுதியில் வாக்களிக்கப்பட்ட மேசியாவையும் வரும்படி செய்தார். தேர்ந்தெடுக்கப்பட்ட வரிசை ஆபிரகாமின் குமாரன் ஈசாக்கிற்கும், பின்னர் ஈசாக்கின் குமாரன் யாக்கோபுவுக்கும் அனுப்பப்பட்டது. தேவன் யாக்கோபின் பெயரை இஸ்ரவேல் என்று மாற்றினார், அவருடைய பன்னிரண்டு குமாரர்களும் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களின் பிதாக்களானார்கள். தேவன் தமது இறையாண்மையில், யாக்கோபின் குமாரன் யோசேப்பை எகிப்துக்கு அனுப்பினார். சகோதரர்களால் தீமையை நோக்கமாகக் கொண்ட இந்த செயல், தேவனால் நன்மை செய்யப்பட வேண்டும் என்று, இறுதியில் எகிப்தில் பெரும் அதிகாரமுள்ள சக்தியாக உயர்ந்த யோசேப்பு

*அவர்களால் பேரழிவுகரமான பஞ்சத்திலிருந்து யாக்கோபும் அவரது குடும்பத்தினரும் காப்பாற்றப்பட்டனர்.*

## *முன்னிழல்கள்:*

*பல புதிய ஏற்பாட்டு கருப்பொருள்கள் ஆதியாகமத்தில் வேர்களைக் கொண்டுள்ளன. இயேசு கிறிஸ்து சாத்தானின் வல்லமையை அழிக்கும் ஸ்திரீயின் வித்து (ஆதி. 3:15). யோசேப்பைப் போலவே, இயேசுவை சிலுவையில் அறைந்தவர்கள் அதை தீமைக்காக நோக்கினாலும், தம்முடைய குமாரனுடைய பலியின் மூலம் மனிதகுலத்தின் நன்மைக்கான தேவனின் திட்டம் நன்மைக்காகவே கருதப்பட்டது. வேதாகமத்தில் சித்தரிக்கப்பட்டுள்ள பல மீதியானவர்களில் நோவாவும் அவருடைய குடும்பத்தினரும் முதன்மையானவர்கள் ஆகும். மிகுந்த முரண்பாடுகள் மற்றும் கடினமான சூழ்நிலைகள் இருந்தபோதிலும், உண்மையுள்ளவர்களின் மீதியை தேவன் எப்போதும் தனக்காகவே பாதுகாக்கிறார். இஸ்ரவேலரின் எஞ்சியவர்கள் பாபிலோனிய சிறைவாசத்திற்குப் பிறகு எருசலேமுக்குத் திரும்பினர்; ஏசாயா மற்றும் எரேமியாவில் விவரிக்கப்பட்டுள்ள எல்லா துன்புறுத்தல்களினாலும் தேவன் ஒரு மீதியான கூட்டத்தை பாதுகாத்தார்; 7000 ஆசாரியர்களில் எஞ்சியவர்கள் யேசபேலின் கோபத்திலிருந்து பாதுகாக்கப்பட்டார்கள்; யூதர்களில் எஞ்சியவர்கள் ஒரு நாள் அவர்களின் உண்மையான மேசியாவை ஏற்றுக்கொள்வார்கள் என்று தேவன் வாக்குப்பண்ணினார் (ரோமர் 11). தேவன் மேல் ஆபிரகாம் காண்பித்த விசுவாசம், தேவனுடைய பரிசாகவும் யூதருக்கும் புறஜாதியினருக்கும் இரட்சிப்பின் அடிப்படையாகவும் இருக்கும்படி செய்தது (எபேசியர் 2:8-9; எபிரெயர் 11).*

## *நடைமுறை பயன்பாடு:*

*ஆதியாகமத்தின் முக்கிய கருப்பொருள் தேவனுடைய நித்திய இருப்பு மற்றும் அவர் உலகத்தை உருவாக்கியதாகும். தேவனுடைய இருப்பைக் காக்க எழுத்தாளரின் தரப்பில் எந்த முயற்சியும் இல்லை; தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக சர்வவல்லமையுள்ளவர், எப்போதும்*

இருக்கிறவராகவே இருந்தார், எப்போதும் இருப்பார் என்று எழுத்தாளர் எளிய நடையில் கூறுகிறார். அதேபோல், ஆதியாகமத்தின் உண்மைகளை மறுப்பவர்களின் கூற்றுக்கள் ஒருபுறம் இருந்தபோதிலும், நமக்கு இவைகளின் மேல் நம்பிக்கை உள்ளது. எல்லா மக்களும், கலாச்சாரம், தேசியம் அல்லது மொழி ஆகியவற்றைப் பொருட்படுத்தாமல், சிருஷ்டிகருக்கு பொறுப்புக் கூற வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆனால் மனிதனுடைய வீழ்ச்சியின் போது, உலகிற்கு அறிமுகப்படுத்தப்பட்ட பாவத்தின் காரணமாக, நாம் தேவனிடமிருந்து பிரிக்கப்படுகிறோம். ஆனால் ஒரு சிறிய தேசமான இஸ்ரவேல் மூலம், மனிதகுலத்திற்கான தேவனுடைய மீட்பின் திட்டம் வெளிப்படுத்தப்பட்டு அது அனைவருக்கும் கிடைத்தது. அந்த திட்டத்தில் தான் நாமும் பயனடைந்து மகிழ்ச்சியடைகிறோம்.

தேவன் பிரபஞ்சத்தையும், பூமியையும், அதிலுள்ள ஒவ்வொரு உயிரினத்தையும் படைத்தார். நம் வாழ்வில் உள்ள கவலைகளை கையாள நாம் பூரணமாக அவரை நம்பலாம். தேவன் ஒரு நம்பிக்கையற்ற சூழ்நிலையை எடுத்து முற்றிலுமாய் அதை மாற்ற வல்லவராக இருக்கிறார்; அதாவது ஆபிரகாமும் சாராவும் குழந்தை இல்லாதவர்களாக இருந்தார்கள், ஆனால் அவர்கள் தேவனை நம்பினபடியால் தேவன் அவர்களை ஆசிர்வதித்தார். நாமும் வெறுமனே அவரை நம்பி அவருக்கு கீழ்ப்படிந்தால் ஆச்சரியமான காரியங்களைத் தேவன் செய்வார். யோசேப்பைப் போலவே நம் வாழ்க்கையிலும் பயங்கரமான மற்றும் அநியாயமான விஷயங்கள் நடக்கக்கூடும், ஆனால் தேவன் மீதும் அவருடைய இறையாண்மைத் திட்டத்தின் மீதும் நம்பிக்கை இருந்தால், தேவன் எப்போதும் ஒரு சிறந்த நன்மையைக் கொண்டுவருவார். "அன்றியும், அவருடைய தீர்மானத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய் தேவனிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறதென்று அறிந்திருக்கிறோம்" (ரோமர் 8:28).

# 5. யாத்திராகமம் புத்தகம்

## *எழுத்தாளர்:*

*யாத்திராகமம் புத்தகத்தை எழுதியவர் மோசே (யாத்திராகமம் 17:14; 24: 4-7; 34:27).*

## *எழுதப்பட்ட காலம்:*

*யாத்திராகமம் புத்தகம் கி.மு. 1440 மற்றும் கி.பி. 1400 ஆகிய ஆண்டுகளின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*"யாத்திராகமம்" என்ற சொல்லுக்கு புறப்பாடு என்று பொருள். தேவனுடைய குறித்த நேரத்தில், எகிப்திலிருந்து இஸ்ரவேலர்கள் வெளியேறுவது அதாவது ஆபிரகாமின் சந்ததியினருக்கான அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கப்பட்டு வெளியேறும் முடிவைக் குறித்தது (ஆதியாகமம் 15:13), ஆபிரகாமுக்கு அவருடைய சந்ததியினர் வாக்குப்பண்ணப்பட்ட தேசத்தில் வாழ்வதோடு அல்லாமல் அவர்கள் பலுகிப்பெருகி ஒரு பெரிய தேசமாக மாறுவார்கள் (ஆதியாகமம் 12:1-3, 7) என்று ஆபிரகாமிற்கு தேவன் வாக்குப் பண்ணியிருந்தார். எகிப்திலிருந்து யாக்கோபின் சந்ததியினரின் விரைவான வளர்ச்சியை அவர்களின் வாக்களிக்கப்பட்ட தேசத்தில் தேவன் ஆளும் தேசத்தை ஸ்தாபிப்பதை புத்தகத்தின் நோக்கமாக காணலாம்.*

## *திறவுகோல் வசனங்கள்:*

*யாத்திராகமம் 1:8, "யோசேப்பை அறியாத புதிய ராஜன் ஒருவன் எகிப்தில் தோன்றினான்."*

*யாத்திராகமம் 2:24-25, "தேவன் அவர்கள் பெருமூச்சைக் கேட்டு, தாம் ஆபிரகாமோடும் ஈசாக்கோடும் யாக்கோபோடும் செய்த உடன்படிக்கையை நினைவுகூர்ந்தார். தேவன் இஸ்ரவேல் புத்திரரைக் கண்ணோக்கினார்; தேவன் அவர்களை நினைத்தருளினார்."*

*யாத்திராகமம் 12:27, "இது கர்த்தருடைய பஸ்காவாகிய பலி; அவர் எகிப்தியரை அதம்பண்ணி, நம்முடைய வீடுகளைத் தப்பப்பண்ணினபோது, எகிப்திலிருந்த இஸ்ரவேல் புத்திரருடைய வீடுகளைக் கடந்துபோனார் என்று நீங்கள் சொல்லவேண்டும் என்றான். அப்பொழுது ஜனங்கள் தலைவணங்கிப் பணிந்துகொண்டார்கள்."*

*யாத்திராகமம் 20:2-3, "உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் தேவனாகிய கர்த்தர் நானே. என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம்."*

## சுருக்கமான திரட்டு:

*தேவன் தம்முடைய தெரிந்துகொள்ளப்பட்ட ஜனங்களாகிய யூதர்களுடன் இடைபடுவதிலிருந்து அதாவது ஆதியாகமம் முடிகிற அந்த இடத்திலிருந்து யாத்திராகமம் தொடங்குகிறது. எகிப்தில் அதிகாரமும் வல்லமையும் வாய்ந்த யோசேப்பின் விருந்தினர்களாக இஸ்ரவேலர்கள் எகிப்துக்குள் நுழைந்த காலத்திலிருந்து, அடிமைத்தனத்தின் உச்சக்கட்டமாக கொடூரமான அடிமைத்தனத்திலிருந்து அவர்கள் விடுவிக்கப்படும் வரை, அதாவது யோசேப்பை அறியாத புதிய ராஜன் ஒருவன் எகிப்தில் தோன்றி (யாத்திராகமம் 1:8) அவர்களை கொடூரமாக நடத்தும் நிலையிலிருந்து மீட்கப்படுவதாகும்.*

*1-14 வரையிலுள்ள அதிகாரங்கள், பார்வோனின் கீழ் யூதர்களை ஒடுக்குவதற்கான நிலைமைகள், மோசே அவர்களின் ஒரு மீட்பராக எழுப்பப்படுதல், தேவன் மோசேயின் மூலமாக எகிப்துக்குக் கொண்டுவந்த வாதைகள், இஸ்ரவேலின் தலைவனாகிய மோசே கூறின தேவனுடைய வார்த்தைக்கு பார்வோன் கீழ்ப்படிய மறுத்தல், இறுதியாக எகிப்திலிருந்து புறப்படுதல் போன்றவைகளை விவரிக்கிறது. தேவனுடைய இறையாண்மையும் அவரது வல்லமையுள்ள கரமும் எகிப்தின்மேல் அவர் கொண்டுவந்த வாதிகளில் தெளிவாக காணப்படுகிறது - இது முதற்பேறானவரின் மரணத்தின் வாதை மற்றும் முதல் பஸ்காவின் ஆசரிப்புடன் முடிவடைகிறது — அதன் பின்பு, இஸ்ரவேலரின்*

விடுதலைப்பயணம், செங்கடலை இரண்டாகப் பிளத்தல் மற்றும் எகிப்தியரினுடைய இராணுவம் செங்கடலில் அழிக்கப்படுதல்.

யாத்திராகமத்தின் நடுப்பகுதி, இஸ்ரவேலர்கள் வனாந்தரத்தில் அலைந்து திரிவதும், தேவன் தம் ஜனத்தினை அற்புதமாக போஷித்தலையும் வழங்குவதற்கு அர்ப்பணிக்கப்பட்டுள்ளது. ஆனால், அவர் அவர்களுக்கு வானத்திலிருந்து மன்னாவையும், கசப்பிலிருந்து மதுரமான தண்ணீரையும், ஒரு பாறையிலிருந்து தண்ணீரும், அவர்களை அழிக்க எண்ணின எதிரிகளிடமிருந்து வெற்றி, அவருடைய கையால் கல்பலகையில் எழுதப்பட்ட நியாயப்பிரமாணம், மற்றும் இரவில் அக்கினி ஸ்தம்பமாகவும் பகலில் மேகஸ்தம்பமாகவும் அவருடைய பிரசன்னம், இப்படியெல்லாம் உண்டாயிருந்தும், ஜனங்கள் தொடர்ந்து முணுமுணுத்து, அவருக்கு எதிராகக் கலகம் செய்தனர்.

புத்தகத்தின் கடைசி மூன்றில் உடன்படிக்கைப் பெட்டியை உருவாக்குதல், ஆசரிப்புக் கூடாரத்திற்கான திட்டத்தை அதன் பல்வேறு பலிகள், பலிபீடங்கள், பணிமுட்டுகள், பண்டிகைகள் மற்றும் ஆராதனை முறைமைகள் போன்றவற்றை விவரிக்கிறது.

## முன்னிழல்கள்:

இஸ்ரவேலர்கள் தேவனுக்கு கொண்டுவரத் தேவையான பல்வேறு பலிகள், இறுதி பலியினை சுட்டிக்காண்பிக்கும் ஒரு சித்திரமாகும், தேவனுடைய பஸ்கா ஆட்டுக்குட்டி, இயேசு கிறிஸ்துவே. எகிப்தின் கடைசி வாதையின் இரவில், ஒரு பழுதற்ற ஆட்டுக்குட்டி கொல்லப்பட்டு, அதன் இரத்தம் தேவனுடைய ஜனங்கள் வசித்துவந்த வீடுகளின் நிலைக்கால்களிலும், வீட்டு வாசல்களில் பூசப்பட்டு, சங்காரத் தூதனிடமிருந்து அவர்களைப் பாதுகாக்கிறது. இது தேவனுடைய ஆட்டுக்குட்டியானவராகிய இயேசுவை முன்னறிவித்தது (1 பேதுரு 1:19), அவருடைய இரத்தம் நமக்குப் பொருந்தியது, அது நித்திய ஜீவனை உறுதி செய்கிறது. யாத்திராகமம் புத்தகத்தில் கிறிஸ்துவின் அடையாள விளக்கக்காட்சிகளில் யாத்திராகமம் 17: 6-ல் உள்ள பாறையிலிருந்து வரும் தண்ணீரின் கதை உள்ளது. ஜனங்களுக்கு குடிப்பதற்காக கொடுக்கும் தண்ணீரை வழங்க மோசே

*பாறையை அடித்தது போல, தேவன் நம்முடைய இரட்சிப்பின் பாறையாகிய இயேசு கிறிஸ்துவை நம்முடைய பாவத்திற்காக அவரை சிலுவையில் அறையும்படி ஒப்புக்கொடுத்தார், அந்த பாறையிலிருந்து ஜீவத்தண்ணீரின் ஈவு வந்தது (யோவான் 4:10). வனாந்தரத்தில் மன்னாவை வழங்குவது கிறிஸ்துவின் சரியான சித்திரமாகும், அவரே நமது ஜீவ அப்பம் (யோவான் 6:48), இது நமக்கு நித்திய ஜீவனைக் கொடுக்க தேவனால் வழங்கப்பட்டது.*

## ***நடைமுறை பயன்பாடு:***

*மோசேயின் நியாயப்பிரமாணம் மனிதகுலத்தால் கைக்கொள்ள இயலாது என்பதைக் காட்டுவதற்காக ஒரு பகுதியாக வழங்கப்பட்டது. நியாயப்பிரமாணத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம் நாம் தேவனைப் பிரியப்படுத்த முடியாது; ஆகையால், "இயேசு கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலேயன்றி, நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலே மனுஷன் நீதிமானாக்கப்படுவதில்லையென்று அறிந்து, நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலல்ல,கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்படும்படிக்குக் கிறிஸ்து இயேசுவின்மேல் விசுவாசிகளானோம். நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலே எந்த மனுஷனும் நீதிமானாக்கப்படுவதில்லையே" (கலாத்தியர் 2:16) என்று பவுல் வலியுறுத்துகிறார்.*

*அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கப்பட்ட இஸ்ரவேலர்களின் வனாந்திர பயணத்தின்போது, வானத்திலிருந்து மன்னா மற்றும் வனாந்தரத்தில் உள்ள காடைகள் கொடுத்தது ஆகியவை அவருடைய ஜனங்களுக்கு அவர் அளித்த கிருபையின் போஷிப்பு என்பது தெளிவான அறிகுறிகளாகும். நம்முடைய எல்லா தேவைகளையும் பூர்த்தி செய்வதாக தேவன் வாக்குறுதி அளித்துள்ளார். "தம்முடைய குமாரனும் நம்முடைய கர்த்தருமாயிருக்கிற இயேசுகிறிஸ்துவுடனே ஐக்கியமாயிருப்பதற்கு உங்களை அழைத்த தேவன் உண்மையுள்ளவர்" (1 கொரிந்தியர் 1:9).*

*நாம் கர்த்தரை நம்ப வேண்டும், ஏனென்றால் அவர் நம்மை எல்லாவற்றிலிருந்தும் விடுவிக்க முடியும். ஆனால் பாவம் என்றென்றும்*

தண்டிக்கப்படாமல் இருக்க தேவன் ஒருபோதும் அனுமதிப்பதில்லை. இதன் விளைவாக, அவருடைய தண்டனையிலும் நீதியிலும் நாம் அவரை நம்பலாம். தேவன் ஒரு மோசமான சூழ்நிலையிலிருந்து நம்மை அகற்றும்போது, நாம் அவற்றிற்கே திரும்பிச் செல்ல முயற்சிக்கக்கூடாது. தேவன் நம்மிடம் கோரிக்கைகளை வைக்கும்போது, அவருக்கு கீழ்படிந்து அவருக்கு நாம் இணங்க வேண்டும் என்று அவர் எதிர்பார்க்கிறார், ஆனால் அதே நேரத்தில் அவர் கிருபையையும் இரக்கத்தையும் அளிக்கிறார், ஏனென்றால் நாம் நாமாக நமது சொந்த முயற்சியில் முழுமையாகக் கீழ்ப்படிய முடியாது என்பதை அவர் அறிவார்.

# 6. லேவியராகமம் புத்தகம்

***எழுத்தாளர்:***

*லேவியராகமம் புத்தகத்தை எழுதியவர் மோசே.*

***எழுதப்பட்ட காலம்:***

*லேவியராகமம் புத்தகம் கி.மு. 1440 முதல் கி.மு. 1400 வரையிலுள்ள இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டது.*

***எழுதப்பட்டதன் நோக்கம்:***

*இஸ்ரவேலர்கள் 400 ஆண்டுகளாக எகிப்தில் சிறைப்படுத்தப்பட்ட அடிமைத்தனத்திற்குட்பட்டிருந்ததால், தேவனைப்பற்றிய கருத்து பலதெய்வ கோட்பாடு, மற்றும் அன்னியஜாதிகளால் / எகிப்தியர்களால் சிதைக்கப்பட்டது. லேவியராகமம் புத்தகத்தின் நோக்கம், ஒரு பாவமுள்ள, ஆனால் மீட்கப்பட்ட ஜனங்களை பரிசுத்த தேவனுடனான உறவில் வழிநடத்த அறிவுறுத்தலும் சட்டங்களும் வழங்குவதாகும். பரிசுத்த தேவனுக்குப் பதிலளிக்கும் விதமாக தனிப்பட்ட பரிசுத்தத்தின் தேவை குறித்து லேவியராகமத்தில் ஒரு முக்கியத்துவம் உள்ளது. சரியான பலிகளை வழங்குவதன் மூலம் பாவத்திற்கு பரிகாரம் செய்ய வேண்டும் (அத்தியாயங்கள் 8-10). உணவில் (சுத்தமான மற்றும் அசுத்தமான உணவுகள்), பிரசவம் மற்றும் கவனமாக கட்டுப்படுத்தப்படும் நோய்கள் (11-15 அதிகாரங்கள்) இந்த புத்தகத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. ஜனங்களின் ஒட்டுமொத்த பாவத்திற்காக வருடாந்திர பலி செய்யப்படும் பாவப்பரிகார நாளை 16-ஆம் அதிகாரம் விவரிக்கிறது. மேலும், தேவனுடைய ஜனங்கள் தங்களின் தனிப்பட்ட, தார்மீக மற்றும் சமூக வாழ்வில் கவனமாக இருக்க வேண்டும், அன்றைய புறஜாதிகளின் தற்போதைய நடைமுறைகளுக்கு மாறாக, அவர்களைச் சுற்றிலும் எல்லா வகையிலும் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் (17-22 அதிகாரங்கள்).*

***திறவுகோல் வசனங்கள்:***

*லேவியராகமம் 1:4, "அது தன் பாவநிவிர்த்திக்கென்று அங்கிகரிக்கப்படும்படி தன் கையை அதின் தலையின்மேல் வைத்து."*

*லேவியராகமம் 17:11, "மாம்சத்தின் உயிர் இரத்தத்தில் இருக்கிறது; நான் அதை உங்களுக்குப் பலிபீடத்தின்மேல் உங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவநிவிர்த்தி செய்யும்படிக்குக் கட்டளையிட்டேன்; ஆத்துமாவிற்காகப் பாவநிவிர்த்தி செய்கிறது இரத்தமே."*

*லேவியராகமம் 19:18, "பழிக்குப்பழி வாங்காமலும், உன் ஜனப்புத்திரர்மேல் பொறாமைகொள்ளாமலும், உன்னில் நீ அன்புகூருவதுபோல் பிறனிலும் அன்புகூருவாயாக; நான் கர்த்தர்."*

*சுருக்கமான திரட்டு: 1-7 வரையிலுள்ள அதிகாரங்கள் சாதாரண பாமர மக்களுக்கும் மற்றும் ஆசாரிய வர்க்கத்தும் தேவையான பலிகளைக் கோடிட்டுக் காட்டுகின்றன. 8-10 வரையிலுள்ள அதிகாரங்கள் ஆரோனையும் அவருடைய குமாரர்களையும் ஆசாரியத்துவத்திற்கு ஒப்புக்கொடுத்ததை விவரிக்கின்றன. 11-16 வரையிலுள்ள அதிகாரங்கள் பல்வேறு வகையான தீட்டான காரியங்களுக்கான நியமங்கள் பரிந்துரைக்கப்படுகின்றன. இறுதியிலுள்ள 10 அதிகாரங்கள் நடைமுறை பரிசுத்தத்திர்கான தேவனுடைய வழிகாட்டுதல்கள் அடங்கியுள்ளன. யெகோவா தேவனை ஆராதித்து வணங்குவதில் பல்வேறு பண்டிகைகள் மற்றும் அவைகளின் ஆசரிப்புகள் நிறுவப்பட்டன, தேவனுடைய கடவுளின் நியாயப்பிரமாண சட்டங்களின்படி அவைகள் நடைமுறையில் இருந்தன. ஆசீர்வாதங்கள் அல்லது சாபங்கள் தேவனுடைய கட்டளைகளைக் கடைப்பிடிப்பது அல்லது புறக்கணிப்பதை சார்ந்து இருந்தன (அதிகாரம் 26). கர்த்தருக்கான பொருத்தனைகள் அல்லது நேர்ச்சைகள் 27 ஆம் அதிகாரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.*

*லேவியராகமத்தின் முதன்மையான உட்கருத்து பரிசுத்தம் ஆகும். தம்முடைய ஜனங்களில் பரிசுத்தத்திற்கான தேவனுடைய கோரிக்கை அவருடைய சொந்த பரிசுத்த தன்மையை அடிப்படையாகக் கொண்டது. பாவப்பரிகாரம் என்பது ஒரு தொடர்புடைய உட்கருத்தாகும். தேவனுக்கு முன்பாக நாம் பரிசுத்தத்தைப் பேண வேண்டும், சரியான*

*பாவப்பரிகாரத்தின் மூலம் மட்டுமே அந்த பரிசுத்தத்தை அடைய முடியும்.*

## *முன்னிழல்கள்:*

*வழிபாட்டின் சடங்கு நடைமுறைகள் பல வழிகளில் நம்முடைய இரட்சகராகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நபர் மற்றும் வேலையை மையமாகக்கொண்டு இருக்கின்றன. மோசேயின் நியாயப்பிரமாணம் "வரப்போகிற நன்மைகளின் பொருளாயிராமல், அவைகளின் நிழலாய்மாத்திரம் இருக்கிறது" என்று எபிரெயர் **10:1** நமக்குச் சொல்கிறது, இதன் பொருள் ஜனங்களின் பாவத்திற்காக ஆசாரியர்கள் அன்றாடம் செலுத்தும் பலிகள் இறுதியாக வரப்போகிற பலியின் நிழல் அல்லது பிரதிபலிப்பாகும் - இயேசு கிறிஸ்து, அவரை நம்புகிறவர்களுக்கு அவருடைய சிலுவைப்பலி எல்லா நேரத்திலும் போதுமானதாக இருக்கும். கிறிஸ்துவின் நீதிக்காக கிறிஸ்தவர்கள் தங்கள் பாவத்தை பரிமாறிக்கொண்டபோது, நியாயப்பிரமாணத்தால் தற்காலிகமாக வழங்கப்பட்ட பரிசுத்தம் ஒரு நாள் பரிசுத்தத்தின் முழுமையான நிலையில் அடையத்தக்கதாக மாற்றப்படும் (**2** கொரிந்தியர் **5:21**).*

## *நடைமுறை பயன்பாடு:*

*தேவன் தம்முடைய பரிசுத்தத்தை மிகவும் தீவிரமாக எடுத்துக்கொள்கிறார், எனவே நாமும் அவ்வாறு செய்ய வேண்டும். பின்நவீனத்துவ திருச்சபையின் போக்கு என்னவென்றால், தேவனை நம்முடைய சாயலில் உருவாக்குவது, அவருடைய வார்த்தை விவரிக்கும் பொருள்களுக்குப் பதிலாக நாம் அவரிடம் இருக்க விரும்பும் பண்புகளை அவருக்குக் கொடுப்பது. தேவனுடைய முழுமையான பரிசுத்தத்தன்மை, அவருடைய அதிசயமான மகிமை, அவருடைய "சேரக்கூடாத ஒளியில் வாசம்பண்ணும்" (**1** தீமோத்தேயு **6:16**) பல கிறிஸ்தவர்களுக்கு அந்நியமான கருத்துக்களாக இருக்கின்றன. நாம் அவருடைய பார்வையில் பிரியமுள்ள நடப்பை அடைவதற்காக வெளிச்சத்தில் நடக்கவும், நம் வாழ்வில் இருளை விலக்கவும் அழைக்கப்படுகிறோம். பரிசுத்தமான தேவன் தம் மக்களில் அப்பட்டமான, வெட்கம்கெட்ட பாவத்தை*

சகித்துக்கொள்ள முடியாது, அவருடைய பரிசுத்தமானது அதைத் தண்டித்தே ஆகவேண்டும். பாவம் அல்லது தேவன் அதை வெறுத்து தண்டிப்பதைப் பற்றிய நமது அணுகுமுறைகளில் நாம் சுறுசுறுப்பாக இருக்கவேண்டும், அதை எந்த வகையிலும் வெளிச்சம் போடக்கூடாது.

நம் சார்பாக நமது இயேசுவின் சிலுவை மரணம் காரணமாக அமைந்ததால், நாம் இனி மிருகங்களை/விலங்குகளை பலியிட வேண்டியதில்லை என்பதற்காக கர்த்தரைத் துதியுங்கள். லேவியராகமம் என்பது மாற்றீடு பற்றியது. மிருகங்களின் மரணம் பாவம் செய்தவர்களுக்கு மாற்று தண்டனையாகும். அதே வழியில், ஆனால் எல்லையற்றது மற்றும் சிறந்தது, சிலுவையில் மரித்த இயேசுவின் பலி, அது நம் பாவங்களுக்கு மாற்றாக இருந்தது. தேவன் கிறிஸ்துவின் நீதியை அவர் நம்மில் காண்கிறார் என்பதால், இப்போது நாம் பயமின்றி முழுமையான பரிசுத்தமுள்ள தேவனுக்கு முன்பாக நிற்க முடியும்.

# 7. எண்ணாகமம் புத்தகம்

***எழுத்தாளர்:***

*எண்ணாகமம் புத்தகத்தை எழுதியவர் மோசே.*

***எழுதப்பட்ட காலம்:***

*எண்ணாகமம் புத்தகம் கி.மு. 1440 முதல் கி.மு. 1400 வரையிலுள்ள இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டது.*

***எழுதப்பட்டதன் நோக்கம்:***

*எண்ணாகமம் புத்தகத்தின் செய்தியானது உலகளாவிய மற்றும் காலத்திற்கு அப்பாற்பட்டது. விசுவாசிகள், அவர்கள் ஈடுபட்டுள்ள ஆவிக்குரிய யுத்தத்தை இது நினைவூட்டுகிறது, ஏனென்றால் எண்ணாகமம் என்பது தேவனுடைய மக்களின் ஊழியம் மற்றும் நடையின் புத்தகமாகும். எண்ணாகமம் புத்தகம் இஸ்ரவேலர்கள் நியாயப்பிரமாணத்தை (யாத்திராகமம் மற்றும் லேவியராகமம்) பெற்றுக்கொள்வதற்கும் வாக்குப்பண்ணப்பட்ட தேசத்தில் (உபாகமம் மற்றும் யோசுவா) நுழைய அவர்களைத் தயார்படுத்துவதற்கும் இடையிலான இடைவெளியைக் நிரப்பி அவைகளுக்கு ஒரு பாலமாக இருக்கிறது.*

**திறவுகோல் வசனங்கள்:**

*எண்ணாகமம் 6:24-26, "கர்த்தர் உன்னை ஆசீர்வதித்து, உன்னைக் காக்கக்கடவர். கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேல் பிரகாசிக்கப்பண்ணி, உன்மேல் கிருபையாயிருக்கக்கடவர். கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேல் பிரசன்னமாக்கி, உனக்குச் சமாதானம் கட்டளையிடக்கடவர் என்பதே."*

*எண்ணாகமம் 12:6-8, "அப்பொழுது அவர்: என் வார்த்தைகளைக் கேளுங்கள்; உங்களுக்குள்ளே ஒருவன் தீர்க்கதரிசியாயிருந்தால், கர்த்தராகிய நான் தரிசனத்தில் என்னை அவனுக்கு வெளிப்படுத்தி, சொப்பனத்தில் அவனோடே பேசுவேன். என் தாசனாகிய மோசேயோ*

அப்படிப்பட்டவன் அல்ல, என் வீட்டில் எங்கும் அவன் உண்மையுள்ளவன். நான் அவனுடன் மறைபொருளாக அல்ல, முகமுகமாகவும் பிரத்தியட்சமாகவும் பேசுகிறேன்; அவன் கர்த்தரின் சாயலைக் காண்கிறான்; இப்படியிருக்க, நீங்கள் என் தாசனாகிய மோசேக்கு விரோதமாய்ப் பேச, உங்களுக்குப் பயமில்லாமற்போனதென்ன என்றார்."

எண்ணாகமம் 14:30-34, "எப்புன்னேயின் குமாரன் காலேபும், நூனின் குமாரன் யோசுவாவும் தவிர, மற்றவர்களாகிய நீங்கள் நான் உங்களைக் குடியேற்றுவேன் என்று ஆணையிட்டுக்கொடுத்த தேசத்தில் பிரவேசிப்பதில்லை. கொள்ளையாவார்கள் என்று நீங்கள் சொன்ன உங்கள் குழந்தைகளையோ நான் அதில் பிரவேசிக்கச் செய்வேன்; நீங்கள் அசட்டைப்பண்ணின தேசத்தை அவர்கள் கண்டறிவார்கள். உங்கள் பிரேதங்களோ இந்த வனாந்தரத்திலே விழும். அவைகள் வனாந்தரத்திலே விழுந்து தீருமட்டும், உங்கள் பிள்ளைகள் நாற்பதுவருஷம் வனாந்தரத்திலே திரிந்து, நீங்கள் சோரம்போன பாதகத்தைச் சுமப்பார்கள். நீங்கள் தேசத்தை சுற்றிப்பார்த்த நாற்பதுநாள் இலக்கத்தின்படியே, ஒவ்வொரு நாள் ஒவ்வொரு வருஷமாக, நீங்கள் நாற்பது வருஷம் உங்கள் அக்கிரமங்களைச் சுமந்து, என் உடன்படிக்கைக்கு வந்த மாறுதலை உணருவீர்கள்."

## சுருக்கமான திரட்டு:

எண்ணாகமம் புத்தகத்தின் பெரும்பாலான நிகழ்வுகள் வனாந்தரத்தில் நடைபெறுகின்றன, அதுவும் முதன்மையாக இஸ்ரவேலர்கள் அலைந்து திரிந்த இரண்டாம் மற்றும் நாற்பதாம் ஆண்டுகளுக்கு இடையில் உள்ளவைகள் விவரிக்கப்பட்டுள்ளன. புத்தகத்தின் முதல் 25 அதிகாரங்கள் வனாந்தரத்தில் இஸ்ரவேலர்களின் முதல் தலைமுறையின் அனுபவங்களை விவரிக்கின்றன, மீதமுள்ள புத்தகம் இரண்டாம் தலைமுறையின் அனுபவங்களை விவரிக்கிறது. கீழ்ப்படிதல் மற்றும் கலகத்தை தொடர்ந்து மனந்திரும்புதல் மற்றும் ஆசிர்வாதம் இந்த புத்தகத்தின் கருப்பொருள் ஆகும், இது முழு புத்தகத்திலும், பழைய ஏற்பாட்டிலும் இயங்குகிறது.

தேவனுடைய பரிசுத்தத்தின் கருப்பொருள் லேவியராகமம் புத்தகத்திலிருந்து எண்ணாகமம் புத்தகத்திலும் தொடர்கிறது, இது தேவனுடைய அறிவுறுத்தலையும் அவருடைய ஜனங்களை வாக்குறுதியளிக்கப்பட்ட கானான் தேசத்திற்குள் நுழையத் தயார்படுத்துவதையும் வெளிப்படுத்துகிறது. எண்ணாகமம் புத்தகத்தின் முக்கியத்துவம் புதிய ஏற்பாட்டில் பல முறை குறிப்பிடப்படுவதன் மூலம் குறிக்கப்படுகிறது. பரிசுத்த ஆவியானவர் 1 கொரிந்தியர் 10:1-12-ல் குறிப்பிடப்பட்டுள்ள காரியங்கள், எண்ணாகமம் புத்தகத்திற்கு சிறப்பு கவனம் செலுத்தும்படி சித்தமானார். "இவைகளெல்லாம் திருஷ்டாந்தங்களாக அவர்களுக்குச் சம்பவித்தது" என்ற வார்த்தைகள் இஸ்ரவேலர்களின் பாவத்தையும், தேவன் அவர்களுக்குள்ள அதிருப்தியாய் இருந்ததையும் குறிக்கிறது.

ரோமர் 11:22 ல் பவுல் "தேவனுடைய தயவையும் கண்டிப்பையும்" பற்றி பேசுகிறார். சுருக்கமாக, இதுதான் எண்ணாகமம் புத்தகத்தின் செய்தி. வாக்குப்பண்ணப்பட்ட தேசத்திற்குள் ஒருபோதும் நுழையாதவர்கள், வனாந்தரத்தில் கலகக்கார தலைமுறையினரின் மரணத்தில் தேவனுடைய தீவிரம் காணப்படுகிறது. தேவனுடைய நன்மை புதிய தலைமுறையில் உணரப்படுகிறது. இந்த ஜனங்கள் தங்கள் நிலத்தை வாக்குப்பண்ணப்பட்ட தேசத்தில் சுதந்தரிக்கும் வரை தேவன் அவர்களைப் பாதுகாத்து, போஷித்து வழி நடத்தினார். இது எப்போதும் இறையாண்மை ஒற்றுமையுடன் இருக்கும் தேவனுடைய நீதியையும் அன்பையும் நினைவூட்டுகிறது.

## முன்னிழல்கள்:

தம்முடைய ஜனத்தின் சார்பாக நியாயப்பிரமாணத்தை நிறைவேற்ற வந்த இயேசு கிறிஸ்துவில் அவருடைய மக்கள் பரிசுத்தத்திற்கான தேவனுடைய கோரிக்கையை முழுமையாகவும் இறுதியாகவும் திருப்தி அடைகிற வகையில் செய்தது (மத்தேயு 5:17). வாக்குறுதியளிக்கப்பட்ட மேசியாவின் கருத்து புத்தகத்தில் பரவி இருக்கிறது. சிவப்பு கடாரியின் பலியானது 19 ஆம் அதிகாரத்திலுள்ள சம்பவம் “கறைதிரை இல்லாமல் மாசற்ற” கிறிஸ்துவை முன்னிலைப்படுத்துகிறது, நம்முடைய பாவங்களுக்காக

*பலியிடப்பட்ட மாசற்ற தேவனுடைய ஆட்டுக்குட்டியாக இயேசு இருக்கிறார். உடல் ரீதியான குணப்படுத்துதலுக்காக மரத்தில் உயர்த்தப்பட்ட வெண்கல பாம்பின் உருவம் (அத்தியாயம் 21) கிறிஸ்துவின் சிலுவையின் மரணம் அல்லது வார்த்தையின் ஊழியத்தை முன்னறிவிக்கிறதாக இருக்கிறது, விசுவாசத்தினாலே அவரைப் பார்க்கிறவருக்கு ஆவிக்குரிய சுகம் கிடைக்கும்.*

*24 ஆம் அத்தியாயத்தில், பிலேயாமின் நான்காவது தேவ வாக்கு யாக்கோபிலிருந்து புறப்படவிருக்கும் நட்சத்திரம் மற்றும் செங்கோல் பற்றி பேசுகிறது. வெளிப்படுத்துதல் 22:16-ல் "அதிகாலையின் நட்சத்திரம்" என்று அழைக்கப்படும் கிறிஸ்துவின் தீர்க்கதரிசனம் இங்கே உள்ளது, அவருடைய மகிமை, பிரகாசம், கனம் மற்றும் அவரால் ஒளியும் பிரகாசமும் வருகிறது. அவரது ராஜரீகத்தன்மை காரணமாக அவர் ஒரு செங்கோல், அதாவது செங்கோல் தாங்கி என்றும் ராஜாவாக இருக்கிறார் என்றும் அழைக்கப்படலாம். அவர் ஒரு ராஜாவின் பெயரை மட்டுமல்ல, ஒரு ராஜ்யத்தையும் கொண்டிருக்கிறார், மேலும் கிருபை, இரக்கம் மற்றும் நீதியின் செங்கோலுடன் அவர் ஆட்சி செய்கிறார்.*

## ***நடைமுறை பயன்பாடு:***

*புதிய ஏற்பாட்டில் எண்ணாகமத்திலிருந்து உருவாக்கப்பட்ட ஒரு முக்கிய இறையியல் கருப்பொருள் என்னவென்றால், பாவமும் அவநம்பிக்கையும், குறிப்பாக கலகம் செய்து கிளர்ச்சி உண்டாக்குதல், தேவனுடைய நியாயத்தீர்ப்பை அறுவடை செய்கிறது. 1 கொரிந்தியர் குறிப்பாக கூறுகிறது - எபிரெயர் 3:7-4:13 வரையிலுள்ள வேதபாகமும் இதை வலுவாகக் குறிக்கிறது - இந்த நிகழ்வுகள் யாவும் விசுவாசிகள் மிகவும் கவனமாக கவனிக்கவும் தவிர்க்கவும் எடுத்துக்காட்டுகளாக எழுதப்பட்டுள்ளன. நாம் "தீய காரியங்களில் நம் இருதயங்களை அமைத்துக் கொள்ளக்கூடாது" (வச. 6), அல்லது பாலியல் ஒழுக்கக்கேடானவர்களாக இருக்கக்கூடாது (வச. 8), அல்லது தேவனை சோதனைக்குட்படுத்த கூடாது (வச. 9) அல்லது வலுக்கட்டாயமாக குறைகூறவும் கூடாது (வச. 10).*

*இஸ்ரவேலர் தங்கள் கிளர்ச்சியின் காரணமாக ஏறக்குறைய 40 வருடங்கள் வனாந்தரத்தில் அலைந்ததைப் போலவே, சில சமயங்களில் தேவன் நம்மை அவரிடமிருந்து விலகி அலையவும், தனக்கு எதிராக கலகம் செய்யும்போது தனிமையும் ஆசீர்வாதங்கள் இல்லாதிருக்கவும் அனுமதிக்கிறார். ஆனால் தேவன் உண்மையுள்ளவர், நீதியுள்ளவர், இஸ்ரவேலரை அவருடைய இருதயத்தில் சரியான இடத்திற்கு மீட்டெடுத்தது போலவே, நாம் மனந்திரும்பி அவரிடம் திரும்பி வந்தால், கிறிஸ்தவர்களை ஆசீர்வதிக்கும் இடத்திற்கு நெருக்கமான கூட்டுறவுக்கும் அவர் எப்போதும் மீட்டெடுப்பார் (1 யோவான் 1:9 ).*

# 8. உபாகமம் புத்தகம்

## எழுத்தாளர்:

மோசே உபாகமம் புத்தகத்தை எழுதினார், இது உண்மையில் இஸ்ரவேலர்கள் யோர்தானைக் கடப்பதற்கு சற்று முன்பு இஸ்ரவேலர்களுக்கு அவர் ஆற்றிய பிரசங்கங்களின் தொகுப்பாகும். "மோசே இஸ்ரவேலர் எல்லாரையும் நோக்கிச் சொன்ன வசனங்களாவன" (1:2). வேறு யாரோ ஒருவர் (ஒருவேளை யோசுவாவாக இருக்கலாம்) இந்த புத்தகத்தின் கடைசி அதிகாரத்தை எழுதியிருக்கலாம்.

## எழுதப்பட்ட காலம்:

இஸ்ரவேலர்கள் வாக்குப்பண்ணப்பட்ட தேசத்திற்குள் நுழைவதற்கு 40 நாட்களுக்கு முன்னர் இந்த பிரசங்கங்கள் மோசேயினால் வழங்கப்பட்டன. முதல் பிரசங்கம் பதினோராம் மாதம் முதல் தேதியிலே (1:4) வழங்கப்பட்டது, இஸ்ரவேலர்கள் 70 நாட்களுக்குப் பிறகு, முதல் மாதம் பத்தாம் தேதியிலே ஜனங்கள் யோர்தானிலிருந்து கரையேறி, எரிகோவுக்குக் கீழ் எல்லையான கில்காலிலே பாளயமிறங்கினார்கள் (யோசுவா 4:19). மோசேயின் மரணத்திற்குப் பிறகு 30 நாட்கள் துக்கத்தை ஆசரித்ததை கழித்தால் (உபாகமம் 34:8), நமக்கு மீதமுள்ளது 40 நாட்கள். ஆக, இந்த புத்தகம் எழுதப்பட்ட ஆண்டு கி.மு. 1410.

## எழுதப்பட்டதன் நோக்கம்:

புதிய தலைமுறை இஸ்ரவேலர்கள் வாக்குப்பண்ணப்பட்ட தேசத்திற்குள் நுழையவிருந்தனர். இந்த கூட்டம் செங்கடலில் நடந்த அதிசயத்தை அனுபவிக்கவில்லை அல்லது சீனாய் மலையில் கொடுக்கப்பட்ட நியாயப்பிரமாண சட்டத்தைக் கேட்கவில்லை, மேலும் அவர்கள் பல ஆபத்துகளையும் சோதனையையும் கொண்டு ஒரு புதிய தேசத்திற்குள் நுழையவிருந்தனர். தேவனுடைய நியாயப்பிரமாணம் மற்றும் தேவனுடைய வல்லமை ஆகியவற்றை நினைவூட்டுவதற்காக இந்த உபாகமம் புத்தகம் எழுதப்பட்டது.

## திறவுகோல் வசனங்கள்:

*“நான் உங்களுக்குக் கற்பிக்கும் உங்கள் தேவனாகிய கர்த்தரின் கட்டளைகளை நீங்கள் கைக்கொள்ளும்படி, நான் உங்களுக்குக் கற்பிக்கிற வசனத்தோடே நீங்கள் ஒன்றும் கூட்டவும் வேண்டாம், அதில் ஒன்றும் குறைக்கவும் வேண்டாம்.” (உபாகமம் 4:2)*

## “இஸ்ரவேலே, கேள்:

*நம்முடைய தேவனாகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர். நீ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழுப் பலத்தோடும் அன்புகூருவாயாக. இன்று நான் உனக்குக் கட்டளையிடுகிற இந்த வார்த்தைகளை உன் இருதயத்தில் இருக்கக்கடவது. நீ அவைகளை உன் பிள்ளைகளுக்குக் கருத்தாய்ப் போதித்து, நீ உன் வீட்டில் உட்கார்ந்திருக்கிறபோதும், வழியில் நடக்கிறபோதும், படுத்துக்கொள்ளுகிறபோதும், எழுந்திருக்கிறபோதும் அவைகளைக் குறித்துப் பேசுங்கள்.” (உபாகமம் 6:4-7)*

## “அவர்களை நோக்கி:

*இந்த நியாயப்பிரமாண வார்த்தைகளின்படியெல்லாம் உங்கள் பிள்ளைகள் செய்யும்படி கவனமாயிருக்க, நீங்கள் அவர்களுக்குக் கற்பிக்கும்படி, நான் இன்று உங்களுக்குச்சாட்சியாய் ஒப்புவிக்கிற வார்த்தைகளையெல்லாம் உங்கள் மனதிலே வையுங்கள். இது உங்களுக்கு வியர்த்தமான காரியம் அல்லவே; இது உங்கள் ஜீவனாயிருக்கிறது, நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளும்படி யோர்தானைக் கடந்துபோய்ச் சேரும்தேசத்தில் இதினால் உங்கள் நாட்களை நீடிக்கப்பண்ணுவீர்கள் என்றான்.” (உபாகமம் 32:46-47)*

## சுருக்கமான திரட்டு:

தேவனுடைய உண்மை, தேவனுடைய பரிசுத்தம், தேவனுடைய ஆசீர்வாதம் மற்றும் தேவனுடைய எச்சரிக்கைகள் ஆகிய நான்கு விஷயங்களை நினைவில் வைக்கவேண்டும் என்று இஸ்ரவேலர்களுக்கு

*கட்டளையிடப்பட்டுள்ளது. முதல் மூன்று அதிகாரங்கள் எகிப்திலிருந்து தாங்கள் தற்போது வந்து சேர்ந்திருக்கிற இடமான மோவாபிற்கு முந்தைய பயணத்தை மீண்டும் ஞாபகம் மூட்டுகின்றன. 4ஆம் அதிகாரம் கீழ்ப்படிதலுக்கான அழைப்பு, அவர்களுக்கு உண்மையுள்ள தேவனுக்கு அவர்கள் உண்மையாக இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன.*

*5 முதல் 26 வரையிலுள்ள அதிகாரங்கள் நியாயப்பிரமாண சட்டத்தை மறுபடியும் எடுத்துகூறல் ஆகும். பத்து கட்டளைகள், பலிகள் மற்றும் விசேஷித்த நாட்கள் தொடர்பான சட்டங்கள் மற்றும் மீதமுள்ள சட்டம் புதிய தலைமுறைக்கு வழங்கப்படுகின்றன. கீழ்ப்படிவோருக்கு ஆசீர்வாதமும் வாக்குறுதி அளிக்கப்படுகிறது (5:29; 6:17-19; 11:13-15), அவரது சட்டத்தை மீறுபவர்களுக்கு பஞ்சம் வாக்குறுதி அளிக்கப்படுகிறது (11:16-17).*

*ஆசீர்வாதம் மற்றும் சாபம் என்கிற கருப்பொருள் 27-30 வரையிலுள்ள அதிகாரங்களில் தொடர்கிறது. புத்தகத்தின் இந்த பகுதி இஸ்ரவேலர்களுக்கு முன்பாக ஒரு தெளிவான தேர்வோடு முடிவடைகிறது: "நான் ஜீவனையும் மரணத்தையும், ஆசீர்வாதத்தையும் சாபத்தையும் உனக்குமுன் வைத்தேன் என்று உங்கள்மேல் வானத்தையும் பூமியையும் இன்று சாட்சிவைக்கிறேன்; ஆகையால், நீயும் உன் சந்ததியும் பிழைக்கும்படிக்கு, நீ ஜீவனைத் தெரிந்துகொள்ளுங்கள்" (30:19) .*

*கடைசி அதிகாரங்களில், மோசே ஜனங்களை ஊக்குவிக்கிறார்; அவருக்குப் பதிலாக அவருடைய ஸ்தானத்தில் இஸ்ரவேலர்களை நடத்தும்படிக்கு யோசுவாவை நியமிக்கிறார்; ஒரு பாடலும் பதிவுசெய்யப்படுகிறது; இஸ்ரவேலின் ஒவ்வொரு கோத்திரங்களுக்கும் இறுதியான ஆசீர்வாதம் அளிக்கப்படுறது. 34-ஆம் அதிகாரம் மோசேயின் மரணத்தின் சூழ்நிலைகளைப் பற்றியது. அவர் பிஸ்கா மலையின்மேல் ஏறினார், அங்கு தேவன் அவனுக்கு அவனால் நுழைய முடியாத வாக்குறுதியளிக்கப்பட்ட கானான் தேசத்தைக் காட்டினார். மோசே தனது 120வது வயதில், ஆனால் நல்ல பார்வை மற்றும் இளமையின் வலிமையுடன், கர்த்தருடைய சந்நிதியில் மரணத்தை தழுவினார். உபாகமம் புத்தகம் இந்த பெரிய தீர்க்கதரிசி பற்றிய ஒரு குறுகிய இரங்கலுடன் முடிகிறது.*

## முன்னிழல்கள்:

உபாகமம் புத்தகத்தில் பல புதிய ஏற்பாட்டு கருப்பொருள்கள் அடங்கியுள்ளன. அவற்றில் முதன்மையானது மோசேயின் நியாயப்பிரமாணத்தை முழுமையாகக் கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியமும் அவ்வாறு செய்ய இயலாமலும் இருக்கிற நிலையை குறிப்பிடுகிறது. நியாயப்பிரமாணத்தை தொடர்ந்து மீறிய மக்களின் பாவங்களுக்கு பரிகாரம் செய்வதற்குத் தேவையான முடிவற்ற பலிகள், கிறிஸ்துவின் "அனைவருக்குமுள்ள" இறுதி பலியில் அவற்றின் நிறைவேற்றத்தைக் காண்கிறது (எபிரெயர் 10:10). சிலுவையில் அவர் செய்த பாவப்பரிகார வேலையின் காரணமாக, பாவத்திற்காக நமக்கு மேலும் பலிகள் தேவையில்லை என்பதை காண்பிக்கின்றன.

தேவன் இஸ்ரவேலரைத் தம்முடைய விசேஷித்த மக்களாகத் தேர்ந்தெடுப்பது கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்களை அவர் தேர்ந்தெடுப்பதை முன்னறிவிக்கிறது (1 பேதுரு 2:9). உபாகமம் 18:15-19-ல் மோசே மற்றொரு பெரிய தீர்க்கதரிசியைப் பற்றி தீர்க்கதரிசனமாக கூறுகிறார் — இறுதியாக வரும் மேசியாவே அந்த தீர்க்கத்தரிசி. மோசேயைப் போலவே, அவர் தெய்வீக வெளிப்பாட்டைப் பெற்று பிரசங்கிப்பார், மேலும் அவர் தம் மக்களை வழிநடத்துவார் (யோவான் 6:14; 7:40).

## நடைமுறை பயன்பாடு:

உபாகமம் புத்தகம் தேவனுடைய வார்த்தையின் முக்கியத்துவத்தை அடிக்கோடிட்டுக் காட்டுகிறது. இது நம் வாழ்வின் ஒரு முக்கிய பகுதியாகும். நாம் இனி பழைய ஏற்பாட்டுச் சட்டத்தின் கீழ் இல்லை என்றாலும், நம் வாழ்வில் தேவனுடைய சித்தத்திற்கு அடிபணிவது இன்னும் ஏற்ற பொறுப்பாக இருக்கிறது. எளிய கீழ்ப்படிதல் ஆசீர்வாதத்தைத் தருகிறது, பாவத்திற்கு அதன் சொந்த விளைவுகள் உண்டு.

நம்மில் யாரும் "நியாயப்பிரமாணத்திற்கு மேலானவர்கள்" அல்ல. தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரும் தீர்க்கதரிசியுமான மோசே

*கூட கீழ்ப்படிய வேண்டியிருந்தது. அவர் வாக்குப்பண்ணப்பட்ட தேசத்திற்குள் நுழைய அனுமதிக்கப்படாததற்குக் காரணம், அவர் கர்த்தருடைய தெளிவான கட்டளைக்கு கீழ்ப்படியாததுதான் (எண்ணாகமம் 20:13).*

*வனாந்தரத்தில் இயேசு பிசாசினால் சோதிக்கப்பட்ட காலத்தில், அவர் உபாகமம் புத்தகத்திலிருந்து மூன்று முறையும் மேற்கோள் காட்டினார் (மத்தேயு 4). அவ்வாறு அவர் செய்து, நாம் அவருக்கு எதிராக பாவம் செய்யக்கூடாதபடிக்கு தேவனுடைய வார்த்தையை நம் இருதயங்களில் மறைத்து வைப்பதன் அவசியத்தை இயேசு நமக்கு விளக்கினார் (சங்கீதம் 119:11).*

*தேவனுடைய உண்மையை இஸ்ரவேலர்கள் நினைவில் வைத்திருப்பதால், நாமும் அவ்வாறு செய்ய வேண்டும். செங்கடலைக் கடந்தது, சீனாய் மலையில் தேவனுடைய பரிசுத்த பிரசன்னம், வனாந்திரத்தில் தேவன் அவர்களுக்கு கொடுத்த மன்னாவின் ஆசீர்வாதம் ஆகியவை நமக்கும் ஒரு ஊக்கமாக இருக்க வேண்டும். முன்னோக்கிச் செல்ல ஒரு சிறந்த வழி, சிறிது நேரம் எடுத்துக்கொண்டு திரும்பிப் பார்த்து, தேவன் நமக்கு என்ன செய்திருக்கிறார் என்பதைப் பார்ப்பதாகும்.*

*அவருடைய பிள்ளைகளுடனான உறவை விரும்பும் அன்பான தேவனுடைய இருதயம் உபாகமத்தில் ஒரு அழகான சித்திரமாக உள்ளது. இஸ்ரவேலர்களை எகிப்திலிருந்து "வல்லமையுள்ள கரத்தைக்" கொண்டு அவர்களை மீட்டுக்கொண்டதற்கு அன்பு என்று கர்த்தர் பெயரிடுகிறார் (உபாகமம் 7:7-9). பாவத்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுபட்டு, சர்வ வல்லமையுள்ள தேவனால் நேசிக்கப்படுவது எவ்வளவு அற்புதமான விஷயம்!*

# 9. யோசுவாவின் புத்தகம்

***எழுத்தாளர்:***

*யோசுவாவின் புத்தகம் அதன் எழுத்தாளரை யார் என்று வெளிப்படையாக எதுவும் குறிப்பிடவில்லை. மோசேயின் ஸ்தானத்தில் இஸ்ரவேலின் தலைவராக இருந்த நூனின் குமாரனாகிய யோசுவா இந்த புத்தகத்தை எழுதியிருக்கலாம். புத்தகத்தின் பிற்பகுதி அதாவது யோசுவாவின் மரணம் மற்றும் மரணத்திற்குப் பிறகுள்ள பகுதி வேறொரு நபரால் எழுதப்பட்டிருக்கலாம். யோசுவாவின் மரணத்தைத் தொடர்ந்து பல பிரிவுகள் திருத்தப்பட்டன / தொகுக்கப்பட்டன.*

***எழுதப்பட்ட காலம்:***

*யோசுவாவின் புத்தகம் ஏறக்குறைய கி.மு. 1400 முதல் கி.மு. 1370 வரையிலுள்ள ஆண்டுகளுக்கு இடையில் எழுதப்பட்டதாகும்.*

***எழுதப்பட்டதன் நோக்கம்:***

*தேவனாகிய கர்த்தர் வாக்குறுதியளித்த தேசத்தை கைப்பற்றுவதற்கான இராணுவ தளவாடங்களையும் அவர்கள் முகாமிட்ட மற்றும் கைப்பற்றின ஸ்தலங்களையும் குறித்த ஒரு கண்ணோட்டத்தை யோசுவா புத்தகம் வழங்குகிறது. இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டதைத் தொடர்ந்து, நாற்பது ஆண்டுகாலம் வனாந்திரத்தில் அலைந்து திரிந்ததைத் தொடர்ந்து, புதிதாக உருவான தேசம் இப்போது வாக்குறுதியளிக்கப்பட்ட தேசத்திற்குள் நுழைவதற்கும், மக்களைக் கைப்பற்றுவதற்கும், பிரதேசத்தை ஆக்கிரமிப்பதற்கும் தயாராக உள்ளது. இங்கே நாம் வைத்திருக்கும் கண்ணோட்டம் பல போர்களின் சுருக்கமான மற்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட விவரங்களையும், நிலம் கைப்பற்றப்பட்ட விதம் மட்டுமல்லாமல், அது எவ்வாறு ஒவ்வொரு கோத்திரப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது என்பதையும் தருகிறது.*

***திறவுகோல் வசனங்கள்:***

*யோசுவா 1:6-9, "பலங்கொண்டு திடமனதாயிரு; இந்த ஜனத்தின் பிதாக்களுக்கு நான் கொடுப்பேன் என்று ஆணையிட்ட தேசத்தை நீ இவர்களுக்குப் பங்கிடுவாய். என் தாசனாகிய மோசே உனக்குக் கற்பித்த நியாயப்பிரமாணத்தின்படியெல்லாம் செய்யக் கவனமாயிருக்கமாத்திரம் மிகவும் பலங்கொண்டு திடமனதாயிரு; நீ போகும் இடமெல்லாம் புத்திமானாய் நடந்துகொள்ளும்படிக்கு, அதை விட்டு வலது இடதுபுறம் விலகாதிருப்பாயாக. இந்த நியாயப்பிரமாண புஸ்தகம் உன் வாயைவிட்டுப் பிரியாதிருப்பதாக; இதில் எழுதியிருக்கிறவைகளின்படியெல்லாம் நீ செய்யக் கவனமாயிருக்கும்படி, இரவும் பகலும் அதைத் தியானித்துக்கொண்டிருப்பாயாக; அப்பொழுது நீ உன் வழியை வாய்க்கப்பண்ணுவாய், அப்பொழுது புத்திமானாகவும் நடந்துகொள்ளுவாய். நான் உனக்குக் கட்டளையிடவில்லையா? பலங்கொண்டு திடமனதாயிரு; திகையாதே, கலங்காதே, நீ போகும் இடமெல்லாம் உன் தேவனாகிய கர்த்தர் உன்னோடே இருக்கிறார் என்றார்."*

*யோசுவா 24:14-15, "ஆகையால் நீங்கள் கர்த்தருக்குப் பயந்து, அவரை உத்தமமும் உண்மையுமாய்ச் சேவித்து, உங்கள் பிதாக்கள் நதிக்கு அப்புறத்திலும் எகிப்திலும் சேவித்த தேவர்களை அகற்றிவிட்டு, கர்த்தரைச் சேவியுங்கள். கர்த்தரைச் சேவிக்கிறது உங்கள் பார்வைக்கு ஆகாததாய்க் கண்டால், பின்னை யாரைச் சேவிப்பீர்கள் என்று இன்று தெரிந்து கொள்ளுங்கள்; நதிக்கு அப்புறத்தில் உங்கள் பிதாக்கள் சேவித்த தேவர்களைச் சேவிப்பீர்களோ? நீங்கள் வாசம்பண்ணுகிற தேசத்துக் குடிகளாகிய எமோரியரின் தேவர்களைச் சேவிப்பீர்களோ? நானும் என் வீட்டாருமோவென்றால், கர்த்தரையே சேவிப்போம் என்றான்."*

## சுருக்கமான திரட்டு:

*எகிப்திலிருந்து வெளியேறிய பின்னர் உள்ள இஸ்ரவேலரின் கதையை யோசுவாவின் புத்தகம் தொடர்கிறது. உபாகமத்தின் முடிவில் மோசே யோசுவாவை ஜனங்களின் தலைவராக அபிஷேகம் செய்தபின், சுமார் 20 ஆண்டுகளை இந்த புத்தகம் விவரிக்கிறது. யோசுவா புத்தகத்தின்*

*இருபத்தி நான்கு அதிகாரங்களின் பிரிவுகளை பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம்:*

*அதிகாரங்கள் **1-12:** வாக்குறுதியளிக்கப்பட்ட தேசத்தில் நுழைந்து வெற்றி பெறுதல்.*

*அதிகாரங்கள் **13-22:** வாக்குறுதியளிக்கப்பட்ட தேசத்தின் பகுதிகளை விநியோகிப்பதற்கான வழிமுறைகள்.*

*அதிகாரங்கள் **23-24:** யோசுவாவின் பிரியாவிடை முகவரி*

## முன்னிழல்கள்:

*ராகாப் என்னும் வேசியின் கதை மற்றும் இஸ்ரவேலரின் தேவன்மீது அவள் கொண்டிருந்த மிகுந்த நம்பிக்கையானது, எபிரெயர் **11:31-**ல் விசுவாச வீரர்களின் பட்டியலில் கவுரவிக்கப்பட்டவர்களுடன் அவளுக்கு ஒரு இடத்தை அளிக்கிறது. அவளுடைய கதையானது பாவிகளுக்கு தேவன் அருளும் கிருபை மற்றும் விசுவாசத்தால் மட்டுமே இரட்சிப்பு என்பதை காண்பிக்கிறது. மிக முக்கியமாக, தேவனுடைய கிருபையால் அவள் மேசியாவின் வம்ச வழியில் இருக்கும்படியாயிற்று (மத்தேயு **1:15**).*

*யோசுவா **5-**ல் கொடுக்கப்பட்டுள்ளா சம்பிரதாய சடங்குகளில் ஒன்று புதிய ஏற்பாட்டில் அதன் முழுமையான நிறைவேற்றத்தைக் காண்கிறது. **1-9** வரையிலுள்ள வசனங்கள் வனாந்தரத்தில் பிறந்தவர்கள் வாக்குப்பண்ணப்பட்ட தேசத்திற்குள் வரும்போது விருத்தசேதனம் செய்யப்பட வேண்டும் என்ற தேவனுடைய கட்டளையை விவரிக்கின்றன. அவ்வாறு செய்வதன் மூலம், தேவன் அவர்களிடமிருந்து "எகிப்தின் நிந்தையை கடந்துபோகும்படி செய்தார்", அதாவது அவர்களுடைய முந்தைய வாழ்க்கையின் பாவங்களிலிருந்து அவர்களைத் பரிசுத்தப்படுத்தினார். கொலோசெயர் **2:10-12**ல், பவுல் விசுவாசிகளை கிறிஸ்துவே அவர்களுடைய இருதயங்களில் விருத்தசேதனம் செய்ததாக விவரிக்கிறார், கிறிஸ்து இல்லாமல் உள்ள நம்முடைய முந்தைய வாழ்க்கையின் பாவ இயல்புகளை நாம் புறம்பாக்கி களைந்துள்ளோம்.*

*தற்செயலாக ஒருவரைக் கொன்றவர்கள் பழிவாங்கலுக்கு அஞ்சாமல் அங்கே தங்கி வாழக் கூடிய வகையில் தேவன் அவர்களுக்கு அடைக்கல பட்டணங்களை நிறுவினார். கிறிஸ்து நம்முடைய அடைக்கலம், "நமக்கு முன் வைக்கப்பட்ட நம்பிக்கையைப் பற்றிக்கொள்ளும்படி அடைக்கலமாய் ஓடிவந்த நமக்கு" (எபிரெயர் 6:18) என்று வாசிக்கிறோம்.*

*யோசுவாவின் புத்தகம் இளைப்பாறுதல் பற்றிய ஒரு இறையியல் கருப்பொருளைக் கொண்டுள்ளது. இஸ்ரவேலர்கள், 40 ஆண்டுகளாக வனாந்தரத்தில் அலைந்து திரிந்தபின், கானான் தேசத்தில் தேவன் அவர்களுக்காகத் தயார் செய்திருந்த இளைப்பாறுதலுக்குள் நுழைந்தார்கள். எபிரேயர் புத்தகத்தின் எழுத்தாளர் இந்த சம்பவத்தை கிறிஸ்துவில் தேவனுடைய இளைப்பாறுதலுக்குள் நுழைவதைத் தடுக்கும் அவிசுவாசம் என்ற எச்சரிக்கையை கூற இந்த சம்பவத்தைப் பயன்படுத்துகிறார் (எபிரெயர் 3:7-12).*

## *நடைமுறை பயன்பாடு:*

*யோசுவா புத்தகத்தின் முக்கிய வசனங்களில் ஒன்று 1:8 "இந்த நியாயப்பிரமாண புஸ்தகம் உன் வாயைவிட்டுப் பிரியாதிருப்பதாக; இதில் எழுதியிருக்கிறவைகளின்படியெல்லாம் நீ செய்யக் கவனமாயிருக்க வேண்டும்." பழைய ஏற்பாட்டில் ஜனங்கள் தேவனையும் அவருடைய வார்த்தையையும் எவ்வாறு மறந்துபோனார்கள், அதினிமித்தம் என்னென்ன பயங்கரமான விளைவுகளை அனுபவித்தார்கள் என்ற கதைகள் நிறைந்திருக்கின்றன. கிறிஸ்தவர்களைப் பொறுத்தவரை, தேவனுடைய வார்த்தை நம்முடைய உயிர்நாடி. நாம் அதை புறக்கணித்தால், அதற்கேற்ப நம் வாழ்க்கை பாதிக்கப்படும். ஆனால் 1:8வது வசனத்தின் கொள்கையை நாம் மனதில் கொண்டால், நாம் தேவனுடைய ராஜ்யத்தில் பூரணர்களாகவும், பயனடையக்கூடியவர்களாகவும் இருப்போம் (2 தீமோத்தேயு 3:16-17), யோசுவா 1:8-9 ல் கொடுக்கப்பட்டுள்ள தேவனுடைய வாக்குறுதிகள் நம்முடையதாகவும் இருப்பதைக் காண்போம்.*

ஒரு தகுதியான வழிகாட்டியின் நன்மைகளுக்கு யோசுவா ஒரு பிரதான எடுத்துக்காட்டு. பல ஆண்டுகளாக அவர் மோசேயுடன் நெருக்கமாக இருந்தார். மோசேயை ஏறக்குறைய குறைபாடற்ற முறையில் தேவனைப் பின்தொடர்ந்தபோது அவர் அதைப் பார்த்தார். மோசேயிடமிருந்து தனிப்பட்ட முறையில் ஜெபிக்க கற்றுக்கொண்டார். மோசேயின் முன்மாதிரி மூலம் எவ்வாறு கீழ்ப்படிய வேண்டும் என்பதை அவர் கற்றுக்கொண்டார். வாக்குப்பண்ணப்பட்ட தேசத்தின் மகிழ்ச்சிக்குள் நுழையமுடியாமல் போன மோசேயின் வாழ்க்கையில் காணும் எதிர்மறையான உதாரணத்திலிருந்து யோசுவா கற்றுக்கொண்டார். நீங்கள் உயிருடன் இருந்தால், நீங்கள் ஒரு வழிகாட்டியாக இருக்கிறீர்கள் என்று அர்த்தம். யாரோ, எங்கோ, உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சில இளைய நபர் அல்லது நீங்கள் செல்வாக்கு செலுத்தும் ஒருவர் நீங்கள் எப்படி வாழ்கிறீர்கள், எப்படி நடந்துகொள்கிறீர்கள் என்பதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். உங்களிடமிருந்து ஒருவர் கற்றுக்கொள்கிறார். உங்கள் முன்மாதிரியை யாராவது பின்பற்றுவார்கள். வழிகாட்டியால் பேசப்படும் சொற்களை விட அவரது வழிகாட்டுதல் மிக அதிகம். அவரது முழு வாழ்க்கையும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.

# *10. நியாயாதிபதிகள் புத்தகம்*

## *எழுத்தாளர்:*

*நியாயாதிபதிகள் புத்தகம் குறிப்பாக அதன் எழுத்தாளரின் பெயரைக் குறிப்பிடவில்லை. சாமுவேல் தீர்க்கதரிசி தான் நியாயாதிபதிகள் புத்தகத்தை எழுதியவர் என்பது பாரம்பரியம். நியாயாதிபதிகளின் எழுத்தாளர் நியாயாதிபதிகளின் காலத்திற்குப் பிறகு வாழ்ந்ததாக உள்ளான சான்றுகள் சுட்டிக்காட்டுகின்றன. சாமுவேல் இந்த தகுதிக்கு மிகவும் சரியாகப் பொருந்துகிறார்.*

## *எழுதப்பட்ட காலம்:*

*நியாயாதிபதிகள் புத்தகம் கி.மு. 1045 முதல் கி.மு. 1000 வரையிலுள்ள ஆண்டுகளுக்கு இடையில் எழுதப்பட்டதாகும்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*நியாயாதிபதிகள் புத்தகத்தை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்: 1) 1-16 வரையிலுள்ள அதிகாரங்கள், இஸ்ரவேலர் கானானியர்களைத் தோற்கடித்து, பெலிஸ்தியரின் தோல்வி மற்றும் சிம்சோனின் மரணத்துடன் முடிவடையும் விடுதலைப் போர்களைப் பற்றிய விவரத்தை அளிக்கிறது; 2) 17-21 வரையிலுள்ள அதிகாரங்கள் பின் இணைப்பு என குறிப்பிடப்படுகின்றன மற்றும் முந்தைய அதிகாரங்களுடன் தொடர்புபடுத்தவில்லை. இந்த அதிகாரங்கள் "இஸ்ரவேலில் ராஜா இல்லாத காலம்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது (நியாயாதிபதிகள் 17:6; 18: 1; 19:1; 21:25). ரூத் புத்தகம் முதலில் நியாயாதிபதிகள் புத்தகத்தின் ஒரு பகுதியாக இருந்தது, ஆனால் கி.பி. 450-ல் அது அதன் தனிப்பட்ட ஒரு புத்தகமாக மாற்றப்பட்டது.*

## *திறவுகோல் வசனங்கள்:*

*நியாயாதிபதிகள் 2:16-19: "கர்த்தர் நியாயாதிபதிகளை எழும்பப்பண்ணினார்; அவர்கள் கொள்ளையிடுகிறவர்களின் கைக்கு*

*அவர்களை நீங்கலாக்கி இரட்சித்தார்கள். அவர்கள் தங்கள் நியாயாதிபதிகளின் சொல்லைக் கேளாமல், அந்நிய தேவர்களைப் பின்பற்றிச் சோரம்போய், அவைகளைப் பணிந்துகொண்டார்கள்; தங்கள் பிதாக்கள் கர்த்தரின் கற்பனைகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்த வழியை அவர்கள் சீக்கிரமாய் விட்டு விலகி, அவர்கள் செய்தபடி செய்யாமற்போனார்கள். கர்த்தர் அவர்களுக்கு நியாயாதிபதிகளை எழும்பப்பண்ணுகிறபோது, கர்த்தர் நியாயாதிபதியோடேகூட இருந்து, அந்த நியாயாதிபதியின் நாட்களிலெல்லாம் அவர்கள் சத்துருக்களின் கைக்கு அவர்களை நீங்கலாக்கி இரட்சித்துவருவார்; அவர்கள் தங்களை இறுகப்பிடித்து ஒடுக்குகிறவர்களினிமித்தம் தவிக்கிறதினாலே, கர்த்தர் மனஸ்தாபப்படுவார். நியாயாதிபதி மரணமடைந்த உடனே, அவர்கள் திரும்பி, அந்நிய தேவர்களைப் பின்பற்றவும் சேவிக்கவும் பணிந்து கொள்ளவும், தங்கள் பிதாக்களைப்பார்க்கிலும் கேடாய் நடந்து, தங்கள் கிர்த்தியங்களையும் தங்கள் முரட்டாட்டமான வழியையும் விடாதிருப்பார்கள்."*

*நியாயாதிபதிகள் **10:15:** "இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரை நோக்கி: பாவஞ்செய்தோம், தேவரீர் உம்முடைய பார்வைக்கு நலமானதை எங்களுக்குச் செய்யும்; இன்றைக்குமாத்திரம் எங்களை இரட்சித்தருளும் என்று சொன்னார்கள்."*

*நியாயாதிபதிகள் **21:25:** "அந்நாட்களிலே இஸ்ரவேலில் ராஜா இல்லை; அவனவன் தன்தன் பார்வைக்குச் சரிப்போனபடி செய்துவந்தான்."*

## சுருக்கமான திரட்டு:

*யெகோவா [தேவன்] தனது பிள்ளைகளால் எவ்வளவு சாதாரணமாக ஆண்டுதோறும், நூற்றாண்டுக்குப் பின் நூற்றாண்டுகளாக எடுத்துக்கொள்ளப்பட்டார் என்பதற்கான ஒரு சோகமான கணக்கு தான் நியாயாதிபதிகள் புத்தகம். நியாயாதிபதிகள் புத்தகம் யோசுவாவின் புத்தகத்திற்கு ஒரு சோகமான வேறுபாடாகும், இது தேசத்தை கைப்பற்றுவதில் தேவனுக்கு கீழ்ப்படிந்ததற்காக இஸ்ரவேலருக்கு தேவன் அளித்த ஆசீர்வாதங்களை விவரிக்கிறது. நியாயாதிபதிகளில், அவர்கள்*

வரவிருக்கும் நியாயத்தீர்ப்பை "பட்சிக்கிற அக்கினி" என்று ஏசாயா சித்தரிக்கிறார் (ஏசாயா 1:31; 30:33).

அதே சமயம், தேவன் இரக்கம், கிருபை மற்றும் மனதுருகும் இரக்கத்தின் தேவனாக இருக்கிறார் என்பதை ஏசாயா புரிந்துகொள்கிறார் (ஏசாயா 5:25; 11:16; 14:1-2; 32:2; 40:3; 41:14-16). இஸ்ரவேல் தேசம் (யூதா மற்றும் இஸ்ரேல் இரண்டும்) தேவனுடைய கட்டளைகளுக்கு குருடாகவும் செவிடாகவும் இருக்கிறது (ஏசாயா 6:9-10; 42:7). யூதா தேசம் ஒரு திராட்சைத் தோட்டத்துடன் ஒப்பிடப்படுகிறது, அது மிதிக்கப்படும் (ஏசாயா 5:1-7). அவருடைய இரக்கம் மற்றும் இஸ்ரேலுக்கு அவர் அளித்த வாக்குறுதிகள் காரணமாக மட்டுமே, இஸ்ரேலையும் யூதாவையும் முற்றிலுமாக அழிக்க தேவன் அனுமதிக்க மாட்டார். அவர் மறுசீரமைப்பு செய்து, மன்னிப்பளித்து மற்றும் அவர்களை குணப்படுத்துவார் (43:2; 43:16-19; 52:10-12).

பழைய ஏற்பாட்டில் உள்ள வேறு எந்த ஒரு புத்தகத்தையும் விட, ஏசாயா புத்தகம் மேசியா மூலம் வரும் இரட்சிப்பில் கூடுதல் கவனம் செலுத்துகிறது. மேசியா ஒரு நாள் நீதியிலும் நியாயத்திலும் ஆட்சி செய்வார் (ஏசாயா 9:7; 32:1). மேசியாவின் ஆட்சி இஸ்ரேலுக்கு சமாதானத்தையும் பாதுகாப்பையும் தரும் (ஏசாயா 11:6-9). மேசியாவின் மூலம், இஸ்ரேல் எல்லா தேசங்களுக்கும் ஒரு வெளிச்சமாக இருக்கும் (ஏசாயா 42:6; 55:4-5). பூமியில்மேல் மேசியாவின் ராஜ்யம் (ஏசாயா 65-66 அதிகாரங்கள்) ஏசாயா புத்தகம் முழுவதும் சுட்டிக்காட்டப்படுகிற குறிக்கோளாக இருக்கிறது. மேசியாவின் ஆட்சியின் போதுதான் தேவனுடைய நீதியானது உலகிற்கு முழுமையாக வெளிப்படும்.

ஒரு முரண்பாடாக, ஏசாயா புத்தகம் மேசியாவை துன்பப்படுபவராக முன்வைக்கிறது. மேசியா பாவத்திற்காக துன்பப்படுவதை ஏசாயா 53 அதிகாரம் மிகதெளிவாக விவரிக்கிறது. அவருடைய காயங்களின் மூலம்தான் குணமடைதல் பெறப்படுகிறது. அவருடைய பாடுகளின் மூலம்தான் நம்முடைய அக்கிரமங்கள் நீக்கப்படுகின்றன. இந்த வெளிப்படையான முரண்பாடு இயேசு கிறிஸ்துவின் நபரில் முழுமையாகத் தீர்க்கப்படுகிறது. இயேசு தனது முதல் வருகையில், ஏசாயா

*53 ஆம் அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளபடி பாடுகளை அனுபவிக்கிற ஊழியராக இருந்தார். அவருடைய இரண்டாவது வருகையில், இயேசு சமாதான பிரபுவாக வென்று வெற்றிவாகை சூடி ஆளும் ராஜாதி ராஜாவாக இருப்பார் (ஏசாயா 9:6).*

## *முன்னிழல்கள்:*

*மேலே குறிப்பிட்டுள்ளபடி, ஏசாயாவின் 53-ஆம் அதிகாரம் வரவிருக்கும் மேசியாவையும், நம்முடைய பாவங்களை சுமந்து தீர்ப்பதற்காக அவர் தாங்கிக் கொள்ளும் துன்பங்களையும் விவரிக்கிறது. தேவன் தனது இறையாண்மையில், இந்த அதிகாரத்தின் ஒவ்வொரு தீர்க்கதரிசனத்தையும், பழைய ஏற்பாட்டின் மற்ற அனைத்து மேசியாவின் தீர்க்கதரிசனங்களையும் நிறைவேற்ற சிலுவையில் அறையப்பட ஒவ்வொரு விவரத்தையும் திட்டமிட்டார். 53-ஆம் அத்தியாயத்தின் சித்திரங்கள் வருத்தம் அளிக்கிற மற்றும் நிறைவேறப்போகிற தீர்க்கதரிசனமானது நற்செய்தியின் முழுமையான சித்திரத்தைக் கொண்டுள்ளது. இயேசு வெறுக்கப்பட்டு நிராகரிக்கப்பட்டார் (வச. 3; லூக்கா 13:34; யோவான் 1:10-11), தேவனால் நொறுக்கப்பட்டார் (வச .4; மத்தேயு 27:46), நம்முடைய மீறுதல்களுக்காக காயப்பட்டார் (வச. 5; யோவான் 19:34; 1 பேதுரு 2:24). அவருடைய துன்பத்தினால், அவர் நமக்குத் தகுதியான தண்டனையைச் செலுத்தி, நம்முடைய பாவங்களுக்காக இறுதியான மற்றும் பரிபூரணமான பலியானார் (வச. 5; எபிரெயர் 10:10). அவர் பாவமற்றவராக இருந்தபோதிலும், தேவன் நம்முடைய பாவத்தை அவர்மீது வைத்தார், நாம் அவருக்குள் தேவனுடைய நீதியாக மாறினோம் (2 கொரிந்தியர் 5:21).*

## *நடைமுறை பயன்பாடு:*

*ஏசாயா புத்தகம் நம்முடைய இரட்சகரை மறுக்கமுடியாத விவரங்களோடு மிகவும் விரிவாக நமக்கு முன்வைக்கிறது. அவர் மட்டும்தான் பரலோகத்திற்கு செல்லுவதற்கான ஒரே வழி, தேவனுடைய கிருபையைப் பெறுவதற்கான ஒரே வழியும் ஒரே சத்தியமும் ஒரே ஜீவனும் அவரே (யோவான் 14:6; அப்போஸ்தலர் 4:12). கிறிஸ்து நமக்குக் கொடுத்த*

*விலையை அறிந்தால், "இவ்வளவு பெரிதான இரட்சிப்பை" நாம் எவ்வாறு புறக்கணிக்கவோ அல்லது நிராகரிக்கவோ முடியும்? (எபிரெயர் **2:3**). கிறிஸ்துவிடம் வந்து அவர் அளிக்கும் இரட்சிப்பை மட்டுமே தழுவுவதற்கு பூமியில் சில, குறுகிய ஆண்டுகள் மட்டுமே உள்ளன. மரணத்திற்குப் பிறகு இரண்டாவது வாய்ப்பு இல்லை, நரகத்தில் நித்தியகாலமாக தண்டனை.*

*கிறிஸ்துவை விசுவாசிப்பதாகக் கூறும் நபர்கள் இரு முகம் கொண்டவர்கள், நயவஞ்சகர்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? ஏசாயா இஸ்ரவேல் தேசத்தை எப்படிப் பார்த்தார் என்பதற்கான சிறந்த சுருக்கம் அதுவாக இருக்கலாம். இஸ்ரவேல் நீதியின் தோற்றத்தைக் கொண்டிருந்தது, ஆனால் அது ஒரு ஒரு புறம்பான முகப்பாக மட்டுமே இருந்தது. ஏசாயா புத்தகத்தில், ஏசாயா தீர்க்கதரிசி இஸ்ரேலுக்கு வெளியில் மட்டுமல்ல, முழு இருதயத்தோடும் தேவனுக்குக் கீழ்ப்படியும்படி சவால் விடுக்கிறார். ஏசாயாவின் விருப்பம் என்னவென்றால், அவருடைய வார்த்தைகளைக் கேட்டு வாசிப்பவர்கள் துன்மார்க்கத்திலிருந்து விலகி, மன்னிப்பு மற்றும் குணப்படுத்துதலுக்காக திரும்பவேண்டும் என்பது மட்டுமேயாகும்.*

# 27. எரேமியாவின் புத்தகம்

## எழுத்தாளர்:

*எரேமியா முதல் அதிகாரம், முதலாவது வசனம் எரேமியா தீர்க்கதரிசியை இந்த எரேமியா புத்தகத்தின் எழுத்தாளராக அடையாளம் காண்பிக்கிறது.*

## எழுதப்பட்ட காலம்:

*எரேமியா புத்தகம் கி.மு. 630 முதல் கி.மு. 580 வரையிலுள்ள காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*எரேமியா புத்தகம் யூதா தேசத்திற்கு இறுதியான தீர்க்கதரிசனங்களை பதிவுசெய்கிறது, தேசம் மனந்திரும்பாவிட்டால் அழிவை எதிர்கொள்ளும் என்று கடுமையாக எச்சரிக்கிறது. எரேமியா தேசத்தை தேவனிடமாக திரும்புமாறு அழைக்கிறார். அதே சமயம், மனந்திரும்பாத விக்கிரகாராதனை மற்றும் ஒழுக்கக்கேடு காரணமாக யூதாவினுடைய அழிவின் தவிர்க்க முடியாத தன்மையையும் எரேமியா காண்கிறார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*எரேமியா 1:5, "நான் உன்னைத் தாயின் வயிற்றில் உருவாக்கு முன்னே உன்னை அறிந்தேன்; நீ கர்ப்பத்திலிருந்து வெளிப்படுமுன்னே நான் உன்னைப் பரிசுத்தம்பண்ணி, உன்னை ஜாதிகளுக்குத் தீர்க்கதரிசியாகக் கட்டளையிட்டேன் என்று சொன்னார்."*

*எரேமியா 17:9, "எல்லாவற்றைப்பார்க்கிலும் இருதயமே திருக்குள்ளதும் மகா கேடுள்ளதுமாயிருக்கிறது, அதை அறியத்தக்கவன் யார்?"*

*எரேமியா 29:10-11, "பாபிலோனிலே எழுபதுவருஷம் நிறைவேறினபின்பு நான் உங்களைச் சந்தித்து, உங்களை இவ்விடத்துக்குத் திரும்பிவரப்பண்ணும்படிக்கு உங்கள்மேல் என் நல்வார்த்தையை நிறைவேறப்பண்ணுவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார். நீங்கள்*

*எதிர்பார்த்திருக்கும் முடிவை உங்களுக்கு கொடுக்கும்படிக்கு நான் உங்கள்பேரில் நினைத்திருக்கிற நினைவுகளை அறிவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்; அவைகள் தீமைக்கல்ல, சமாதானத்துக்கேதுவான நினைவுகளே.''*

*எரேமியா **52:12-13**, ''ஐந்தாம் மாதம் பத்தாந்தேதியிலே, பாபிலோன் ராஜாவுக்கு முன்பாக நிற்கிறவனாகிய காவற்சேனாதிபதியான நேபுசராதான் எருசலேமுக்கு வந்தான்; அது நேபுகாத்நேச்சார் என்னும் ராஜா பாபிலோனை அரசாளுகிற பத்தொன்பதாம் வருஷமாயிருந்தது. அவன் கர்த்தருடைய ஆலயத்தையும், ராஜாவின் அரமனையையும், எருசலேமிலுள்ள எல்லா வீடுகளையும், ஒவ்வொரு பெரிய மனிதனுடைய வீட்டையும் அக்கினியினால் சுட்டெரித்துப்போட்டான்.''*

## சுருக்கமான திரட்டு:

*எரேமியாவின் புத்தகம் முதன்மையாக யூதாவின் மீது விக்கிரகாராதனையை முடிவுக்கு கொண்டு வருவதற்கான செய்தியாகும் (எரேமியா **7:30-34; 16:10-13; 22:9; 32:29; 44:2-3**). கடைசி நீதியுள்ள ராஜாவான யோசியா ராஜாவின் மரணத்திற்குப் பிறகு, யூத தேசம் தேவனையும் அவருடைய கட்டளைகளையும் முற்றிலும் கைவிட்டுவிட்டது. எரேமியா யூதாவை ஒரு விபச்சாரியுடன் ஒப்பிடுகிறார் (எரேமியா **2:20; 3:1-3**). விக்கிரகாராதனையை மிகக் கடுமையாக நியாயந்தீர்ப்பேன் என்று தேவன் வாக்குறுதி அளித்திருந்தார் (லேவியராகமம் **26:31-33**; உபாகமம் **28:49-68**), தேவனுடைய நியாயத்தீர்ப்பு நெருங்கிவிட்டதாக எரேமியா யூதாவிற்கு எச்சரிக்கை விடுவிக்கிறார். தேவன் யூதாவை எண்ணற்ற சந்தர்ப்பங்களில் அழிவிலிருந்து விடுவித்தார், ஆனால் அவருடைய இரக்கம் அதன் முடிவில் இருந்தது. நேபுகாத்நேச்சார் ராஜா யூதாவை வென்று அதை அவருக்குக் கீழ்ப்படுத்துவதாக எரேமியா பதிவு செய்கிறார் (எரேமியா **24:1**). மேலும் கலகத்தின் பின்னர், யூதாவையும் எருசலேமையும் அழிக்கவும் பாழாக்கவும் தேவன் நேபுகாத்நேச்சரையும் அவனுடைய பாபிலோனியப் படைகளையும் திரும்ப அழைத்து வந்தார் (எரேமியா **52**-ஆம் அதிகாரம்). இந்த மிகக் கடுமையான நியாயத்தீர்ப்பில் கூட, தேவன்*

*அவர்களுக்குக் கொடுத்த தேசத்தில் யூதாவை மீட்டெடுப்பதாக அவர் வாக்குறுதி அளிக்கிறார் (எரேமியா 29:10).*

## *முன்னிழல்கள்:*

*எரேமியா 23:5-6 வரையிலுள்ள வசனங்கள், வரவிருக்கும் மேசியாவாகிய இயேசு கிறிஸ்துவின் தீர்க்கதரிசனத்தை முன்வைக்கிறது. தீர்க்கதரிசி அவரை தாவீதின் வீட்டிலிருந்து தோன்றுகிற ஒரு கிளை என்று விவரிக்கிறார் (வச. 5; மத்தேயு 1), ஞானத்திலும் நீதியிலும் ஆட்சி செய்யும் ராஜாவாக சித்தரிக்கப்படுகிறார் (வச. 5, வெளிப்படுத்துதல் 11:15). தான் தேர்ந்தெடுத்தவர்களுக்கு இரட்சிப்பை அளிப்பதால், கிறிஸ்துவே இஸ்ரவேலால் அவளுடைய உண்மையான மேசியாவாக அங்கீகரிக்கப்படுவார் (வச. 6; ரோமர் 11:26).*

## *நடைமுறை பயன்பாடு:*

*எரேமியா தீர்க்கதரிசி கொடுப்பதற்கு மிகவும் கடினமான நியாயத்தீர்ப்பின் செய்தியைக் கொண்டிருந்தார். எரேமியா யூதா தேசத்தை நேசித்தார், ஆனால் அவர் அதனைக்காட்டிலும் கூடுதலாக மிகவும் அதிகமாக தேவனை நேசித்தார். எரேமியா தனது சொந்த மக்களுக்கு ஒரு தொடர்ச்சியான தீர்ப்பை வழங்குவது எவ்வளவு வேதனையானது, எரேமியா செய்யும்படி மற்றும் சொல்லும்படியாக தேவன் சொன்னவிகளுக்கு அவர் கீழ்ப்படிந்தார். எரேமியா யூதாவிற்காக தேவனிடமிருந்து இரக்கத்தை கோரினார், ஜெபித்தார், ஆனால் தேவன் நல்லவர், நீதியுள்ளவர், நியாயம் செய்கிறவர் என்று உறுதியாக நம்பினார். நாமும் தேவனுக்குக் கீழ்ப்படிய வேண்டும், அது கடினமாக இருக்கும்போது கூட, தேவனுடைய சித்தத்தை நம்முடைய சொந்த விருப்ப ஆசைகளை விட முக்கியமானது என்று நாம் அங்கீகரிக்க வேண்டும், மேலும் தேவன் தனது எல்லையற்ற அளவில்லாத ஞானத்திலும், முழுமையான திட்டத்திலும், அவருடைய பிள்ளைகளுக்கு மிகச் சிறந்ததைக் கொண்டு வருவார் என்றும் நம்பவேண்டும் (ரோமர் 8:28) .*

# 28. புலம்பல் புத்தகம்

## எழுத்தாளர்:

*புலம்பல் புத்தகம் அதன் எழுத்தாளரை வெளிப்படையாக யாரென்று அடையாளம் காண்பிக்கவில்லை. எரேமியா தீர்க்கதரிசி புலம்பல் புத்தகத்தை எழுதினார் என்பது பாரம்பரியம். பாபிலோனியர்கள் எருசலேமை அழித்ததற்கு இதை எழுதிய எழுத்தாளர் சாட்சியாக இருக்கிறார் என்று இந்த பார்வை கருதுகிறது. எரேமியா இந்த தகுதிக்கு மிகவும் சரியாகப் பொருந்துகிறார் (2 நாளாகமம் 35:25; 36:21-22).*

## எழுதப்பட்ட காலம்:

*புலம்பல் புத்தகம் கி.மு. 586 மற்றும் கி.மு. 575-க்கு இடையில் எழுதப்பட்டிருக்கலாம், அதாவது எருசலேமின் வீழ்ச்சியின் போது அல்லது அது நிகழ்ந்த விரைவில் எழுதப்பட்டிருக்கலாம்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*யூதா தேசத்தின் தொடர்ச்சியான மற்றும் மனந்திரும்பி வருத்தப்படாத விக்கிரக ஆராதனையின் விளைவாக, எருசலேம் நகரத்தை முற்றுகையிடவும்,தேசத்தை கொள்ளையடிக்கவும், எரிக்கவும் அழிக்கவும் தேவன் பாபிலோனியர்களை அனுமதித்தார். ஏறக்குறைய 400 ஆண்டுகளாக நின்றிருந்த சாலமோனின் தேவாலயம் எரிக்கப்பட்டு தரைமட்டமானது. இந்த நிகழ்வுகளை நேரில் கண்ட சாட்சியான எரேமியா தீர்க்கதரிசி, யூதாவிற்கும் எருசலேமுக்கும் என்ன நடந்தது என்பதற்கான புலம்பலாக இந்த புலம்பல் புத்தகத்தை எழுதினார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*புலம்பல்கள் 2:17, "கர்த்தர் தாம் நினைத்ததைச் செய்தார்; பூர்வநாட்கள் முதற்கொண்டு தாம் கட்டளையிட்ட தமது வார்த்தையை நிறைவேற்றினார்; அவர் தப்பவிடாமல் நிர்மூலமாக்கி, உன்மேல்*

*பகைஞன் சந்தோஷிக்கும்படி செய்தார்; உன் சத்துருக்களின் கொம்பை உயர்த்தினார்.”*

*புலம்பல்கள் **3:22-23,** “நாம் நிர்மூலமாகாதிருக்கிறது கர்த்தருடைய கிருபையே, அவருடைய இரக்கங்களுக்கு முடிவில்லை. அவைகள் காலைதோறும் புதியவைகள்; உமது உண்மை பெரிதாயிருக்கிறது.*

*புலம்பல்கள் **5:19-22,** “கர்த்தாவே, நீர் என்றென்றைக்கும் இருக்கிறீர்; உம்முடைய சிங்காசனம் தலைமுறை தலைமுறையாக நிலைநிற்கும். தேவரீர் என்றைக்கும் எங்களை மறந்து, நெடுங்காலமாக எங்களைக் கைவிட்டிருப்பதென்ன? கர்த்தாவே, எங்களை உம்மிடத்தில் திருப்பிக்கொள்ளும், அப்பொழுது திரும்புவோம்; பூர்வகாலத்திலிருந்தது போல எங்கள் நாட்களைப் புதியவைகளாக்கும். எங்களை முற்றிலும் வெறுத்துவிடுவீரோ? எங்கள்பேரில் கடுங்கோபமாயிருக்கிறீரே!”*

## ***சுருக்கமான திரட்டு:***

*புலம்பல் புத்தகம் ஐந்து அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அதிகாரமும் ஒரு தனி கவிதையை குறிக்கும் விதமாக இருக்கிறது. மூலமொழியாகிய எபிரேய மொழியில், வசனங்கள் அகரவரிசையில் எழுதப்பட்டதாகும், அவற்றின் ஒவ்வொரு வசனமும் எபிரேய எழுத்துக்களின் அடுத்தடுத்த எழுத்துடன் தொடங்குகின்றன. புலம்பல் புத்தகத்தில், எருசலேம் மீது தீர்ப்பைக் கொண்டுவருவதற்கான தேவனுடைய கருவி பாபிலோனியர்கள் என்பதை எரேமியா தீர்க்கதரிசி புரிந்துகொள்கிறார் (புலம்பல் **1:12-15; 2:1-8; 4:11**). தேவனுடைய கோபத்தை கொட்டுவதற்கு பாவமும் கழகமும் தான் காரணம் என்று புலம்பல்கள் தெளிவுபடுத்துகின்றன (**1:8-9; 4:13; 5:16**). துயரத்தின் போது புலம்பல் மிகவும் பொருத்தமானது, ஆனால் அது விரைவாக மனச்சோர்வு மற்றும் மனந்திரும்புதலுக்கு வழிவகுக்க வேண்டும் (புலம்பல் **3:40-42; 5:21-22**).*

## ***முன்னிழல்கள்:***

*எரேமியா தனது ஜனத்தின் மீதும் அவர்களின் நகரத்தின் மீதும் ஆழ்ந்த மற்றும் நிலையான ஆர்வம் கொண்டிருந்தமைக்காக அவர் "அழுகிற தீர்க்கதரிசி" என்று அறியப்பட்டார் (புலம்பல் 3:48-49). ஜனங்களின் பாவங்கள் குறித்தும், தேவனை அவர்கள் நிராகரித்ததாலும் இதே துக்கம் இயேசு எருசலேமை நெருங்கி ரோமர்களின் கைகளில் அது அழிவை எதிர்நோக்கியபோது வெளிப்படுத்தினார் (லூக்கா 19:41-44). யூதர்கள் தங்கள் மேசியாவை நிராகரித்ததால், தேவன் தம் ஜனங்களை தண்டிக்க ரோமர்கள் முற்றுகையைப் பயன்படுத்தினார். ஆனால், தம்முடைய பிள்ளைகளைத் தண்டிப்பதில் தேவன் மகிழ்ச்சியடையவில்லை, பாவத்திற்கான ஏற்பாடாக இயேசு கிறிஸ்துவை அவர் அளித்திருப்பது ஜனங்கள்மீது அவருக்கு இருக்கும் அவருடைய மிகுந்த இரக்கத்தைக் காட்டுகிறது. ஒரு நாள், கிறிஸ்துவின் மூலமாக, தேவன் எல்லா கண்ணீரையும் துடைப்பார் (வெளிப்படுத்துதல் 7:17).*

## ***நடைமுறை பயன்பாடு:***

*பயங்கரமான நியாயத்தீர்ப்பில் கூட, தேவன் உண்மையுள்ள மற்றும் உண்மையை காக்கிற தேவனாக இருக்கிறார் (புலம்பல் 3:24-25). நாம் அவரிடமிருந்து எவ்வளவு தூரம் விலகிச் சென்றிருந்தாலும், நாம் அவரிடம் திரும்பி அவரை இரக்கமுள்ளவராகவும் மன்னிப்பவராகவும் காணலாம் என்ற நம்பிக்கை உள்ளது (1 யோவான் 1:9). நம்முடைய தேவன் ஒரு அன்பான தேவன் (புலம்பல் 3:22), அவருடைய மிகுந்த அன்பும் இரக்கமும் காரணமாக, நம்முடைய பாவங்களில் நாம் அழிந்துபோகாமல், அவருடன் நித்தியமாக வாழும்படி அவர் தம்முடைய குமாரனை அனுப்பினார் (யோவான் 3:16). தேவனுடைய உண்மையும் (புலம்பல் 3:23) மற்றும் மீட்பும் (புலம்பல் 3:26) நமக்கு மிகுந்த நம்பிக்கையையும் ஆறுதலையும் தரும் பண்புகளாகும். அவர் அக்கறையற்ற, சலன புத்தியுள்ள ஒரு தேவன் அல்ல, ஆனால் அவரிடம் திரும்பும் அனைவரையும் அவர் விடுவிப்பார், அவருடைய தயவைப் பெற அவர்களால் எதுவும் செய்ய முடியாது என்பதை ஒப்புக்கொள்கிறார்கள், மேலும் நாம் அழிந்து போகாமல் மற்றும் நிர்மூலமாகாமல் இருக்க*

*கர்த்தருடைய இரக்கத்தைப் பெற அவரை அழைக்கிறோம் (புலம்பல் 3:22 ).*

# 29. எசேக்கியேல் புத்தகம்

## எழுத்தாளர்:

*எசேக்கியேல் தீர்க்கதரிசி இந்த புத்தகத்தை எழுதியவர் ஆகும் (எசேக்கியேல் 1:3). அவர் எரேமியா மற்றும் தானியேல் இருவருக்கும் சமகாலத்தவர் ஆகும்.*

## எழுதப்பட்ட காலம்:

*எசேக்கியேல் புத்தகம் கி.மு. 593 மற்றும் கி.மு. 565-ன் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும். அதாவது யூதர்களின் பாபிலோனிய சிறையிருப்பின்போது எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*எசேக்கியேல் மிகுந்த பாவமுள்ள மற்றும் முற்றிலும் நம்பிக்கையற்றவர்களாக இருந்த தனது தலைமுறையினருக்கு தேவனுடைய ஊழியத்தை நிறைவேற்றினார். தனது தீர்க்கதரிசன ஊழியத்தின் மூலம் அவர்களை உடனடியாக மனந்திரும்புதலுக்கும் தொலைதூர எதிர்காலத்தில் நம்பிக்கையுடனும் இருக்கும்படிக்கு கொண்டுவர முயன்றார். அவர் அதைக் கற்பித்தார்: (1) தேவன் மனித தூதுவர்கள் மூலம் செயல்படுகிறார்; (2) தோல்வி மற்றும் விரக்தியில் கூட தேவனுடைய ஜனங்கள் தேவனுடைய இறையாண்மையை உறுதிப்படுத்த வேண்டும்; (3) தேவனுடைய வார்த்தை ஒருபோதும் தோல்வியடையாது; (4) தேவன் எங்கும் நிறைந்திருக்கும் சர்வவியாபியாகும், ஆகவே அவரை எங்கும் தொழுதுகொள்ள முடியும்; (5) ஆசீர்வாதங்களைப் பெற எதிர்பார்க்கிற ஜனம் தேவனுக்குக் கீழ்ப்படிய வேண்டும்; (6) தேவனுடைய ராஜ்யம் வரும்.*

## திறவுகோல் வசனங்கள்:

*எசேக்கியேல் 2:3-6, "அவர் என்னை நோக்கி: மனுபுத்திரனே, எனக்கு விரோதமாய் எழும்பின கலகக்கார ஜாதியாகிய இஸ்ரவேல்*

*புத்திரரிடத்திற்கு நான் உன்னை அனுப்புகிறேன்; அவர்களும் அவர்கள் பிதாக்களும் இந்நாள்வரைக்கும் எனக்கு விரோதமாய்த் துரோகஞ்செய்தார்கள். அவர்கள் கடினமுகமும் முரட்டாட்ட இருதயமுமுள்ள புத்திரர்; அவர்களிடத்திற்கு நான் உன்னை அனுப்புகின்றேன்; கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை உரைக்கிறார் என்று அவர்களோடே சொல்லு. கலகவீட்டாரகிய அவர்கள் கேட்டாலும் சரி, கேளாவிட்டாலும் சரி, தங்களுக்குள்ளே ஒரு தீர்க்கதரிசி உண்டென்கிறதை அவர்கள் அறியவேண்டும். மனுபுத்திரனே; நீ அவர்களுக்குப் பயப்படவேண்டாம்; அவர்கள் வார்த்தைகளுக்கும் அஞ்சவேண்டாம்; நெரிஞ்சில்களுக்குள்ளும் முள்ளுகளுக்குள்ளும் நீ தங்கியிருந்தாலும், நீ அவர்கள் வார்த்தைகளுக்குப் பயப்படாமலும் அவர்கள் முகத்துக்குக் கலங்காமலுமிரு; அவர்கள் கலகவீட்டார்.''*

*எசேக்கியேல் **18:4**, ''இதோ, எல்லா ஆத்துமாக்களும் என்னுடையவைகள்; தகப்பனின் ஆத்துமா எப்படியோ, அப்படியே மகனின் ஆத்துமாவும் என்னுடையது; பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும்.''*

*எசேக்கியேல் **28:12-14**, ''மனுபுத்திரனே நீ தீரு ராஜாவைக்குறித்துப் புலம்பி அவனை நோக்கி: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்னவென்றால். நீ விசித்திரமாய்ச் செய்யப்பட்ட முத்திரைமோதிரம்; நீ ஞானத்தால் நிறைந்தவன்; பூரண அழகுள்ளவன். நீ தேவனுடைய தோட்டமாகிய ஏதேனில் இருந்தவன்; பத்மராகம் புஷ்பராகம், வைரம், படிகப்பச்சை, கோமேதகம், யஸ்பி, இந்திரநீலம், மரகதம், மாணிக்கம் முதலான சகவித இரத்தினங்களும் பொன்னும் உன்னை மூடிக்கொண்டிருக்கிறது சிருஷ்டிக்கப்பட்ட நாளில் உன் மேளவாத்தியங்களும் உன் நாகசுரங்களும் உன்னிடத்தில் ஆயத்தப்பட்டிருந்தது. நீ காப்பாற்றுகிறதற்காக அபிஷேகம்பண்ணப்பட்ட கேருப்; தேவனுடைய பரிசுத்த பர்வதத்தில் உன்னை வைத்தேன்; அக்கினிமயமான கற்களின் நடுவே உலாவினாய்.''*

*எசேக்கியேல்* ***33:11,*** *"கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்னவென்றால்: நான் துன்மார்க்கனுடைய மரணத்தை விரும்பாமல், துன்மார்க்கன் தன் வழியைவிட்டுத் திரும்பிப் பிழைப்பதையே விரும்புகிறேன் என்று என் ஜீவனைக்கொண்டு சொல்லுகிறேன்; இஸ்ரவேல் வம்சத்தாரே, உங்கள் பொல்லாத வழிகளைவிட்டுத் திரும்புங்கள், திரும்புங்கள்; நீங்கள் ஏன் சாகவேண்டும் என்கிறார் என்று அவர்களோடே சொல்லு."*

*எசேக்கியேல்* ***48:35,*** *"சுற்றிலும் அதின் அளவு பதினெண்ணாயிரங்கோலாகும்; அந்நாள்முதல் நகரம் யேகோவா ஷம்மா என்னும் பெயர்பெறும்."*

## சுருக்கமான திரட்டு:

*வழிதவறிய உலகத்தை நீங்கள் எவ்வாறு சமாளிக்க முடியும்? தனது வாழ்க்கையில் முப்பதாவது வயதில் ஆசாரியராக ஊழியத்தைத் தொடங்க விதிக்கப்பட்ட எசேக்கியேல், தனது தாயகத்திலிருந்து பிடுங்கப்பட்டு, இருபத்தைந்து வயதில் பாபிலோனுக்கு அணிவகுத்துச் சென்றார். ஐந்து ஆண்டுகளாக அவர் விரக்தியில் தவித்தார். முப்பது வயதில் யெகோவாவின் மகிமையின் கம்பீரமான பார்வை பாபிலோனில் இருப்பதைக் கவர்ந்தது. ஆசாரியன் / தீர்க்கதரிசி தேவன் எசேக்கியேலின் பூர்வீக நிலத்தின் குறுகிய கட்டுப்பாடுகளுடன் மட்டுப்படுத்தப்படவில்லை என்பதைக் கண்டுபிடித்தார். மாறாக, அவர் ஒரு உலகளாவிய தேவன், அவர் நபர்களையும் தேசங்களையும் கட்டளையிடுகிறார், கட்டுப்படுத்துகிறார். பாபிலோனில், தேவன் எசேக்கியேலுக்காக அவருடைய வார்த்தையை ஜனங்களுக்கு வழங்கினார். அவரது அழைப்பு அனுபவம் எசேக்கியேலை மாற்றியது. அவர் தேவனுடைய வார்த்தையில் தீவிரமாக தன்னை அர்ப்பணித்தார். சிறைபிடிக்கப்பட்டவர்களின் கசப்பான சூழ்நிலையில் அவர்களுக்கு உதவ தனிப்பட்ட முறையில் எதுவும் இல்லை என்பதை அவர் உணர்ந்தார், ஆனால் தேவனுடைய வார்த்தை அவர்களின் நிலைக்கு பேசியதாகவும், அதில் அவர்களுக்கு வெற்றியைக் கொடுக்க முடியும் என்றும் அவர் நம்பினார். தேவனுடைய*

*வார்த்தையை தம் மக்களுக்கு தெரிவிக்க எசேக்கியேல் பல்வேறு முறைகளைப் பயன்படுத்தினார். கவனத்தை ஈர்க்க எருசலேம், அடையாள நடவடிக்கைகள் மற்றும் அசாதாரண நடத்தை ஆகியவற்றை சித்தரிப்பதில் அவர் கலையைப் பயன்படுத்தினார். எருசலேமுக்கும் அதன் குடிமக்களுக்கும் தேவன் என்ன செய்வார் என்பதை நிரூபிக்க அவர் தலைமுடியையும் தாடியையும் வெட்டினார்.*

## எசேக்கியேலின் புத்தகத்தை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்:

***1-24 அதிகாரங்கள்:***

*எருசலேமின் அழிவு பற்றிய தீர்க்கதரிசனங்கள்*

***25-32 அதிகாரங்கள்:***

*அருகிலுள்ள நாடுகள் பற்றிய தேவனுடைய நியாயத்தீர்ப்பின் தீர்க்கதரிசனங்கள்*

***33 அதிகாரம்:***

*இஸ்ரவேலுக்கு மனந்திரும்புதலுக்கான கடைசி அழைப்பு*

***34-48 அதிகாரங்கள்:***

*இஸ்ரவேலின் எதிர்கால மறுசீரமைப்பு தொடர்பான தீர்க்கதரிசனங்கள்*

## முன்னிழல்கள்:

*எசேக்கியேல் **34**வது அதிகாரம் என்பது இஸ்ரவேலின் தலைவர்களை தம் ஜனங்களை மோசமாக கவனித்துக்கொள்வதற்கான பொய்யான மேய்ப்பர்கள் என்று தேவன் கண்டிக்கும் அதிகாரமாகும். இஸ்ரவேலின் ஆடுகளை பராமரிப்பதற்கு பதிலாக, அவர்கள் தங்களையே கவனித்துக் கொண்டனர். அவர்கள் நன்றாக சாப்பிட்டார்கள், நன்கு ஆடை அணிந்திருந்தார்கள், அவர்கள் வைக்கப்பட்டிருந்த மக்களால் நன்கு கவனிக்கப்பட்டார்கள் (எசேக்கியேல் **34:1-3**). இதற்கு நேர்மாறாக, ஆடுகளுக்காக தனது உயிரைக் கொடுக்கும் நல்ல மேய்ப்பன் இயேசு, மந்தையை அழிக்கும் ஓநாய்களிடமிருந்து அவர்களைப் பாதுகாக்கிறார்*

*(யோவான் 10:11-12). 34 வது அதிகாரத்தின் 4-வது வசனம், மேய்ப்பர்கள் பலவீனமானவர்கள், நோய்வாய்ப்பட்டவர்கள், காயமடைந்தவர்கள் மற்றும் இழந்தவர்கள் என ஊழியம் செய்யத் தவறியவர்களை விவரிக்கிறது. நம்முடைய ஆவிக்குரிய காயங்களை குணமாக்கும் பெரிய வைத்தியராகிய இயேசு (ஏசாயா 53:5) சிலுவையில் மரித்ததன் மூலம் நம்மை குணமாக்க வல்லவராயிருக்கிறார். இழந்ததைத் தேடுவதும் காப்பாற்றுவதும் தான் அவரின் பிரதான நோக்கமாகும் அதற்காகவே அவர் இந்த உலகிற்கு வந்தார் (லூக்கா 19:10).*

## *நடைமுறை பயன்பாடு:*

*ஆபிரகாம், மோசே மற்றும் தீர்க்கதரிசிகளின் தேவனுடனான ஒரு புதிய மற்றும் உயிருள்ள சந்திப்பில் சேர எசேக்கியேல் புத்தகம் நம்மை அழைக்கிறது. நாம் வெல்ல வேண்டும் அல்லது நாம் வெல்லப்படுவோம். எசேக்கியேல் நமக்கு சவால் விடுகிறார்: தேவனுடைய வல்லமை, அறிவு, நித்திய இருப்பு மற்றும் பரிசுத்தம் பற்றிய வாழ்க்கையை மாற்றும் பார்வையை அனுபவிக்கவும் தேவன் நம்மை வழிநடத்தட்டும்; ஒவ்வொரு மனித இதயத்திலும் இருக்கும் தீமையின் ஆழத்தையும் அர்ப்பணிப்பையும் புரிந்து கொள்ளுங்கள்; துன்மார்க்கர்களுக்கு வரும் ஆபத்தை எச்சரிப்பதற்கு தேவன் தம் ஊழியர்களை அழைத்து அறிவிக்க பொறுப்பேற்கிறார் என்பதை அங்கீகரிக்கவேண்டும்; புதிய உடன்படிக்கையை அவருடைய இரத்தத்தில் காணப்பட வேண்டும் என்று சொன்ன இயேசு கிறிஸ்துவுடன் ஒரு வாழ்க்கை உறவை அனுபவிக்கவேண்டும்.*

# 30. தானியேல் புத்தகம்

## எழுத்தாளர்:

*தானியேல் புத்தகம் அதன் எழுத்தாளராக தானியேல் தீர்க்கதரிசியை அடையாளப்படுத்துகிறது (தானியேல் 9:2; 10:2). இயேசு தானியேலை அதன் எழுத்தாளராக குறிப்பிடுகிறார் (மத்தேயு 24:15).*

## எழுதப்பட்ட காலம்:

*தானியேல் புத்தகம் கி.மு. 540 முதல் கி.மு. 530 வரையிலுள்ள காலக்கட்டத்தில் எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*கி.மு. 605-ல், பாபிலோனின் மாமன்னன் நேபுகாத்நேச்சார் யூதாவைக் கைப்பற்றி, அதன் குடிமக்கள் பலரை பாபிலோனுக்கு நாடு கடத்தியிருந்தார் — அதில் தானியேலும் கொண்டு செல்லப்பட்டார். நேபுகாத்நேச்சாரின் அரசவையில், நேபுகாத்நேச்சரைப் பின்பற்றிய பல ஆட்சியாளர்களில் தானியேலும் பணியாற்றினார். தானியேல் புத்தகம் தானியேல் தீர்க்கதரிசியின் செயல்கள், தீர்க்கதரிசனங்கள் மற்றும் தரிசனங்களை பதிவு செய்கிறது.*

## திறவுகோல் வசனங்கள்:

*தானியேல் 1:19-20, "ராஜா அவர்களோடே பேசினான்; அவர்கள் எல்லாருக்குள்ளும் தானியேல், அனனியா, மீஷாவேல், அசரியா என்பவர்களைப்போல வேறொருவரும் காணப்படவில்லை; ஆகையால் இவர்கள் ராஜசமுகத்தில் நின்றார்கள். ஞானத்துக்கும் புத்திக்கும் அடுத்த எந்த விஷயத்தில் ராஜா அவர்களைக் கேட்டு விசாரித்தானோ, அதிலே தன் ராஜ்யம் எங்குமுள்ள சகல சாஸ்திரிகளிலும் ஜோசியரிலும் அவர்களைப் பத்துமடங்கு சமர்த்தராகக் கண்டான்."*

*தானியேல் **2:31**, "ராஜாவே, நீர் ஒரு பெரிய சிலையைக்கண்டீர்; அந்தப் பெரிய சிலை மிகுந்த பிரகாசமுள்ளதாயிருந்தது; அது உமக்கு எதிரே நின்றது; அதின் ரூபம் பயங்கரமாயிருந்தது."*

*தானியேல் **3:17-18**, "நாங்கள் ஆராதிக்கிற தேவன் எங்களைத் தப்புவிக்க வல்லவராயிருக்கிறார்; அவர் எரிகிற அக்கினிச்சூளைக்கும், ராஜாவாகிய உம்முடைய கைக்கும் நீங்கலாக்கி விடுவிப்பார்; விடுவிக்காமற்போனாலும், நாங்கள் உம்முடைய தேவர்களுக்கு ஆராதனை செய்வதுமில்லை, நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்வதுமில்லை என்கிறது ராஜாவாகிய உமக்குத் தெரிந்திருக்கக்கடவது என்றார்கள்."*

*தானியேல் **4:34-35**, "அந்த நாட்கள் சென்றபின்பு, நேபுகாத்நேச்சாராகிய நான் என் கண்களை வானத்துக்கு ஏறெடுத்தேன்; என் புத்தி எனக்குத் திரும்பி வந்தது; அப்பொழுது நான் உன்னதமானவரை ஸ்தோத்திரித்து, என்றென்றைக்கும் ஜீவித்திருக்கிறவரைப் புகழ்ந்து மகிமைப்படுத்தினேன்; அவருடைய கர்த்தத்துவமே நித்திய கர்த்தத்துவம், அவருடைய ராஜ்யமே தலைமுறை தலைமுறையாக நிற்கும். பூமியின் குடிகள் எல்லாம் ஒன்றுமில்லையென்று எண்ணப்படுகிறார்கள்; அவர் தமது சித்தத்தின்படியே வானத்தின் சேனையையும் பூமியின் குடிகளையும் நடத்துகிறார், அவருடைய கையைத் தடுத்து, அவரை நோக்கி: என்ன செய்கிறீரென்று சொல்லத்தக்கவன் ஒருவனும் இல்லை என்றேன்."*

*தானியேல் **9:25-27**, "இப்போதும் நீ அறிந்து உணர்ந்துகொள்ளவேண்டியது என்னவென்றால்: எருசலேமைத் திரும்ப எடுப்பித்துக்கட்டுகிறதற்கான கட்டளை வெளிப்படுவதுமுதல், பிரபுவாகிய மேசியா வருமட்டும் ஏழு வாரமும், அறுபத்திரண்டு வாரமும் செல்லும்; அவைகளில் வீதிகளும் அலங்கங்களும் மறுபடியும் கட்டப்படும்; ஆனாலும் இடுக்கமான காலங்களில் இப்படியாகும். அந்த அறுபத்திரண்டு வாரங்களுக்குப் பின்பு மேசியா சங்கரிக்கப்படுவார்; ஆனாலும் தமக்காக அல்ல; நகரத்தையும் பரிசுத்த ஸ்தலத்தையும் வரப்போகிற பிரபுவின் ஜனங்கள் அழித்துப்போடுவார்கள்; அதின்முடிவு ஜலப்பிரவாகம்போல இருக்கும்; முடிவுபரியந்தம் யுத்தமும் நாசமும் உண்டாக*

*நியமிக்கப்பட்டது. அவர் ஒரு வாரமளவும் அநேகருக்கு உடன்படிக்கையை உறுதிப்படுத்தி, அந்த வாரம் பாதி சென்றபோது பலியையும் காணிக்கையையும் ஒழியப்பண்ணுவார்; அருவருப்பான செட்டைகளோடே பாழாக்குகிறவன் வந்து இறங்குவான், நிர்ணயிக்கப்பட்டிருக்கிற நிர்மூலம் பாழாக்குகிறவன்மேல் தீருமட்டும் சொரியும் என்றான்.''*

**சுருக்கமான திரட்டு:**

*தானியேல் புத்தகத்தை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் அதிகாரம் எருசலேம் பாபிலோனியர்களால் கைப்பற்றப்படுவதை விவரிக்கிறது. பலருடன், தானியேலும் அவரது மூன்று நண்பர்களும் பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டனர், அவர்களுடைய தைரியம் மற்றும் அவர்கள்மீது தேவனுடைய வெளிப்படையான ஆசீர்வாதம் காரணமாக, அவர்கள் ராஜாவின் சேவையில் ''பதவி உயர்வு'' பெற்றனர் (தானியேல் 1: 17-20).*

*2-7 வரையிலுள்ள அதிகாரங்கள், நேபுகாத்நேச்சார் ஒரு சொப்பனம் கண்டதை பதிவு செய்கிறது. அந்த சொப்பனத்தை தானியேல் மட்டுமே சரியாக விளக்க முடியும் என்பதையும் விவரிக்கிறது. ஒரு பெரிய சிலை பற்றிய நேபுகாத்நேச்சாரின் சொப்பனம் இனிவரும் எதிர்காலத்தில் எழும்பப்போகிற ராஜ்யங்களைக் குறிக்கிறது. நேபுகாத்நேச்சார் தன்னைப் பற்றிய ஒரு பெரிய சிலையை உருவாக்கி, அதை வணங்கும்படி அனைவரையும் கட்டாயப்படுத்துகிறார். சாத்ராக், மேஷாக், மற்றும் ஆபேத்நேகோ என்னும் யூத வாலிபர்கள் மறுத்ததினால், எரிகிற அக்கினிச் சுவாலைக்குள் வீசப்பட்டாலும் அற்புதமாக தேவனால் காப்பாற்றப்பட்டனர். நேபுகாத்நேச்சார் தனது பெருமைக்காக தேவனால் தண்டிக்கப்படுகிறார், ஆனால் தேவனுடைய இறையாண்மையை அங்கீகரித்து ஒப்புக்கொண்டவுடன் பின்னர் மீட்டெடுக்கப்படுகிறார்.*

*எருசலேமில் உள்ள ஆலயத்திலிருந்து எடுக்கப்பட்ட பொருட்களை நேபுகாத்நேச்சரின் மகன் பெல்ஷாத்சார் தவறாகப் பயன்படுத்துவதையும், தேவனிடமிருந்து ஒரு எச்சரிப்பின் செய்தியைப் பெறுவதையும் தானியேல்*

*5-ஆம் அதிகாரம் பதிவுசெய்கிறது. தேவனிடமிருந்து வரும் நியாயத்தீர்ப்பின் செய்தியை தானியேல் மட்டுமே அந்த எழுத்தை விளக்க முடியும்படியாயிற்று. ராஜாவினிடத்தில் ஜெபம் செய்ய மறுத்ததற்காக தானியேல் சிங்கங்களின் குகையில் வீசப்படுகிறார், ஆனால் அதிசயமாக தேவனால் காப்பாற்றப்படுகிறார். தேவன் தானியேலுக்கு தரிசனத்தில் நான்கு மிருகங்களைக் காண்பிக்கிறார். நான்கு மிருகங்களும் பாபிலோன், மேதிய-பெர்சியா, கிரேக்கம் மற்றும் ரோமாபுரி ஆகிய ராஜ்யங்களைக் குறிக்கின்றன.*

*8-12 வரையிலுள்ள அதிகாரங்களில், இரண்டு கொம்புகளுள்ள ஒரு ஆட்டுக்கடா, ஒரு வெள்ளாட்டுக்கடா மற்றும் பல கொம்புகள் சம்பந்தப்பட்ட ஒரு தரிசனம் கொடுக்கப்பட்டுள்ளது - இது எதிர்கால ராஜ்யங்களையும் அவற்றின் ராஜாக்களையும் குறிக்கிறது. தானியேல் 9 ஆம் அதிகாரம் தானியேலின் "எழுபது வாரங்கள்" குறித்த தீர்க்கதரிசனத்தை பதிவு செய்கிறது. மேசியா எப்போது வந்து சங்கரிக்கப்படுவார் என்பதற்கான துல்லியமான காலக்கெடுவை தேவன் தானியேலுக்கு கொடுத்தார். இஸ்ரவேலுடன் ஏழு ஆண்டுகள் உடன்படிக்கை செய்து பின்னர் மூன்றரை ஆண்டுகளுக்குப் பிறகு அதை முறித்துக் கொள்ளும் ஒரு எதிர்கால ராஜாவினைப் பற்றியும் இந்த தீர்க்கதரிசனம் குறிப்பிடுகிறது. இந்த பெரிய தரிசனத்திற்குப் பிறகு தானியேல் ஒரு தேவதூதனால் பார்வையிடப்பட்டு பலப்படுத்தப்படுகிறார், தேவதூதன் அந்த தரிசனத்தை தானியேலுக்கு மிக விரிவாக விளக்குகிறார்.*

## *முன்னிழல்கள்:*

*எரிகிற அக்கினிச்சூளை மற்றும் சிங்கங்களின் குகையிலுள்ள தானியேல் சம்பவங்களில் கிறிஸ்துவால் வழங்கப்பட்ட இரட்சிப்பின் முன்னறிவிப்பை நாம் காண்கிறோம். மூன்று மனிதர்களும் தேவன் ஒரு இரட்சிக்கும்/விடுவிக்கும் தேவன் என்று அறிவிக்கிறார்கள், அவர் தப்பிக்க ஒரு வழியை வழங்க முடியும் என்றும் உறுதியாக நம்புகிறார்கள் (தானியேல் 3:17). அதேபோல், நம்முடைய பாவங்களுக்காக இயேசுவை அனுப்புவதன் மூலம், நரகத்தின் நெருப்பிலிருந்து தப்பிக்க தேவன் ஒரு*

வழியை வழங்கியுள்ளார் (1 பேதுரு 3:18). தானியேலின் விஷயத்தில், சிங்கங்களின் வாயை மூடுவதற்கு தேவன் ஒரு தேவதூதனை வழங்கினார், மேலும் தானியேலை மரணத்திலிருந்து காப்பாற்றினார். நம்மை பட்சிக்கும் அக்கினியாக அச்சுறுத்தும் பாவத்தின் ஆபத்துகளிலிருந்து நம்மை விடுவிக்கும் நம்முடைய ஏற்பாடாக இயேசு கிறிஸ்து இருக்கிறார்.

கடைசிக் காலங்களைப் பற்றிய தானியேலின் தரிசனம் இஸ்ரவேலின் மேசியாவை சித்தரிக்கிறது, அவர்களால் பலர் கழுவப்பட்டு பரிசுத்தமாவார்கள் (தானியேல் 12:10). அவர் நம்முடைய நீதியாக இருக்கிறார் (1 பேதுரு 5:21) நம்முடைய பாவங்கள் இரத்தாம்பரம்போல் சிவந்திருந்தாலும் அது கழுவப்பட்டு வெண்பனியைப் போல வெண்மையாக இருப்போம் (ஏசாயா 1:18).

## நடைமுறை பயன்பாடு:

சாத்ராக், மேஷாக், மற்றும் ஆபேத்நேகோவைப் போலவே, நாம் எப்போதும் சரியானது எது என்று அறிந்தவற்றிற்காக தைரியமாக நிற்க வேண்டும். நம்மீது வரக்கூடிய எந்த தண்டனையையும் விட தேவன் பெரியவர். தேவன் நம்மை விடுவிக்க விரும்புகிறாரா இல்லையா என்பதல்லாமல், அவர் எப்போதும் நம் நம்பிக்கைக்கு தகுதியானவர் என்பதை கருத்தில் கொள்ளவேண்டும். நமக்கு எது சிறந்தது என்பதை தேவன் நன்கு அறிவார், மேலும் அவரை நம்பி அவருக்குக் கீழ்ப்படிபவர்களை அவர் கனம்பண்ணுகிறார்/கௌரவிக்கிறார்.

தேவனுக்கு ஒரு திட்டம் உள்ளது, அவருடைய திட்டம் சிக்கலான விவரங்களுக்குள் ஒளிந்து உள்ளது. தேவன் யாவற்றையும் அறிந்திருக்கிறார், அவர் எதிர்காலத்தைக் கட்டுப்படுத்துகிறார். தேவன் முன்னுரைத்த அனைத்தும் அவர் உரைத்தபடியே உண்மையாகிவிட்டன. ஆகவே, தேவன் அறிவித்தபடியே எதிர்காலத்திற்காக அவர் முன்னறிவித்த விஷயங்கள் ஒரு நாள் நிகழும் என்று நாம் உறுதியாக நம்ப வேண்டும்.

# *31. ஓசியா புத்தகம்*

## *எழுத்தாளர்:*

*ஓசியா 1:1, புத்தகத்தின் எழுத்தாளரை ஓசியா தீர்க்கதரிசி என்று அடையாளப்படுத்துகிறது. தேவனுடைய பிள்ளைகளுக்கும் உலகத்துக்கும் அவர் அளித்த தீர்க்கதரிசன செய்திகளைப் பற்றிய ஓசியா தனிப்பட்ட கணக்கு குறிப்பிடப்பட்டுள்ளது. ஓசியா இஸ்ரேலின் ஒரே தீர்க்கதரிசியாகும், அவருடைய வாழ்க்கையின் பிற்காலங்களில் பதிவு செய்யப்பட்டதும் நமக்கு கிடைக்கப்பெற்ற எழுதப்பட்ட தீர்க்கதரிசனங்களுமாகும்.*

## *எழுதப்பட்ட காலம்:*

*பெயேரியின் குமாரனாகிய ஓசியா கி.மு. 785 முதல் கி.மு. 725 வரையிலுள்ள காலக்கட்டத்தில் தீர்க்கதரிசனம் உரைத்தார். ஓசியாவின் புத்தகம் கி.மு. 755 முதல் 725 கி.மு. வரையிலுள்ள காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*நம்முடைய தேவன் ஒரு அன்பான தேவன் என்பதை இஸ்ரவேலர்களுக்கும் நமக்கும் நினைவூட்டுவதற்காக ஓசியா இந்த புத்தகத்தை எழுதினார் — அதாவது அவருடைய உடன்படிக்கை ஜனங்களுக்கு அவர் அளித்த வாக்கு நிலையானது. இஸ்ரவேல் தொடர்ந்து பொய்யான தெய்வங்களுக்கு நேராகத் திரும்பினாலும், தேவனுடைய உறுதியான அன்பு விசுவாசமற்ற மனைவியின் மீதுள்ள கணவனின் நீடித்த அன்பினால் சித்தரிக்கப்படுகிறது. தேவனுடைய அன்பிற்கு தங்கள் முதுகைத் திருப்பிக் காண்பிப்பவர்களுக்கு ஓசியாவின் செய்தி ஒரு எச்சரிக்கையாகும். ஓசியா மற்றும் கோமேரின் திருமண உறவின் அடையாள விளக்கக்காட்சியின் மூலம், தேவனைவிட்டுப் பிரிந்து விக்கிரகாராதனை செய்யும் இஸ்ரவேல் தேசத்தின் மீதான தேவனுடைய அன்பானது, பாவம், நியாயத்தீர்ப்பு மற்றும் மன்னிக்கும் அன்பு ஆகிய கருப்பொருள்களில் ஒரு வளமான உருவகத்தில் காட்டப்படுகிறது.*

## திறவுகோல் வசனங்கள்:

*ஓசியா* ***1:2,*** *"கர்த்தர் ஓசியாவைக்கொண்டு உரைக்கத்தொடங்கினபோது, கர்த்தர் ஓசியாவை நோக்கி: நீ போய், ஒரு சோர ஸ்திரீயையும் சோரப்பிள்ளைகளையும் உன்னிடமாகச் சேர்த்துக்கொள்; தேசம் கர்த்தரை விட்டு விலகிச் சோரம்போயிற்று என்றார்."*

*ஓசியா* ***2:23,*** *"நான் அவளை எனக்கென்று பூமியிலே விதைத்து, இரக்கம் பெறாதிருந்தவளுக்கு இரங்குவேன்; என் ஜனமல்லாதிருந்தவர்களை நோக்கி நீ என் ஜனமென்று சொல்லுவேன்; அவர்கள் என் தேவனே என்பார்கள் என்றார்."*

*ஓசியா* ***6:6,*** *"பலியை அல்ல இரக்கத்தையும், தகனபலிகளைப்பார்க்கிலும் தேவனை அறிகிற அறிவையும், விரும்புகிறேன்."*

*ஓசியா* ***14:2-4,*** *"வார்த்தைகளைக்கொண்டு கர்த்தரிடத்தில் திரும்புங்கள்; அவரை நோக்கி: தேவரீர் எல்லா அக்கிரமத்தையும் நீக்கி, எங்களைத் தயவாய் அங்கீகரித்தருளும்; அப்பொழுது நாங்கள் எங்கள் உதடுகளின் காளைகளைச் செலுத்துவோம். அசீரியா எங்களை இரட்சிப்பதில்லை; நாங்கள் குதிரைகளின்மேல் ஏறமாட்டோம்; எங்கள் கைகளின் கிரியையைப்பார்த்து: நீங்கள் எங்கள் தேவர்களென்று இனிச் சொல்லமாட்டோம்; திக்கற்றவன் உம்மிடத்தில் இரக்கம்பெறுகிறான் என்று சொல்லுங்கள். நான் அவர்கள் சீர்கேட்டைக் குணமாக்குவேன்; அவர்களை மனப்பூர்வமாய்ச் சிநேகிப்பேன்; என் கோபம் அவர்களைவிட்டு நீங்கிற்று."*

## சுருக்கமான திரட்டு:

*ஓசியாவின் புத்தகத்தை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம்: (1) ஓசியா* ***1:1-3:5*** *வரையிலுள்ள பகுதியில், விபச்சாரம் செய்கிற மனைவியையும் உண்மையுள்ள அவளது கணவனையும் விவரிக்கிறது, இது விக்கிரகாராதனை மூலம் தேவனை விட்டு விலகி இஸ்ரவேல் செய்த துரோகத்தின் அடையாளமாகும், மற்றும் (2) ஓசியா* ***3:6-14:9***

வரையிலுள்ள பகுதியில், இஸ்ரவேலின், குறிப்பாக சமாரியாவின், சிலைகளை வழிபடுவதற்கும், இறுதியில் மீட்டெடுப்பதற்கும் கண்டனம் தெரிவிக்கிறது.

புத்தகத்தின் முதல் பகுதியில் மூன்று தனித்துவமான கவிதைகள் உள்ளன, தேவனுடைய பிள்ளைகள் விக்கிரகாராதனைக்கு காலத்திற்கு காலம் எப்படி திரும்பிச் சென்றார்கள் என்பதை விளக்குகிறது. கோமேரை திருமணம் செய்ய தேவன் ஓசியாவிடம் கட்டளையிடுகிறார், ஆனால் அவள் அவனுக்கு மூன்று குழந்தைகளைப் பெற்ற பிறகு, ஓசியாவைவிட்டுப் பிரிந்து தன் காதலர்களிடம்/காமுகர்களிடம் செல்கிறாள். முதல் அதிகாரத்தில் இந்த அடையாள குறியீட்டு முக்கியத்துவத்தை தெளிவாகக் காணலாம்,அதாவது ஓசியா இஸ்ரேலின் நடவடிக்கைகளை ஒரு திருமண பந்தத்திலிருந்து வழிவிலகி ஒரு விபச்சாரியாக மாற்றுவதோடு ஒப்பிடுகிறார். இரண்டாவது பிரிவில் ஓசியா இஸ்ரவேலரைக் கண்டிக்கிறார், ஆனால் அதைத் தொடர்ந்து வாக்குறுதிகள் மற்றும் தேவனுடைய இரக்கங்களும் அருளப்படுகின்றன.

ஓசியாவின் புத்தகம் தேவனுடையப் பிள்ளைகளின் மேல் இடைவிடாத தேவனின் அன்பினைக் குறித்த தீர்க்கதரிசன கணக்கு விவரமாகும். காலத்தின் தொடக்கத்திலிருந்தே தேவனுடைய நன்றியற்ற மற்றும் தகுதியற்ற படைப்பானது அவருடைய அன்பு, அருள் மற்றும் இரக்கம் ஆகியவற்றை ஏற்றுக்கொண்டாலும், அதன் துன்மார்க்கத்திலிருந்து விலகி இருக்க முடியவில்லை.

ஓசியாவின் கடைசி பகுதி, மனந்திரும்பிய இருதயத்தோடு அவரிடம் திரும்பிச் செல்லும்போது தேவனுடைய அன்பு அவருடைய பிள்ளைகளை எவ்வாறு மீட்கிறது என்பதைக் காட்டுகிறது. ஓசியாவின் தீர்க்கதரிசன செய்தி எதிர்காலத்தில் அதாவது 700 ஆண்டுகளுக்குப்பிறகு வரவிருக்கிற இஸ்ரவேலின் மேசியாவினுடைய வருகையை முன்னறிவிக்கிறது. புதிய ஏற்பாட்டில் ஓசியாவின் புத்தகம் பெரும்பாலும் மேற்கோள் காட்டப்படுகிறது.

***முன்னிழல்கள்:***

ஓசியா **2:23**-ல், புறஜாதியாரை [யூதரல்லாதவர்களை] அவருடைய பிள்ளைகளாக சேர்க்கும்படி தேவனிடமிருந்து வந்த அற்புதமான தீர்க்கதரிசன செய்தியை கொண்டுள்ளது, ரோமர் **9:25** மற்றும் **1** பேதுரு **2:10** ஆகியவற்றிலும் இந்த செய்தியானது பதிவு செய்யப்பட்டுள்ளது. புறஜாதியார் முதலில் "தேவனுடைய ஜனங்கள்" அல்ல, ஆனால் அவருடைய இரக்கம் மற்றும் கிருபையின் மூலம் அவர் இயேசு கிறிஸ்துவை ஈவாக வழங்கியுள்ளார், அவர்மீதுள்ள விசுவாசத்தினால் நாம் அவருடைய ஜனமாகிய இஸ்ரவேலர்களின் மரத்தில் ஒட்டப்படுகிறோம் (ரோமர் **11:11-18**). இது திருச்சபையைப் பற்றிய ஒரு அற்புதமான உண்மை, இது "இரகசியம்" என்று அழைக்கப்படுகிறது, ஏனென்றால் கிறிஸ்துவுக்கு முன்பு, தேவனுடைய ஜனங்கள் யூதர்களாக மட்டுமே கருதப்பட்டனர். கிறிஸ்து வந்தபோது, "புறஜாதியாருடைய நிறைவு உண்டாகும்வரைக்கும் இஸ்ரவேலரிலொரு பங்குக்குக் கடினமான மனதுண்டாயிருக்கும்" (ரோமர் **11:25**) என்று வாசிக்கிறோம்.

## நடைமுறை பயன்பாடு:

ஓசியா புத்தகம் தேவனுடைய ஜனங்கள் மீதுள்ள அவரது நிபந்தனையற்ற அன்பை உறுதிப்படுத்துகிறது. ஆனால், தேவன் தனது பிள்ளைகளின் செயல்களால் எவ்வாறு அவமதிக்கப்படுகிறார், கோபப்படுகிறார் என்பதற்கான ஒரு சித்திரமாகவும் இது இருக்கிறது. அளவில்லா அன்பும், இரக்கமும், கிருபையும் பெற்றுக்கொண்ட ஒரு பிள்ளை தனது தந்தையை இவ்வளவு அவமதிப்புடன் எப்படி நடத்த முடியும்? ஆனாலும், பல நூற்றாண்டுகளாக நாம் அதைச் செய்துகொண்டுதான் இருக்கிறோம். இஸ்ரவேலர்கள் எவ்வாறு தேவனுக்கு தங்கள் முதுகை திருப்பி காண்பித்தார்கள் என்பதை நாம் கருத்தில் கொள்ளும்போது, அதே இஸ்ரவேலரின் பிரதிபலிப்பைக் காண நமக்கு முன்னால் இருக்கும் கண்ணாடியைத் தவிர வேறு எதையும் நாம் பார்க்க வேண்டியதில்லை.

தேவன் நம் ஒவ்வொருவருக்கும் எவ்வளவு செய்திருக்கிறார் என்பதை நினைவில் கொள்வதன் மூலம் மட்டுமே, நாம் தகுதியான நரகத்திற்குப் பதிலாக மகிமையில் நித்திய ஜீவனைக் கொடுக்கக்கூடியவரை நிராகரிப்பதைத் தவிர்க்க முடியும். நம்முடைய சிருஷ்டிகரை மதிக்க நாம்

*கற்றுக்கொள்வது மிகவும் அவசியம். நாம் தவறு செய்யும் போது, துக்கப்படுகிற இருதயமும் மனந்திரும்புதலின் வாக்குறுதியும் இருந்தால், தேவன் மீண்டும் நமக்கு ஒருபோதும் அழியாத நிலையான அன்பைக் காண்பிப்பார் என்று ஓசியாவின் புத்தகம் நமக்குக் காண்பிக்கிறது (1 யோவான் 1:9).*

# 32. யோவேலின் புத்தகம்

## எழுத்தாளர்:

*யோவேலின் புத்தகம் அதன் எழுத்தாளரை தீர்க்கதரிசியாகிய யோவேல் தான் என்று கூறுகிறது (ஜோயல் 1:1).*

## எழுதப்பட்ட காலம்:

*யோவேலின் புத்தகம் கி.மு. 835 முதல் கி.மு. 800 வரையிலுள்ள காலங்களின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*புத்தகத்தின் அமைப்பான யூதா, வெட்டுக்கிளிகளின் பரந்த கூட்டத்தால் அழிக்கப்படுகிறது. வெட்டுக்கிளிகளின் இந்த படையெடுப்பு தானியங்கள், திராட்சைத் தோட்டங்கள், வயல்கள் மற்றும் மரங்கள் போன்ற அனைத்தையும் அழிக்கிறது. வெட்டுக்கிளிகளைப் போல அணிவகுத்துச் செல்லும் மனித இராணுவத்தை யோவேல் உருவக அடையாளமாக விவரிக்கிறார், இவை அனைத்தையும் தனது பாவங்களுக்காக தேசத்திற்கு எதிராக வரும் தெய்வீக நியாயத்தீர்ப்பாக கருதுகிறார். புத்தகம் இரண்டு முக்கிய நிகழ்வுகளால் சிறப்பிக்கப்படுகிறது. ஒன்று வெட்டுக்கிளிகளின் படையெடுப்பு, மற்றொன்று ஆவியானவரின் வெளிப்பாடு. இதன் ஆரம்ப நிறைவேறுதல் பெந்தெகொஸ்தே நாளில் நடந்ததாக அப்போஸ்தலர் 2-ல் பேதுரு மேற்கோள் காட்டியுள்ளார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*யோவேல் 1:4, “பச்சைப்புழு விட்டதை வெட்டுக்கிளி தின்றது; வெட்டுக்கிளி விட்டதைப் பச்சைக்கிளி தின்றது; பச்சைக்கிளி விட்டதை முசுக்கட்டைப்பூச்சி தின்றது.”*

*யோவேல் 2:25, “நான் உங்களிடத்தில் அனுப்பின என் பெரிய சேனையாகிய வெட்டுக்கிளிகளும், பச்சைக்கிளிகளும், முசுக்கட்டைப்*

*பூச்சிகளும், பச்சைப் புழுக்களும் பட்சித்த வருஷங்களின் விளைவை உங்களுக்குத் திரும்ப அளிப்பேன்.''*

*யோவேல் **2:28**, ''அதற்குப் பின்பு நான் மாம்சமான யாவர்மேலும் என் ஆவியை ஊற்றுவேன்; அப்பொழுது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்; உங்கள் மூப்பர் சொப்பனங்களையும், உங்கள் வாலிபர் தரிசனங்களையும் காண்பார்கள்.''*

## சுருக்கமான திரட்டு:

*வெட்டுக்கிளிகளின் கொடூரமான வாதையால் நிலம் முழுவதும் கடுமையான பஞ்சத்தைத் தொடர்ந்து சந்தித்தது. யூதாவிற்கு எச்சரிக்கை வார்த்தைகளை அனுப்ப யோவேல் இந்த நிகழ்வுகளை வினையூக்கியாக பயன்படுத்துகிறார். ஜனங்கள் விரைவாகவும் முழுமையாகவும் மனந்திரும்பாவிட்டால், இயற்கை கூறுகளைப் போலவே எதிரிப் படைகளும் தேசத்தை விழுங்கிவிடும் என்று எச்சரிக்கிறார். தேவனுடைய மன்னிப்பைப் பெறும்படிக்கு தங்களைத் தாங்களே உபவாசித்து தேவனுக்கு முன்பாக தாழ்த்தும்படிக்கு யோவேல் எல்லா ஜனத்திற்கும், தேசத்தின் ஆசாரியர்களுக்கும் வேண்டுகோள் விடுக்கின்றார். அவர்கள் பதிலளித்தால், தேசத்திற்கு புதுப்பிக்கப்பட்ட வஸ்துக்கள் மற்றும் ஆவிக்குரிய ஆசீர்வாதங்கள் இருக்கும். ஆனால் கர்த்தருடைய நாள் வருகிறது. இந்த நேரத்தில் அனைத்து தேசங்களும் அவருடைய நியாயத்தீர்ப்பைப் பெறுவதால், பயங்கரமான வெட்டுக்கிளிகள் ஒப்பிடுகையில் பித்தலாட்டங்களாகத் தோன்றும்.*

*யோவேல் புத்தகத்தின் முக்கிய கருப்பொருள் கர்த்தருடைய நாள், தேவனுடைய கோபம் மற்றும் நியாயத்தீர்ப்பின் நாள் ஆகியவைகளாகும். தேவனுடைய கோபம், வல்லமை மற்றும் பரிசுத்தத்தன்மை ஆகியவற்றின் பண்புகளை வெளிப்படுத்தும் நாள் இதுவாகும், அவருடைய எதிரிகளுக்கு இது ஒரு திகிலூட்டும் நாளுமாகும். முதல் அதிகாரத்தில், தேசத்தின் மீது வெட்டுக்கிளிகளின் படையெடுப்பால் கர்த்தருடைய நாள் வரலாற்று ரீதியாக அனுபவிக்கப்படுகிறது. **2:1-17** வரையிலுள்ள வேதபாகம், இடைக்கால அதிகாரமாகும், அதாவது இதில் யோவேல் தீர்க்கதரிசி*

*வெட்டுக்கிளிகளின் வாதை மற்றும் பஞ்சத்தின் வறட்சியின் உருவகத்தை மனந்திரும்புதலுக்கான அழைப்பைப் புதுப்பிக்க பயன்படுத்துகிறார். **2:18-3:21** வரையிலுள்ள வேதபாகம், கர்த்தருடைய நாளை இனிச்சம்பவிக்கப்போகிற எதிர்கால சொற்களில் விவரிக்கிறது மற்றும் சரீரப் பிரகாரமான மறுசீரமைப்பு **(2:21-27)**, ஆவிக்குரிய மறுசீரமைப்பு **(2:28-32)** மற்றும் தேசிய மறுசீரமைப்பு **(3:1-21)** ஆகியவை அடங்கியுள்ளன.*

## ***முன்னிழல்கள்:***

*பழைய ஏற்பாடு பாவத்திற்கான நியாயத்தீர்ப்பைப் பற்றி பேசும்போதெல்லாம், அது தனிநபராகவோ அல்லது தேசிய பாவமாகவோ இருந்தாலும், இயேசு கிறிஸ்துவின் வருகையானது அதில் முன்னறிவிக்கப்படுகிறது. பழைய ஏற்பாட்டின் தீர்க்கதரிசிகள் மனந்திரும்பும்படி இஸ்ரவேலை தொடர்ந்து எச்சரித்தனர், ஆனால் அவர்கள் அவ்வாறு செய்தபோதும், அவர்களின் மனந்திரும்புதல் நியாயப்பிரமாண சட்டத்தைக் கடைப்பிடிப்பதற்கும் அதன் செயல்களுக்கும் மட்டுப்படுத்தப்பட்டது. அவர்களுடைய ஆலய பலிகள் இறுதியாக செலுத்தப்படப்போகிற பலியின் நிழலாக இருந்தன, அவை எல்லா நேரத்திற்கும் ஒரேஒரு முறை வழங்கப்பட்டன, அது சிலுவையில் நிறைவேற்றப்பட்டது (எபிரெயர் **10:10**). கர்த்தருடைய நாளில் வரும் தேவனுடைய கடைசி நியாயத்தீர்ப்பு "பெரியதும் பயங்கரமானது" என்று யோவேல் நமக்குச் சொல்லுகிறார். அதை யார் தாங்க முடியும்? " (யோவேல் **2:11**). பதில், நம்மால், அத்தகைய தருணத்தை ஒருபோதும் தாங்க முடியாது என்பதேயாகும். ஆனால் நம்முடைய பாவங்களுக்கு பரிகாரம் செய்வதற்காக கிறிஸ்துவில் விசுவாசம் வைத்திருந்தால், நியாயத்தீர்ப்பு நாளுக்கு நாம் பயப்பட ஒன்றுமில்லை/தேவையில்லை.*

## ***நடைமுறை பயன்பாடு:***

*மனந்திரும்புதல் இல்லாமல், நியாயத்தீர்ப்பு கடுமையானதாகவும், முழுமையானதாகவும், உறுதியாகவும் இருக்கும். நம்முடைய நம்பிக்கை விசுவாசம் நம்முடைய உடைமைகளில் இருக்கக்கூடாது, மாறாக*

*நம்முடைய தேவனாகிய கர்த்தரிடத்தில் இருக்க வேண்டும். தேவன் சில சமயங்களில் இயற்கையையோ, துக்கத்தையோ அல்லது பிற பொதுவான நிகழ்வுகளையோ நம்மை அவரிடம் நெருங்கி வரவழைப்பதற்காக பயன்படுத்தலாம். ஆனால் அவருடைய இரக்கத்திலும் கிருபையிலும், நம்முடைய இரட்சிப்பிற்கான உறுதியான திட்டத்தை அவர் வழங்கியுள்ளார் — அதுதான் இயேசு கிறிஸ்து என்னும் நம்முடைய இரட்சகர், நம்முடைய பாவங்களுக்காக சிலுவையில் அறையப்பட்டு, அவருடைய அவருடைய பரிபூரண நீதிக்காக நம்முடைய பாவத்தை தம்மேல் எடுத்துக்கொண்டார் (2 கொரிந்தியர் 5:21). இழக்க நேரமில்லை. தேவனுடைய நியாயத்தீர்ப்பு இரவில் வருகிற ஒரு திருடனைப்போல சீக்கிரமாக விரைவாக வரும் (1 தெசலோனிக்கேயர் 5:2), நாம் அதற்கு தயாராக இருக்க வேண்டும். இன்றே இரட்சிப்பின் நாள் (2 கொரிந்தியர் 6:2). "கர்த்தரைக் கண்டடையத்தக்க சமயத்தில் அவரைத் தேடுங்கள்; அவர் சமீபமாயிருக்கையில் அவரை நோக்கிக் கூப்பிடுங்கள். துன்மார்க்கன் தன் வழியையும், அக்கிரமக்காரன் தன் நினைவுகளையும்விட்டு, கர்த்தரிடத்தில் திரும்பக்கடவன்; அவர் அவன்மேல் மனதுருகுவார்; நம்முடைய தேவனிடத்திற்கே திரும்பக்கடவன்; அவர் மன்னிக்கிறதற்குத் தயை பெருத்திருக்கிறார்" (ஏசாயா 55:6-7). தேவனுடைய இரட்சிப்பைப் பெறுவதன் மூலம் மட்டுமே கர்த்தருடைய நாளில் அவருடைய கோபத்திலிருந்து தப்பித்துக்கொள்ள முடியும்.*

# *33. ஆமோஸ் புத்தகம்*

### *எழுத்தாளர்:*

*ஆமோஸ் 1:1-வது வசனம், ஆமோஸ் புத்தகத்தின் எழுத்தாளரை ஆமோஸ் தீர்க்கதரிசி என்று அடையாளப்படுத்துகிறது.*

### *எழுதப்பட்ட காலம்:*

*ஆமோஸ் புத்தகம் கி.மு. 760 முதல் கி.மு. 753 வரையிலான காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது.*

### *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*ஆமோஸ் தீர்க்கதரிசி ஆடு மேய்க்கும் ஒரு மேய்ப்பன் மற்றும் தெக்கோவா என்ற யூத கிராமத்திலிருந்து பழம் பொருக்குபராக இருந்தார், அவருக்கு கல்வி அல்லது ஆசாரியப் பின்னணி எதுவும் இல்லாதபோதிலும் தேவன் அவரை அழைத்தார். ஆமோஸின் ஊழியம் வடக்கே தனது அண்டை நாடான இஸ்ரேலுக்கு செய்யும்படியாக அனுப்பப்பட்டது. தேசம் செய்த பாவங்கள் காரணமாக தேசத்திற்கு வரவிருக்கும் அழிவு மற்றும் சிறைப்பிடிப்பு பற்றிய செய்திகள் பெரும்பாலும் செல்வாக்கற்றவை, கவனிக்கப்படாதவைகளாகவே இருந்தன, ஏனென்றால் சாலமோனின் காலம் இஸ்ரவேலில் மிகவும் சிறப்பாக இருந்ததால் என்பதற்காக அல்ல என்பதையும் கருத்தில்கொள்ள வேண்டும். ஆமோஸின் ஊழியம், இரண்டாம் யெரொபெயாம் இஸ்ரவேலையும், உசியா யூதாவை ஆளுகிறபோது உண்டாயிருந்தது.*

### *திறவுகோல் வசனங்கள்:*

*ஆமோஸ் 2:4, "மேலும்: யூதாவின் மூன்று பாதகங்களினிமித்தமும், நாலு பாதகங்களினிமித்தமும், நான் அவர்கள் ஆக்கினையைத் திருப்பமாட்டேன்; அவர்கள் கர்த்தருடைய வேதத்தை வெறுத்து,*

*அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளாமல், தங்கள் பிதாக்கள் பின்பற்றின பொய்களினால் மோசம்போனார்களே.”*

*ஆமோஸ் **3:7**, “கர்த்தராகிய ஆண்டவர் தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்குத் தமது இரகசியத்தை வெளிப்படுத்தாமல் ஒரு காரியத்தையும் செய்யார்.”*

*ஆமோஸ் **9:14**, “என் ஜனமாகிய இஸ்ரவேலின் சிறையிருப்பைத் திருப்புவேன்; அவர்கள் பாழான நகரங்களைக் கட்டி, அவைகளில் குடியிருந்து, திராட்சத்தோட்டங்களை நாட்டி, அவைகளுடைய பழரசத்தைக் குடித்து, தோட்டங்களை உண்டாக்கி, அவைகளின் கனிகளைப் புசிப்பார்கள்.”*

## சுருக்கமான திரட்டு:

*இஸ்ரேலின் வெளிப்புற செழிப்பு மற்றும் வல்லமையின் அடியில், உட்புற நிலையில் தேசம் முக்கியமாக ஊழல் நிறைந்ததாக இருப்பதை ஆமோஸில் காணலாம். ஆமோஸ் ஜனங்களைத் தண்டிக்கும் பாவங்கள் விரிவானவை: தேவனுடைய வார்த்தையைப் புறக்கணித்தல், உருவ வழிபாடு, புறமத வழிபாடு, பேராசை, சிதைந்த தலைமை மற்றும் ஏழைகளின் அடக்குமுறை. ஆமோஸ் தீர்க்கதரிசி சுற்றியுள்ள எல்லா நாடுகளிலும், பின்னர் தனது சொந்த தேசமான யூதாவின் மீதும் ஒரு நியாயத்தீர்ப்பை உச்சரிப்பதன் மூலம் தனது பணியைத் தொடங்குகிறார், கடைசியில் இஸ்ரவேலுக்கு மிகக் கடுமையான நியாயத்தீர்ப்பு வழங்கப்படுகிறது. தேவனிடமிருந்து அவர் பெற்ற தரிசனங்கள் அதே உறுதியான செய்தியையே வெளிப்படுத்துகின்றன: நியாயத்தீர்ப்பு சமீபமாக இருக்கிறது. எதிர்காலத்தில் மீதமுள்ளவர்களை/மீதியானவர்களை மீட்டெடுப்பதாக ஆமோஸுக்கு தேவன் அளித்த வாக்குறுதியுடன் புத்தகம் முடிகிறது.*

## முன்னிழல்கள்:

ஆமோஸ் புத்தகம் இனிவரவிருக்கிற எதிர்காலத்திற்கான ஒரு மகத்தான வாக்குறுதியுடன் முடிவடைகிறது. “அவர்களை அவர்கள் தேசத்திலே நாட்டுவேன்; நான் அவர்களுக்குக் கொடுத்த தேசத்திலிருந்து அவர்கள் இனிப் பிடுங்கப்படுவதில்லையென்று உன் தேவனாகிய கர்த்தர் சொல்லுகிறார் என்றார்” (9:15). ஆபிரகாமுக்கு தேசத்தை வாக்குப்பண்ணின உறுதிமொழியின் இறுதி நிறைவேற்றம் (ஆதி. 12:7; 15:7; 17:8) கிறிஸ்துவின் பூமியின் ஆயிரமாண்டு ஆட்சியின் போது நிகழும் (யோவேல் 2:26, 27-ஐப் பார்க்கவும்). வெளிப்படுத்துதல் 20-ஆம் அதிகாரத்தில், பூமியில் கிறிஸ்து ஸ்தாபிக்கப்போகிற அவருடைய ஆயிரம் ஆண்டு ஆட்சியை விவரிக்கிறது, இது இரட்சகரின் பரிபூரணமான அரசாங்கத்தின் கீழ் இருக்கிற சமாதனம் மற்றும் மகிழ்ச்சியின் காலம் ஆகும். அந்த நேரத்தில், விசுவாசமுள்ள இஸ்ரவேலும் புறஜாதிய கிறிஸ்தவர்களும் திருச்சபையில் ஒன்றிணைந்து கிறிஸ்துவோடு வாழ்ந்து ஆட்சி செய்வார்கள்.

## நடைமுறை பயன்பாடு:

சில நேரங்களில் நாம் ஒரு "வெறும்-ஒரு" என்று நினைக்கிறோம்! அதாவது நாம் வெறுமனே ஒரு விற்பனையாளர், விவசாயி அல்லது இல்லத்தரசி என்று நினைக்கிறோம். ஆமோஸும் ஒரு "வெறும்-ஒரு" என்று கருதப்படுகிறார். அவர் ஒரு தீர்க்கதரிசி அல்லது ஆசாரியர் அல்லது பிரபலமான ஒருவரின் மகன் அல்ல. அவர் ஒரு சாதாரண ஆடு மேய்க்கும் மேய்ப்பன், யூதாவில் ஒரு சிறு தொழிலாளி. யார் செவிகொடுத்து அவரைக் கேட்பார்கள்? ஆனால் சாக்கு போக்கு சொல்லுவதற்குப் பதிலாக, ஆமோஸ் பூரணமாக கீழ்ப்படிந்து மாற்றத்திற்கான தேவனுடைய வல்லமையுள்ள குரலாக மாறினார்.

மேய்ப்பர்கள், தச்சர்கள், மீனவர்கள் போன்ற அனைவரையும் தேவன் வேதாகமத்தின் மூலம் பயன்படுத்தியுள்ளார். இந்த வாழ்க்கையில் நீங்கள் என்னவாக இருந்தாலும், தேவன் உங்களைப் பயன்படுத்தலாம். ஆமோஸ் மிகவும் அதிகமானவன் இல்லை. அவர் ஒரு "வெறும்-ஒரு" நபரே. தேவனுக்கு “வெறும்-ஒரு" வேலைக்காரன். தேவனுடைய "வெறும்-ஒரு" இருப்பது மெய்யாகவே நல்லது.

# 34. ஒபதியாவின் புத்தகம்

## எழுத்தாளர்:

*ஒபதியா புத்தகத்தின் முதலாவது வசனம், ஒபதியா புத்தகத்தின் எழுத்தாளரை ஒபதியா தீர்க்கதரிசி என்று அடையாளப்படுத்துகிறது.*

## எழுதப்பட்ட காலம்:

*ஒபதியா புத்தகம் கி.மு. 848 முதல் கி.மு. 840 வரையிலான காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாக நம்பப்படுகிறது.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*பழைய ஏற்பாட்டின் புத்தகங்களுள் மிகச் சிறிய புத்தகமான ஒபதியா 21 வசனங்கள் மட்டுமே கொண்டுள்ள புத்தகமாகும். தேவனுக்கும் இஸ்ரவேலுக்கும் எதிரான பாவங்களுக்காக ஏதோமைக் கண்டிக்க இந்த வாய்ப்பைப் பயன்படுத்தும் தேவனுடைய தீர்க்கதரிசி ஒபதியா, இந்த தீர்க்கதரிசன வார்த்தைகளை உரைக்கிறார். ஏதோமியர்கள் ஏசாவின் சந்ததியினர், இஸ்ரவேலர்கள் அவனுடைய இரட்டை சகோதரரான யாக்கோபின் சந்ததியினர் ஆகும். சகோதரர்களுக்கிடையில் ஒரு சண்டை அவர்களின் சந்ததியினரை 1,000 ஆண்டுகளுக்கும் மேலாக பாதித்துள்ளது. எகிப்திலிருந்து புறப்பட்டு இஸ்ரவேலர்கள் வெளியேறியப்போது ஏதோமியர்கள் இஸ்ரவேல் ஜனம் தங்கள் தேசத்தைக் கடக்க தடை விதித்தனர். ஏதோமின் பெருமையின் பாவங்களுக்கு இப்போது கர்த்தரிடமிருந்து ஒரு வலுவான நியாயத்தீர்ப்பு தேவைப்படுகிறது.*

## திறவுகோல் வசனங்கள்:

*ஒபதியா வசனம் 4, "நீ கழுகைப்போல உயரப்போனாலும் நீ நட்சத்திரங்களுக்குள்ளே உன் கூட்டைக் கட்டினாலும், அவ்விடத்திலிருந்தும் உன்னை விழத்தள்ளுவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்."*

*ஒபதியா வசனம் **12**, "உன் சகோதரன் அந்நியர்வசமான நாளாகிய அவனுடைய நாளை நீ பிரியத்தோடே பாராமலும், யூதா புத்திரருடைய அழிவின் நாளிலே அவர்கள் நிமித்தம் சந்தோஷப்படாமலும் அவர்கள் நெருக்கப்படுகிற நாளிலே நீ பெருமையாய்ப் பேசாமலும் இருக்க வேண்டியதாயிருந்தது."*

*ஒபதியா வசனம் **15**, "எல்லா ஜாதிகளுக்கும் விரோதமான நாளாகிய கர்த்தருடைய நாள் சமீபமாய் வந்திருக்கிறது; நீ செய்தபடியே உனக்கும் செய்யப்படும்; உன் செய்கையின் பலன் உன் தலையின்மேல் திரும்பும்."*

## சுருக்கமான திரட்டு:

*ஒபதியாவின் செய்தி இறுதியானது, மற்றும் அது நிச்சயமானது: ஏதோம் ராஜ்யம் முற்றிலுமாக அழிக்கப்படும். ஏதோம் திமிர்பிடித்தவனாக இருக்கிறான், இஸ்ரவேலின் துரதிர்ஷ்டங்களைப் பற்றி மகிழ்ச்சியடைகிறான், எதிரிப் படைகள் இஸ்ரேலைத் தாக்கும்போது, இஸ்ரவேலர் உதவி கேட்கும்போது, ஏதோமியர்கள் மறுத்து, அவர்களுக்காக உதவி செய்யாமல், அவர்களுக்கு எதிராகப் போராடத் தேர்வு செய்கிறார்கள். பெருமையின் இந்த பாவங்களை இனி கவனிக்க முடியாது. கடைசி நாட்களில் சீயோனின் நிறைவேற்றம் மற்றும் விடுதலையின் வாக்குறுதியுடன் புத்தகம் முடிவடைகிறது, அப்போது தேவனுடைய ஜனங்களுக்கு அவர் ஆட்சி செய்யும்போது அவர்களது தேசம் மீண்டுமாக மீட்கப்படும்.*

## முன்னிழல்கள்:

*ஒபதியா புத்தகத்தின் **21**-வது வசனம் கிறிஸ்துவையும் அவருடைய திருச்சபையையும் முன்னறிவிக்கிறது. "ஏசாவின் பர்வதத்தை நியாயந்தீர்ப்பதற்காக இரட்சகர்கள் சீயோன்பர்வதத்தில் வந்தேறுவார்கள்; அப்பொழுது ராஜ்யம் கர்த்தருடையதாய் இருக்கும்". இந்த "இரட்சகர்கள்" (பல பதிப்புகளில் "விடுவிப்பவர்கள்" என்றும் அழைக்கப்படுகிறார்கள்) கிறிஸ்துவின் அப்போஸ்தலர்கள் ஆகும், அதாவது தேவனுடைய வார்த்தையின் ஊழியர்கள் மற்றும் குறிப்பாக இந்த*

பிந்தைய நாட்களில் நற்செய்தியின் போதகர்கள் அடங்குவார்கள். அவர்கள் "இரட்சகர்கள்" என்று அழைக்கப்படுகிறார்கள், அவர்கள் நம்முடைய இரட்சிப்பைப் பெறுவதால் அல்ல, மாறாக அவர்கள் கிறிஸ்துவின் நற்செய்தியின் மூலம் இரட்சிப்பைப் பிரசங்கிப்பதாலும், அந்த இரட்சிப்பைப் பெறுவதற்கான வழியை நமக்குக் காண்பிப்பதாலும் அவர்கள் இரட்சகர்கள் என்று கருதப்படுகிறார்கள். அவர்களும், அவர்களால் பிரசங்கிக்கப்பட்ட வார்த்தையும், இரட்சிப்பின் நற்செய்தி எல்லா மனிதர்களுக்கும் வழங்கப்படும் வழிமுறையாகும். இரட்சிப்பை வழங்குவதற்கு வந்த ஒரே இரட்சகராக கிறிஸ்து மட்டுமே இருக்கிறார், அவரே அதன் காரணகர்த்தாவாக இருக்கிறார், சுவிசேஷத்தை இரட்சகர்களும் விடுவிப்பவர்களும் யுகத்தின் முடிவில் மேலும் மேலும் இவைகளுக்கு ஆதாரமாக இருப்பார்கள்.

## நடைமுறை பயன்பாடு:

நாம் அவரிடம் உண்மையாக இருந்தால் தேவன் நம் சார்பாக வெல்வார். ஏதோமைப் போலல்லாமல், தேவைப்படும் காலங்களில் மற்றவர்களுக்கு உதவ நாம் தயாராக இருக்க வேண்டும். பெருமை என்பது ஒரு பெரும் பாவம். இயேசு கிறிஸ்துவையும் அவர் நமக்காகச் செய்ததையும் தவிர நாம் வேறு எதைக் குறித்தும் பெருமைப்பட ஒன்றுமில்லை.

# 35. யோனாவின் புத்தகம்

## எழுத்தாளர்:

*யோனா 1:1, யோனா தீர்க்கதரிசி தான் யோனா புத்தகத்தை எழுதியவர் என்று குறிப்பாக அடையாளம் காட்டுகிறது.*

## எழுதப்பட்ட காலம்:

*யோனாவின் புத்தகம் கி.மு. 793 முதல் கி.மு. 758 வரையிலான காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாக நம்பபடுகிறது.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*கீழ்ப்படியாமை மற்றும் எழுப்புதல் ஆகியவை இந்த புத்தகத்தின் முக்கிய பிரதானமான கருப்பொருள்கள். திமிங்கலத்தின் வயிற்றில் யோனாவின் அனுபவம் அவருக்கு ஒரு தனித்துவமான விடுதலையைத் தேடுவதற்கான ஒரு தனித்துவமான வாய்ப்பை வழங்குகிறது, ஏனெனில் அவர் இந்த தனித்துவமான பின்வாங்கலின் போது மனந்திரும்புகிறார். அவரது ஆரம்ப ஒத்துழையாமை/கீழ்ப்படியாமை அவரது தனிப்பட்ட எழுப்புதலுக்கு மட்டுமல்ல, நினிவே ஜனங்களுக்கும் வழிவகுக்கிறது. நினிவேவுக்கு யோனா கொண்டு வரும் எழுப்புதலை எல்லா காலத்திலும் மிகப்பெரிய சுவிசேஷ முயற்சிகளில் ஒன்றாக பலர் வகைப்படுத்துகின்றனர்.*

## திறவுகோல் வசனங்கள்:

*யோனா 1:3, "அப்பொழுது யோனா கர்த்தருடைய சமுகத்தினின்று விலகி, தர்ஷீசுக்கு ஓடிப்போகும்படி எழுந்து, யோப்பாவுக்குப் போய் தர்ஷீசுக்குப் போகிற ஒரு கப்பலைக்கண்டு, கூலிகொடுத்து, தான் கர்த்தருடைய சமுகத்தினின்று விலகும்படி, அவர்களோடே தர்ஷீசுக்குப் போகக் கப்பல் ஏறினான்."*

*யோனா 1:17, "யோனாவை விழுங்கும்படி ஒரு பெரிய மீனைக் கர்த்தர் ஆயத்தப்படுத்தியிருந்தார்; அந்த மீன் வயிற்றிலே யோனா இராப்பகல் மூன்றுநாள் இருந்தான்."*

*யோனா 2:2, "என் நெருக்கத்தில் நான் கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன்; அவர் எனக்கு உத்தரவு அருளினார்; நான் பாதாளத்தின் வயிற்றிலிருந்து கூக்குரலிட்டேன், நீர் என் சத்தத்தைக் கேட்டீர்."*

*யோனா 3:10, "அவர்கள் தங்கள் பொல்லாத வழியைவிட்டுத் திரும்பினார்களென்று தேவன் அவர்களுடைய கிரியைகளைப் பார்த்து, தாம் அவர்களுக்குச் செய்வேன் என்று சொல்லியிருந்த தீங்கைக்குறித்து மனஸ்தாபப்பட்டு, அதைச் செய்யாதிருந்தார்."*

## சுருக்கமான திரட்டு:

*யோனாவின் பயமும் பெருமையும் அவரை தேவனிடமிருந்து ஓடச் செய்கின்றன. தேவன் கட்டளையிட்டபடி, ஜனங்களுக்கு மனந்திரும்புதலைப் பிரசங்கிக்க அவர் நினிவேவுக்குச் செல்ல விரும்பவில்லை, ஏனென்றால் அவர்களை தம்முடைய எதிரிகள் என்று அவர் எண்ணினார், மேலும் நினிவே நகரத்தை அழிக்க தேவன் தமது அச்சுறுத்தலை நிறைவேற்ற மாட்டார் என்றும் அவர் உறுதியாக நம்பினார். அதற்குப் பதிலாக அவர் தர்ஷீசுக்குப் போக ஒரு கப்பலில் ஏறுகிறார், அது நினிவே பட்டணத்திற்கு எதிர் திசையில் உள்ளது. விரைவில் ஒரு பொங்கி எழும் புயற்காற்று மற்றும் கொந்தளிப்பு கப்பல் பயணிகளை நடுங்க வைக்கிறது மற்றும் யோனா தான் பிரச்சினை என்று தெரியவருகிறது. அவர்கள் யோனாவை கப்பலில் இருந்து கடலில் வீசுகிறார்கள், அப்பொழுது அவர் ஒரு பெரிய மீனால் விழுங்கப்படுகிறார். அதன் வயிற்றில் ஏறக்குறைய 3 பகல் மற்றும் 3 இரவுகளில், யோனா தனது பாவத்தை தேவனிடம் அறிக்கைச்செய்து மனந்திரும்புகிறார், மீன் அவரை வெட்டாந்தரையான நிலத்தில் வாந்தி எடுக்கிறது (மனந்திரும்புவதற்கு அவரை இவ்வளவு நேரம் எடுக்கச் செய்தது என்ன என்று நாம் ஆச்சரியப்படுகிறோம்). யோனா பின்னர் நினிவேவுக்கு ஏறக்குறைய 500 மைல் தூர பயணத்தை மேற்கொண்டு நகரத்தை ஒரு*

*பெரிய மனந்திரும்புதலின் எழுச்சிக்கு கொண்டு செல்கிறார். ஆனால் நினிவே மனந்திரும்பும்போது நன்றி செலுத்துவதற்குப் பதிலாக தீர்க்கதரிசி அதிருப்தி அடைகிறார் (உண்மையில் கூச்சலிடுகிறார்). ஆயினும், தேவன் இரக்கமுள்ளவர் என்று அவருக்குக் கற்பிக்க அவர் ஒரு காற்றையும், ஆமணக்குச்செடியையும், புழுவையும் பயன்படுத்தும்போது, யோனா தனது பாடத்தைக் கற்றுக்கொள்கிறார்.*

## முன்னிழல்கள்:

*யோனா ஒரு வகையில் கிறிஸ்துவின் மாதிரிப்படிவமாக இருக்கிறார் என்பது இயேசுவின் சொந்த வார்த்தைகளிலிருந்து தெளிவாகிறது. மத்தேயு 12:40-41-ல், யோனா திமிங்கலத்தின் வயிற்றில் இருந்த அதே காலளவு நேரம் கல்லறையில் இருப்பார் என்று இயேசு தம்மைக் குறித்து அறிவிக்கிறார். யோனாவின் பிரசங்கத்திற்கு செவிகொடுத்து நினிவே மக்கள் அவரது முகத்திற்கு நேராக மனந்திரும்பினாலும், இயேசுவை நிராகரித்த பரிசேயரும் நியாயப்பிரமாண ஆசிரியர்களும் யோனாவை விட மிகப் பெரியவரை நிராகரிக்கிறார்கள் என்று அவர் தொடர்ந்து கூறுகிறார். மனந்திரும்புதல் மற்றும் இரட்சிப்பு குறித்து யோனா நினிவே மக்களுக்கு தேவனுடைய சத்தியத்தைக் கொண்டு வந்ததைப் போலவே, இயேசுவும் தேவன் மூலமாக இரட்சிப்பின் அதே செய்தியை (யோனா 2:9; யோவான் 14:6) கொண்டு வருகிறார் (ரோமர் 11:36).*

## நடைமுறை பயன்பாடு:

*நாம் தேவனிடடமிருந்து மறைந்து ஒளிந்துகொள்ள முடியாது. நம்முடைய எல்லா ஆட்சேபனைகளையும், கால் பின்வாங்கலையும் மீறி, அவர் நம்மால் சாதிக்க விரும்புவது நிச்சையமாக நிறைவேறும். எபேசியர் 2:10 நமக்கு நினைவூட்டுகிறது, அவர் நமக்கென்று திட்டங்களை வைத்திருக்கிறார், அந்தத் திட்டங்களுக்கு நாம் இணங்குவதைக் காண்போம். யோனாவைப் போலல்லாமல், தாமதமின்றி அவருக்குக் கீழ்ப்படிவோமானால் எவ்வளவு எளிதாக இருக்கும்!*

*நம்முடைய நற்பெயர், தேசியம் அல்லது இனம் ஆகியவற்றைப் பொருட்படுத்தாமல், தேவனுடைய அன்பு அனைவருக்கும் அவர்*

அணுகுவதில் வெளிப்படுகிறது. நற்செய்தியின் இலவச சலுகை எல்லா மக்களுக்கும் எல்லா நேரங்களிலும் கிடைக்கிறது/உள்ளது. கிறிஸ்தவர்களாகிய நம்முடைய பணி, உலகத்தை தேவன் சொல்லும் சலுகையின் வழிமுறையாகவும், மற்றவர்களின் இரட்சிப்பில் மகிழ்ச்சியடையவும் செய்வதாகும். இது ஒரு அனுபவமாகும், "கடைசி நிமிட மாற்றங்களில்" கிறிஸ்துவிடம் வருபவர்களிடம் பொறாமைப்படவோ அல்லது கோபப்படவோ கூடாது அல்லது நம்முடைய சொந்த அனுபவத்திற்கு முரணான சூழ்நிலைகளில் வருபவர்களிடமும் நாம் அவரைப்பற்றி பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று தேவன் விரும்புகிறார்.

# *36. மீகாவின் புத்தகம்*

### *எழுத்தாளர்:*

*மீகா புத்தகத்தின் எழுத்தாளர் மீகா தீர்க்கதரிசியாகும் (மீகா 1:1).*

### *எழுதப்பட்ட காலம்:*

*மீகாவின் புத்தகம் கி.மு. 735 முதல் கி.மு. 700 வரையிலான காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாக நம்பபடுகிறது.*

### *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*மீகா புத்தகத்தின் செய்தியானது, நியாயத்தீர்ப்பு மற்றும் நம்பிக்கையின் சிக்கலான கலவையாகும். ஒருபுறம், தீர்க்கதரிசனங்கள் சமூக தீமைகள், ஊழல் நிறைந்த தலைமை மற்றும் உருவ வழிபாடு ஆகியவற்றிற்காக இஸ்ரவேல் மீது நியாயத்தீர்ப்பை அறிவிக்கின்றன. இந்த தீர்ப்பு சமாரியா மற்றும் எருசலேமின் அழிவில் உச்சம் பெறும் என்று எதிர்பார்க்கப்பட்டது. மறுபுறம், புத்தகம் தேசத்தின் மறுசீரமைப்பை மட்டுமல்ல, இஸ்ரவேல் மற்றும் எருசலேமின் மாற்றத்தையும் உயர்த்தலையும் அறிவிக்கிறது. நம்பிக்கை மற்றும் அழிவின் செய்திகள் முரண்பாடானவை அல்ல, இருப்பினும், மறுசீரமைப்பு மற்றும் மாற்றம் நியாயத்தீர்ப்புக்குப் பிறகுதான் நடைபெறுகின்றன.*

### திறவுகோல் வசனங்கள்:

*மீகா 1:2, "சகல ஜனங்களே, கேளுங்கள், பூமியே, அதிலுள்ளவைகளே, செவிகொடுங்கள்; கர்த்தராகிய ஆண்டவர் தம்முடைய பரிசுத்த ஆலயத்திலிருக்கிற ஆண்டவரே, உங்களுக்கு விரோதமாகச் சாட்சியாயிருப்பார்."*

*மீகா 5:2, "எப்பிராத்தா என்னப்பட்ட பெத்லகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்ளே சிறியதாயிருந்தும், இஸ்ரவேலை ஆளப்போகிறவர்*

*உன்னிடத்திலிருந்து புறப்பட்டு என்னிடத்தில் வருவார்; அவருடைய புறப்படுதல் அநாதி நாட்களாகிய பூர்வத்தினுடையது.''*

*மீகா **6:8,** ''மனுஷனே, நன்மை இன்னதென்று அவர் உனக்கு அறிவித்திருக்கிறார்; நியாயஞ்செய்து, இரக்கத்தைச் சிநேகித்து, உன் தேவனுக்கு முன்பாக மனத்தாழ்மையாய் நடப்பதை அல்லாமல் வேறே என்னத்தைக் கர்த்தர் உன்னிடத்தில் கேட்கிறார்.*

*மீகா **7:18-19,** ''தமது சுதந்தரத்தில் மீதியானவர்களுடைய அக்கிரமத்தைப் பொறுத்து, மீறுதலை மன்னிக்கிற தேவரீருக்கு ஒப்பான தேவன் யார்? அவர் கிருபைசெய்ய விரும்புகிறபடியால் அவர் என்றென்றைக்கும் கோபம் வையார். அவர் திரும்ப நம்மேல் இரங்குவார்; நம்முடைய அக்கிரமங்களை அடக்கி, நம்முடைய பாவங்களையெல்லாம் சமுத்திரத்தின் ஆழங்களில் போட்டுவிடுவார்.''*

## சுருக்கமான திரட்டு:

*ஜனங்களை சுரண்டி தவறாக வழிநடத்தும் இஸ்ரவேலின் ஆட்சியாளர்கள், ஆசாரியர்கள் மற்றும் தீர்க்கதரிசிகளை மீகா தீர்க்கதரிசி கடுமையாகக் கண்டிக்கிறார். அவர்களுடைய செயல்களால் தான் எருசலேம் அழிக்கப்படும். எருசலேமிலிருந்து பாபிலோனுக்குச் செல்லும் மக்களின் விடுதலையை மீகா தீர்க்கதரிசி அறிவித்து, தனக்கு எதிராகக் கூடியிருந்த தேசங்களை அழிக்க எருசலேமுக்கு ஒரு புத்திமதியுடன் முடிக்கிறார். தேசத்தைப் பாதுகாக்க சிறந்த ஆட்சியாளர் பெத்லகேமில் இருந்து வருவார் என்று, தீர்க்கதரிசி யாக்கோபின் எஞ்சியவர்களின்/மீதியானவர்களின் வெற்றியை அறிவிக்கிறார், மேலும் ஒரு நாள் யெகோவா விக்கிரகாராதனை மற்றும் இராணுவ வலிமையை நம்பியிருக்கும் தேசத்தை சுத்திகரிக்கும் ஒரு நாளை முன்னறிவிப்பார். நீதி மற்றும் விசுவாசத்திற்கான யெகோவாவின் தேவையின் ஒரு சக்திவாய்ந்த மற்றும் சுருக்கமான திரட்டை தீர்க்கதரிசி முன்வைக்கிறார், மேலும் ஓம்ரி மற்றும் ஆகாபின் வழிகளைப் பின்பற்றியவர்கள் மீது நியாயத்தீர்ப்பை அறிவிக்கிறார். ஒரு புலம்பலின் கூறுகளை உள்ளடக்கிய ஒரு தீர்க்கதரிசன வழிபாட்டுடன் புத்தகம் நிறைவடைகிறது. இஸ்ரவேல் தனது பாவத்தை*

*ஒப்புக்கொள்கிறது மற்றும் யெகோவாவின் வல்லமைமிக்க செயல்களின் மூலம் விடுதலையை உறுதி செய்கிறது.*

### *முன்னிழல்கள்:*

*மீகா **5:2**-ல், பெத்லகேமில் பிறந்த ராஜாவைத் தேடிய சாஸ்திரிகளால் மேற்கோள் காட்டப்பட்ட ஒரு மேசியா தீர்க்கதரிசனம் (மத்தேயு **2:6**) கொடுக்கப்பட்டுள்ளது. கிழக்கிலிருந்து வந்த இந்த சாஸ்திரிகள் எபிரெய வேதாகமத்தை நன்கு அறிந்திருந்ததால், பெத்லகேம் என்ற சிறிய கிராமத்திலிருந்து உலகத்தின் மெய்யான ஒளியான சமாதான பிரபு வெளியே வருவார் என்பதை அவர்கள் அறிந்தார்கள். மீகாவின் பாவம், மனந்திரும்புதல் மற்றும் மீட்டெடுப்பு பற்றிய செய்தி அதன் இறுதி நிறைவேற்றத்தை இயேசு கிறிஸ்துவில் காண்கிறது, அவர் நம்முடைய பாவங்களுக்கான பரிகாரம் (ரோமர் **3:24-25**) மற்றும் தேவனிடத்திற்கு செல்வதற்கான ஒரே வழியாகும் (யோவான் **14:6**).*

### *நடைமுறை பயன்பாடு:*

*தேவன் எச்சரிக்கைகளை அளிக்கிறார், எனவே அவருடைய கோபத்தை நாம் அனுபவிக்க வேண்டியதில்லை. தேவனுடைய எச்சரிக்கைகள் செவிசாய்க்கப்படாவிட்டால், அவருடைய குமாரனின் பலியில் பாவத்திற்கான அவரது ஏற்பாடு நிராகரிக்கப்பட்டால் நியாயத்தீர்ப்பு நிச்சயமாக வரும். கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்களுக்கு, தேவன் நம்மை ஒழுங்குபடுத்துவார் — அதாவது வெறுப்பிலிருந்து அல்ல, ஆனால் அவர் நம்மை நேசிப்பதால் அப்படிச் செய்வார். பாவம் அழிக்கிறது என்பதை அவர் நன்கு அறிவார், நாம் பரிபூரணராய் இருக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். மறுசீரமைப்பின் வாக்குறுதியாக இருக்கும் இந்த பரிபூரணம் அவருக்குக் கீழ்ப்படிந்தவர்களுக்காக காத்திருக்கிறது.*

# *37. நாகூம் புத்தகம்*

### *எழுத்தாளர்:*

*நாகூம் புத்தகத்தின் எழுத்தாளர் தன்னை எல்கோசானாகிய நாகூம் (நாகூம் என்றால் எபிரேய மொழியில் "தேற்றுகிறவர்" அல்லது "ஆறுதலுள்ளவர்" என்று அர்த்தமாகும்) என்று அடையாளப்படுத்துகிறார் (1:1). எந்தவொரு உறுதியான ஆதாரமும் இல்லை என்றாலும் அந்த நகரம் எங்கிருந்தது என்பதற்கு பல கோட்பாடுகள் உள்ளன. அத்தகைய ஒரு கோட்பாடு என்னவென்றால், இது கலிலேயா கடலின் அருகாமையில் இருந்ததும் பின்னர் கப்பர்நகூம் என்று அழைக்கப்படுகிறது என்றும் கூறுகிறார்கள் (அதாவது "நாகூம் கிராமம்" என்று பொருள்படும்).*

### *எழுதப்பட்ட காலம்:*

*நாகூமைப் பற்றி நமக்குத் தெரிந்த குறைந்த அளவிலான தகவல்களைக் கொண்டு நாம் செய்யக்கூடியது என்னவென்றால், நாகூம் புத்தகம் கி.மு. 663 முதல் கி.மு. 612 வரையிலுள்ள கால இடைவெளியில் எழுதப்பட்ட கால அளவைக் குறிப்பதாகும். இந்த காலத்தை தீர்மானிக்க உதவும் இரண்டு நிகழ்வுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. முதல் நாகூம் எகிப்தில் உள்ள தெபேஸ் (நோ அமோன்) கடந்த காலங்களில் அசீரியர்களிடம் (கி.மு. 663) விழுந்ததைக் குறிப்பிடுகிறார், எனவே அது ஏற்கனவே நடந்த சம்பவமாகும். இரண்டாவதாக, நாகூமின் தீர்க்கதரிசனங்களின் எஞ்சியவை கி.மு. 612 ல் நிறைவேறியது.*

### *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*நாகூம் இந்த புத்தகத்தை நினிவே மக்களுக்கு ஒரு எச்சரிக்கையாகவோ அல்லது "மனந்திரும்புதலுக்கான அழைப்பாகவோ" எழுதவில்லை. அவர்கள் ஏற்கனவே துன்மார்க்கமான வழிகளில் தொடர்ந்தால் என்ன நடக்கும் என்ற வாக்குறுதியுடன் 150 ஆண்டுகளுக்கு முன்பே யோனா தீர்க்கதரிசியை தேவன் அவர்களிடத்தில் அனுப்பியிருந்தார். அந்த நேரத்தில் மக்கள் மனந்திரும்பியிருந்தார்கள், ஆனால் இப்போது முன்பு*

*இருந்ததை விட இன்னும் மோசமாக வாழ்ந்தார்கள். அசீரியர்கள் தங்கள் வெற்றிகளில் முற்றிலும் மிருகத்தனமாகிவிட்டார்கள் (பாதிக்கப்பட்டவர்களின் உடல்களை மரங்களில் தொங்கவிட்டு, மற்ற கொடுமைகளுக்கிடையில் தங்கள் கூடாரங்களின் சுவர்களில் தோலை வைப்பார்கள்). தேவன் நியாயத்தீர்ப்பை அறிவித்ததாலும், அசீரியர்கள் தங்களுக்குத் தேவையானதைப் பெறுவார்கள் என்பதாலும் நாகூம் யூத ஜனத்தை விரக்தியடைய வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருந்தார்.*

## திறவுகொல் வசனங்கள்:

*நாகூம் **1:7**, "கர்த்தர் நல்லவர், இக்கட்டு நாளிலே அரணான கோட்டை; தம்மை நம்புகிறவர்களை அறிந்திருக்கிறார்."*

*நாகூம் **1:14**அ, "உன்னைக்குறித்துக் கர்த்தர் கட்டளைகொடுத்திருக்கிறார்; இனி உன் பேருக்கு வித்துவிதைக்கப்படுவதில்லை."*

*நாகூம் **1:15**அ, "இதோ, சமாதானத்தைக் கூறுகிற சுவிசேஷகனுடைய கால்கள் மலைகளின்மேல் வருகிறது." (ஏசாயா **52:7** மற்றும் ரோமர் **10:15** ஆகிய வசனங்களை காண்க)*

*நாகூம் **2:13**அ, "இப்போதும் நான் உன்மேல் இருக்கிற அவன் நுகத்தை முறித்து உன் கட்டுகளை அறுப்பேன்."*

*நாகூம் **3:19**, "உன் நொறுங்குதலுக்குப் பரிகாரம் இல்லை; உன் காயம் கொடியது; உன் செய்தியைக் கேட்பவர் யாவரும் உன்பேரில் கைகொட்டுவார்கள்; உன் பொல்லாப்பு எந்நேரமும் யார்பேரிலேதான் பாயாமற்போயிற்று?"*

## சுருக்கமான திரட்டு:

*நினிவே பட்டணம் ஒருமுறை யோனாவின் பிரசங்கத்திற்கு செவிகொடுத்து, கர்த்தராகிய யெகோவா தேவனை சேவிப்பதற்காக தீய வழிகளிலிருந்து விலகியது. ஆனால் **150** ஆண்டுகளுக்குப் பிறகு, நினிவே உருவ வழிபாடு, வன்முறை மற்றும் ஆணவத்திற்குத் திரும்பினது (நாகூம்*

*3:1-4).* தேவன் தம்முடைய தீர்க்கதரிசிகளில் ஒருவரை நினிவேவுக்கு அனுப்புகிறார், நகரத்தின் அழிவில் தீர்ப்பைப் பிரசங்கித்து அவர்களை மனந்திரும்பும்படி அறிவுறுத்துகிறார். துரதிர்ஷ்டவசமாக, நினிவே மக்கள் நாகூமின் எச்சரிக்கையை கவனிக்கவில்லை, இறுதியில் நகரம் பாபிலோனின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டது.

## முன்னிழல்கள்:

மேசியா மற்றும் அவருடைய ஊழியத்தைப் பற்றியும், அவருடைய காலத்தில் கிறிஸ்துவின் அப்போஸ்தலர்களைப் பற்றியும் பவுல் ரோமர் **10:15**-ல் நாகூம் **1:15** ஐ மீண்டும் மேற்கோள்காட்டி கூறுகிறார். நற்செய்தியை அறிவிக்கிற எந்தவொரு ஊழியக்காரராக இருந்தாலும் அவர்கள் "சமாதானத்தின் நற்செய்தியைப் பிரசங்கிப்பதே" அவர்களின் வேலையாக இருக்கிறது என்பதையும் புரிந்து கொள்ளலாம். தேவன் கிறிஸ்துவின் இரத்தத்தினாலே பாவிகளுடன் சமாதானம் ஏற்படுத்தி, ‘‘எல்லா புத்திக்கும் மேலான’’ சமாதானத்தைத் தம் மக்களுக்கு அளித்துள்ளார் (பிலிப்பியர் *4:7*). சிலுவையில் அறையப்பட்ட கிறிஸ்துவால் ஒப்புரவு, நீதி, மன்னிப்பு, ஜீவன் மற்றும் நித்திய இரட்சிப்பு போன்ற "நல்ல விஷயங்களைப் பற்றிய நற்செய்தியைக் கொண்டுவருவதும்" ஒரு போதகரின் பணியாகும். அத்தகைய நற்செய்தியைப் பிரசங்கிப்பதும், இதுபோன்ற செய்திகளைக் கொண்டுவருவதும் அவர்களின் கால்களை மிகவும் அழகாக ஆக்குகிறது. இங்குள்ள உருவாக சித்திரம் மற்றவர்களிடம் ஓடி, நற்செய்தியை அறிவிக்க ஆர்வமாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கின்றதை காண்பிக்கிறது.

## நடைமுறை பயன்பாடு:

தேவன் பொறுமையாகவும் கோபத்திற்கு நீடிய பொறுமையுள்ளவராகவும் இருக்கிறார். ஒவ்வொரு தேசமும் அவரை தங்கள் தேவன் என்று அறிவிக்க அவகாசம் தருகிறார். ஆனால் அவர் கேலி செய்யப்பட அனுமதிப்பதில்லை. எந்த நேரத்திலும் ஒரு தேசம் தன்னுடைய சொந்த நோக்கங்களை நிறைவேற்ற அவரிடமிருந்து விலகினால், அவர் நியாயத்தீர்ப்போடு வருகிறார். ஏறக்குறைய **220** ஆண்டுகளுக்கு முன்பு

அமெரிக்கா வேதாகமத்தில் காணப்படும் கொள்கைகளால் வழிநடத்தப்பட்ட ஒரு தேசமாக உருவாக்கப்பட்டது. ஆனால் கடந்த 50 ஆண்டுகளில் மிகப்பெரிய மாற்றம் அடைந்துள்ளது, நாம் தினமும் எதிர் திசையில் திரும்பிப் போய்க் கொண்டிருக்கிறோம். கிறிஸ்தவர்களாகிய நாம் வேதாகமக் கொள்கைகளுக்காகவும், சத்தியத்திற்கான வேதப்பூர்வ உண்மைகளுக்காகவும் நிற்பது நமது கடமையாகும், இது நம் நாட்டின் ஒரே நம்பிக்கையாகும்.

# *38. ஆபகூக் புத்தகம்*

### *எழுத்தாளர்:*

*ஆபகூக் 1:1 ஆபகூக் என்னும் தீர்க்கதரிசி தரிசனமாய்க் கண்ட பாரம் என்று அடையாளப்படுத்துகிறது.*

### *எழுதப்பட்ட காலம்:*

*ஆபகூக் புத்தகம் கி.மு. 610 முதல் கி.மு. 605 வரையிலுள்ள காலங்களுக்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

### *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*தம்முடைய தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனத்தை எதிரிகளின் கைகளில் இருக்கும் தற்போதைய துன்பங்களை அனுபவிக்க தேவன் ஏன் அனுமதிக்கிறார் என்று ஆபகூக் யோசித்துக்கொண்டிருந்தார். தேவன் அதற்கு பதிலளிக்கிறார், ஆபகூக்கின் நம்பிக்கையும் மீட்டெடுக்கப்படுகிறது.*

### *திறவுகொல் வசனங்கள்:*

*ஆபகூக் 1:2, "கர்த்தாவே, நான் எதுவரைக்கும் உம்மை நோக்கிக் கூப்பிடுவேன். நீர் கேளாமலிருக்கிறீரே! கொடுமையினிமித்தம் நான் எதுவரைக்கும் உம்மை நோக்கிக் கூப்பிடுவேன், நீர் இரட்சியாமலிருக்கிறீரே!"*

*ஆபகூக் 1:5, "நீங்கள் புறஜாதிகளை நோக்கிப் பார்த்து, ஆச்சரியப்பட்டுப் பிரமியுங்கள்; விவரிக்கப்பட்டாலும் நீங்கள் விசுவாசியாத ஒரு கிரியையை உங்கள் நாட்களில் நடப்பிப்பேன்."*

*ஆபகூக் 1:12, "கர்த்தாவே, நீர் பூர்வகாலமுதல் என் தேவனும் என் பரிசுத்தருமானவர் அல்லவா? நாங்கள் சாவதில்லை, கர்த்தாவே, நியாயத்தீர்ப்பு செய்ய அவனை வைத்தீர்; கன்மலையே, தண்டனை செய்ய அவனை நியமித்தீர்."*

*ஆபகூக் 2:2-4, "அப்பொழுது கர்த்தர் எனக்குப் பிரதியுத்தரமாக: நீ தரிசனத்தை எழுதி, அதைக் கடந்தோடுகிறவன் வாசிக்கும்படிப் பலகைகளிலே தீர்க்கமாக வரை. குறித்தகாலத்துக்குத் தரிசனம் இன்னும் வைக்கப்பட்டிருக்கிறது; முடிவிலே அது விளங்கும், அது பொய் சொல்லாது; அது தாமதித்தாலும் அதற்குக் காத்திரு; அது நிச்சயமாய் வரும், அது தாமதிப்பதில்லை. இதோ, அகங்காரியாயிருக்கிறானே, அவனுடைய ஆத்துமா அவனுக்குள் செம்மையானதல்ல; தன் விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்."*

*ஆபகூக் 2:20, "கர்த்தரோவென்றால், தமது பரிசுத்த ஆலயத்தில் இருக்கிறார்; பூமியெல்லாம் அவருக்கு முன்பாக மௌனமாயிருக்கக்கடவது."*

*ஆபகூக் 3:2, "கர்த்தாவே, நீர் வெளிப்படுத்தினதை நான் கேட்டேன், எனக்குப் பயமுண்டாயிற்று; கர்த்தாவே, வருஷங்களின் நடுவிலே உம்முடைய கிரியையை உயிர்ப்பியும், வருஷங்களின் நடுவிலே அதை விளங்கப்பண்ணும், கோபித்தாலும் இரக்கத்தை நினைத்தருளும்."*

*ஆபகூக் 3:19, "ஆண்டவராகிய கர்த்தர் என்பெலன்; அவர் என் கால்களை மான்கால்களைப்போலாக்கி, உயரமான ஸ்தலங்களில் என்னை நடக்கப்பண்ணுவார்."*

## சுருக்கமான திரட்டு:

தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனம் தங்கள் அடிமைத்தனத்தின் சிறையிருப்பில் ஏன் துன்பப்பட அனுமதிக்கப்படுகிறார்கள் என்பதற்கான பதிலுக்காக ஆபகூக் தேவனிடம் மன்றாடுவதன் மூலம் ஆபகூக் புத்தகம் தொடங்குகிறது (ஆபகூக் 1:1-4). கர்த்தர் தனது பதிலை ஆபகூக்கிற்கு அளிக்கிறார், "நான் சொன்னாலும் நீங்கள் அதை நம்ப மாட்டீர்கள்" (ஆபகூக் 1:5-11). ஆபகூக் பிறகு பின்வருமாறு கூறுகிறார், "சரி, நீரே தேவன், ஆனால் இது ஏன் நடக்கிறது என்பதைப் பற்றி கூறும்" (ஆபகூக் 1:17-2:1). தேவன் ஆபகூக்கிற்கு அவருக்கு மீண்டும் பதிலளித்து மேலும் தகவல்களைத் தருகிறார், பின்னர் பூமியை தனக்கு முன்னால் அமைதியாக

*இருக்கச் சொல்கிறார் (ஆபகூக் 2:2-20). இந்த சோதனைகள் மூலமாகவும், தேவன்மீது தனது வலுவான நம்பிக்கையை வெளிப்படுத்தும் ஒரு ஜெபத்தை ஆபகூக் எழுதுகிறார் (ஆபகூக் 3:1-19).*

### *முன்னிழல்கள்:*

*விசுவாசத்தினால் நீதிமான் பிழைப்பான் என்னும் கோட்பாட்டை மீண்டும் வலியுறுத்த இரண்டு வெவ்வேறு சந்தர்ப்பங்களில் (ரோமர் 1:17; கலாத்தியர் 3:11) அப்போஸ்தலனாகிய பவுல் ஆபகூக் 2:4 ஐ குறிப்பிட்டு மேற்கோள் காட்டுகிறார். தேவனுடைய ஈவாகவும், கிறிஸ்துவின் மூலமாகவும் கிடைக்கக்கூடிய விசுவாசம் ஒரே நேரத்தில் இரட்சிக்கும் விசுவாசம் (எபேசியர் 2:8-9) மற்றும் வாழ்நாள் முழுவதும் நீடிக்கும் விசுவாசம் ஆகும். விசுவாசத்தினால் நித்திய ஜீவனை அடைகிறோம், அதே விசுவாசத்தினால் கிறிஸ்தவ வாழ்க்கையை வாழ்கிறோம். வசனத்தின் தொடக்கத்தில் உள்ள "பெருமை" போலல்லாமல், அவருடைய ஆத்துமா அவருக்குள் சரியாக இல்லை (NASB) மற்றும் அவரது ஆசைகள் நேர்மையானதாக இல்லை (NIV). ஆனால் கிறிஸ்துவை விசுவாசிப்பதன் மூலம் நீதிமான்களாகிய நாம் முற்றிலும் நீதியுள்ளவர்களாக இருக்கிறோம், ஏனென்றால் அவர் நம்முடைய பாவத்திற்காக அவருடைய பரிபூரண நீதியை பரிமாறிக்கொண்டார் (2 கொரிந்தியர் 5:21), அதுதான் விசுவாசத்தினாலே வாழ நமக்கு உதவியது.*

### *நடைமுறை பயன்பாடு:*

*மரியாதை மற்றும் பயபக்தியுடன் இருந்தாலும், தேவன் என்ன செய்கிறார் என்று கேள்வி கேட்பது அனுமதிக்கப்படுகிறது என்பதே ஆபகூக்கின் வாசகருக்குள்ள விண்ணப்பம் ஆகும். சில நேரங்களில் என்ன நடக்கிறது என்பது நமக்குத் தெரியவில்லை, குறிப்பாக ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு நாம் துன்பத்தில் தள்ளப்பட்டால் அல்லது நாம் வெறுமனே துன்பங்களைப் பெறும்போது நம் எதிரிகள் முன்னேறுகிறார்கள் என்று தோன்றினால். எவ்வாறாயினும், எல்லாவற்றையும் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் தேவன் ஒரு இறையாண்மையுள்ள, சர்வ வல்லமையுள்ள தேவன் என்பதை ஆபகூக் புத்தகம் உறுதிப்படுத்துகிறது. நாம் மௌனமாக*

இருந்து அவர் நமக்காக இருப்பதையும் செயல்படுவதையும் அறிந்து கொள்ள வேண்டும். அவர் தான் யார் என்று கூறுகிறாரோ அவர் அவராகவே கூறுகிறார், அவருடைய வாக்குறுதிகளை மெய்யாகவே நிறைவேற்றுகிறார். அவர் துன்மார்க்கரைத் தண்டிப்பார். நம்மால் அதைப் பார்க்க முடியாதபோது கூட, அவர் இன்னும் இப்பிரபஞ்சத்தின் சிம்மாசனத்தில் இருக்கிறார். இதில் நாம் தொடர்ந்து கவனம் செலுத்த வேண்டும்: "ஆண்டவராகிய கர்த்தர் என்பெலன்; அவர் என் கால்களை மான்கால்களைப்போலாக்கி, உயரமான ஸ்தலங்களில் என்னை நடக்கப்பண்ணுவார்" (ஆபகூக் 3:19). நாம் உயரத்திற்கு செல்ல உதவுவது, உலகத்திடமிருந்து நாம் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள நிலையில் அவருடன் உயர்ந்த இடங்களுக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. சில சமயங்களில் நம்மைச் சேர்ப்பதற்கு நாம் செல்ல வேண்டிய வழி துன்பம் மற்றும் துக்கம் தான், ஆனால் நாம் அவரில் நிலைத்திருந்து அவரை முழுமனதோடு நம்பினால், அவர் நம்மை இருக்க விரும்புகிற இடத்திற்கு வெளியே வருவோம்.

# 39. செப்பனியா புத்தகம்

## எழுத்தாளர்:

*செப்பனியா 1:1, எஸ்கியாவின் குமாரனாகிய ஆமரியாவுக்குக் குமாரனான கெதலியா என்பவனுடைய மகனாகிய கூஷின் குமாரன் செப்பனியாவுக்கு உண்டான கர்த்தருடைய வசனம் என்று இந்த புத்தகத்தின் எழுத்தாளரை தீர்க்கதரிசியாகிய செப்பனியா என்று அடையாளப்படுத்துகிறது. செப்பனியா என்ற பெயரின் அர்த்தம் "தேவனால் பாதுகாக்கப்பட்டவன்" என்பதாகும்.*

## எழுதப்பட்ட காலம்:

*செப்பனியா புத்தகம் கி.மு. 735 முதல் கி.மு. 725 வரையிலுள்ள காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*செப்பனியாவின் நியாயத்தீர்ப்பு மற்றும் ஊக்கமளித்தல் பற்றிய செய்தி மூன்று முக்கிய கோட்பாடுகளைக் கொண்டுள்ளது: 1) தேவன் எல்லா தேசங்களுக்கும் தேவனாக இருக்கிறார். 2) துன்மார்க்கர் தண்டிக்கப்படுவார்கள், நீதிமான்கள் நியாயத்தீர்ப்பு நாளில் நிரூபிக்கப்படுவார்கள். 3) மனந்திரும்பி, தன்னை நம்புகிறவர்களை தேவன் ஆசீர்வதிப்பார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*செப்பனியா 1:18, "கர்த்தருடைய உக்கிரத்தின் நாளிலே அவர்கள் வெள்ளியும் அவர்கள் பொன்னும் அவர்களைத் தப்புவிக்கமாட்டாது; அவருடைய எரிச்சலின் அக்கினியினால் தேசமெல்லாம் அழியும், தேசத்தின் குடிகளையெல்லாம் சடிதியாய் நிர்மூலம்பண்ணுவார்."*

*செப்பனியா 2:3, "தேசத்திலுள்ள எல்லாச் சிறுமையானவர்களே, கர்த்தருடைய நியாயத்தை நடப்பிக்கிறவர்களே, அவரைத் தேடுங்கள்;*

*நீதியைத் தேடுங்கள், மனத்தாழ்மையைத் தேடுங்கள்; அப்பொழுது ஒருவேளை கர்த்தருடைய கோபத்தின்நாளிலே மறைக்கப்படுவீர்கள்.''*

*செப்பனியா **3:17**, ''உன் தேவனாகிய கர்த்தர் உன் நடுவில் இருக்கிறார்; அவர் வல்லமையுள்ளவர், அவர் இரட்சிப்பார்; அவர் உன்பேரில் சந்தோஷமாய் மகிழ்ந்து, தம்முடைய அன்பினிமித்தம் அமர்ந்திருப்பார்; அவர் உன்பேரில் கெம்பீரமாய்க் களிகூருவார் (மகிழ்வுடன் பாடுவார்).''*

## சுருக்கமான திரட்டு:

*பூமி முழுவதிலும், யூதாவிலும், சுற்றியுள்ள நாடுகளிலும், எருசலேமிலும், எல்லா நாடுகளிலும் மேலும் வரும் கர்த்தருடைய நியாயத்தீர்ப்பை செப்பனியா உச்சரிக்கிறார். இதைத் தொடர்ந்து எல்லா தேசங்களுக்கும் கர்த்தருடைய ஆசீர்வாதத்தின் பிரகடனங்களும், குறிப்பாக யூதாவிலுள்ள எஞ்சியவர்களாகிய உண்மையுள்ள அவருடைய ஜனங்களுக்கு அருளப்போவதையும் விவரிக்கிறது.*

*கர்த்தருடைய வார்த்தையை அறிவிப்பதை அறிந்ததால், அப்படியே உள்ளதை உள்ளபடியாக அப்பட்டமாக பேச செபனியாவுக்கு தைரியம் இருந்தது. அவரது புத்தகம் "கர்த்தருடைய வார்த்தை" என்று தொடங்கி "கர்த்தர் கூறுகிறார்" என்று முடிகிறது. ஜனங்கள் வணங்கிய பல தெய்வங்களோ அல்லது அசீரிய இராணுவத்தின் வலிமையோ கூட அவர்களைக் காப்பாற்ற முடியாது என்பதை அவர் அறிந்திருந்தார். தேவன் கிருபையும் இரக்கமும் உடையவர், ஆனால் அவருடைய எச்சரிக்கைகள் அனைத்தும் புறக்கணிக்கப்படும்போது, நியாயத்தீர்ப்பு எதிர்பார்க்கப்படுகிறது. தேவனுடைய நியாயத்தீர்ப்பு நாள் வேதவசனங்களில் அடிக்கடி குறிப்பிடப்பட்டுள்ளது. தீர்க்கதரிசிகள் அதை "கர்த்தருடைய நாள்" என்று அழைத்தனர். எருசலேமின் வீழ்ச்சி போன்ற பல்வேறு நிகழ்வுகளை அவர்கள் தேவனுடைய நாளின் வெளிப்பாடுகள் என்று குறிப்பிட்டனர், அவை ஒவ்வொன்றும் கர்த்தருடைய இறுதி நாளை சுட்டிக்காட்டின.*

## முன்னிழல்கள்:

*14-20 வரையிலுள்ள வசனங்களில் சீயோனின் இறுதி ஆசீர்வாதம் உச்சரிக்கப்படுகிறது. பெரும்பாலும் நிறைவேறாதவை, இவை கிறிஸ்துவின் இரண்டாம் வருகையை நிறைவுசெய்யக் காத்திருக்கும் மேசியாவைப்பற்றிய தீர்க்கதரிசனங்கள் என்ற முடிவுக்கு இட்டுச் செல்கின்றன. கர்த்தர் தம்முடைய ஜனங்களின் பாவங்களுக்காக மரிக்க வந்த கிறிஸ்துவின் மூலம்தான் நம்முடைய தண்டனையை நீக்கிவிட்டார் (செப்பனியா 3:15; யோவான் 3:16) என்கிறது. ஆனால் இஸ்ரவேல் தனது உண்மையான இரட்சகரை இன்னும் அங்கீகரிக்கவில்லை. இது இன்னும் நடக்கப்போகிறதாக இருக்கிறது (ரோமர் 11:25-27).*

*இஸ்ரவேலுக்கு சமாதானமும் பாதுகாப்பும் பற்றிய வாக்குறுதி, அவர்களுடைய ராஜா அவர்கள் மத்தியில் இருக்கும் காலம், கிறிஸ்து உலகத்தை நியாயந்தீர்க்கவும், அதை தனக்காக மீட்டுக்கொள்ளவும் திரும்பும்போது. அவருடைய உயிர்த்தெழுதலுக்குப் பிறகு அவர் பரலோகத்திற்கு ஏறியதைப் போலவே, அவர் திரும்பி வந்து பூமியில் ஒரு புதிய எருசலேமை அமைப்பார் (வெளி. 21). அந்த நேரத்தில், இஸ்ரேலுக்கான தேவனுடைய வாக்குறுதிகள் அனைத்தும் நிறைவேறும்.*

***நடைமுறை பயன்பாடு:***

*பெயர்கள் மற்றும் சூழ்நிலைகளில் சில மாற்றங்களுடன், கி.மு. 7 ஆம் நூற்றாண்டின் தீர்க்கதரிசியாகிய இவர் இன்று நம்முடைய பிரசங்க மேடைகளில் நின்று, துன்மார்க்கருக்கு வரும் நியாயத்தீர்ப்பின் அதே செய்தியையும், உண்மையுள்ளவர்களுக்கு நம்பிக்கையையும் அளிக்க முடியும். கடவுள் தம்முடைய மக்களின் தார்மீக மற்றும் மத பாவங்களால் புண்படுத்தப்படுகிறார் என்பதை செப்பனியா நமக்கு நினைவூட்டுகிறார். தேவனுடைய மக்கள் வேண்டுமென்றே பாவம் செய்யும்போது தண்டனையிலிருந்து தப்ப மாட்டார்கள். தண்டனை வேதனையாக இருக்கலாம், ஆனால் அதன் நோக்கம் தண்டனைக்கு மாறாக மீட்பாக இருக்கலாம். தீமை தடையற்றது மற்றும் வெற்றி பெற்றது என்று தோன்றும் ஒரு காலத்தில் துன்மார்க்கத்தின் தண்டனையின் தவிர்க்க முடியாத தன்மையானது ஆறுதலளிக்கிறது. தேவனுக்குக் கீழ்ப்படிமல் இருப்பதற்கான சுதந்திரம் நமக்கு இருக்கிறது,*

ஆனால் அந்த கீழ்ப்படியாமையின் விளைவுகளிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கான சுதந்திரம் நமக்கு இல்லை. தேவனுக்கு உண்மையுள்ளவர்கள் ஒப்பீட்டளவில் குறைவாக இருக்கலாம், ஆனால் அவர் அவர்களை மறக்கவில்லை.

# 40. ஆகாய் புத்தகம்

**எழுத்தாளர்:**

*ஆகாய் 1:1, ஆகாய் புத்தகத்தின் எழுத்தாளரை, கர்த்தருடைய வார்த்தை ஆகாய் என்னும் தீர்க்கதரிசியின் மூலமாய் உண்டாகி என்று கூறுவதன் மூலம் அடையாளப்படுத்துகிறது.*

**எழுதப்பட்ட காலம்:**

*ஆகாய் புத்தகம் சுமார் கி.மு. 520 ஆண்டு காலளவில் எழுதப்பட்டதாகும்.*

**எழுதப்பட்டதன் நோக்கம்:**

*ஆகாய் தேவனுடைய மக்களுக்கு அவர்களின் முன்னுரிமைகள் குறித்து சவால் விடுக்க முயன்றவராவார். உள்ளூர் மற்றும் உத்தியோகபூர்வ எதிர்ப்பையும் மீறி ஆலயத்தைக் கட்டுவதன் மூலம் தேவனைப் பயபக்தியுடன் மகிமைப்படுத்த அவர் அவர்களை அழைத்தார். இந்த ஆலயம் சாலமோனின் அலங்காரமாக கட்டப்பட்டதுபோல அலங்கரிக்கப்படாது என்பதால் ஆகாய் அவர்களை சோர்வடைய வேண்டாம் என்று அழைத்தார். அவர்களுடைய வழிகளின் அசுத்தத்திலிருந்து விலகி, தேவனுடைய இறையாண்மை சக்தியை நம்பும்படி அவர் அவர்களுக்கு அறிவுறுத்தினார். இந்த நேரத்தில் தேவனுடைய ஜனம் எதிர்கொண்ட பிரச்சினைகள், ஜனங்கள் எவ்வாறு தைரியமாக தேவன்மீது நம்பிக்கை வைத்தார்கள், தேவன் அவர்களின் தேவைகளுக்கு எவ்வாறு வழங்கினார் என்பதை நினைவூட்டுவதே ஆகாய் புத்தகத்தின் நோக்கமாகும்.*

**திறவுகோல் வசனங்கள்:**

*ஆகாய் 1:4, "இந்த வீடு பாழாய்க் கிடக்கும்போது, நீங்கள் மச்சுப்பாவப்பட்ட உங்கள் வீடுகளில் குடியிருக்கும்படியான காலம் இதுவோ?"*

*ஆகாய் 1:5-6,* *"இப்போதும் சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்: உங்கள் வழிகளைச் சிந்தித்துப்பாருங்கள். நீங்கள் திரளாய் விதைத்தும் கொஞ்சமாய் அறுத்துக்கொண்டுவருகிறீர்கள்; நீங்கள் புசித்தும் திருப்தியாகவில்லை; குடித்தும் பரிபூரணமடையவில்லை; நீங்கள் வஸ்திரம் உடுத்தியும் ஒருவனுக்கும் குளிர்விடவில்லை; கூலியைச் சம்பாதிக்கிறவன் பொத்தலான பையிலே போடுகிறவனாய் அதைச் சம்பாதிக்கிறான்."*

*ஆகாய் 2:9,* *"முந்தின ஆலயத்தின் மகிமையைப் பார்க்கிலும், இந்தப் பிந்தின ஆலயத்தின் மகிமை பெரிதாயிருக்கும் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; இவ்விடத்திலே சமாதானத்தைக் கட்டளையிடுவேன் என்று சேனைகளின் கர்த்தர் உரைக்கிறார் என்று சொல் என்றார்."*

## சுருக்கமான திரட்டு:

*தேவனுடைய ஜனங்கள் தங்கள் முன்னுரிமைகளை மறுபரிசீலனை செய்து, தைரியம் கொண்டு, தேவனுடைய வாக்குறுதிகளின் அடிப்படையில் செயல்படுவார்களா? தம்முடைய வார்த்தைகளுக்கு செவிசாய்க்கும்படி மக்களை எச்சரிக்க தேவன் முயன்றார். தேவன் அவர்களை எச்சரித்தது மட்டுமல்லாமல், தம்மைப் பின்பற்றும்படி அவர்களை ஊக்குவிப்பதற்காக அவர் தம் ஊழியர் ஆகாய் மூலமாகவும் வாக்குறுதிகளை அளித்தார். தேவனுடைய மக்கள் தங்கள் முன்னுரிமைகளை மாற்றியமைத்து, தங்கள் வாழ்க்கையில் தேவனை முதலிடத்தில் வைக்கத் தவறியதால், யூதா பாபிலோனிய தேசத்திற்கு சிறைப்படுத்தப்பட்டு போனது. தானியேலின் ஜெபத்திற்கு பதிலளிக்கும் விதமாகவும், தேவனுடைய வாக்குறுதிகளை நிறைவேற்றுவதற்காகவும், நாடுகடத்தப்பட்ட யூதர்களை மீண்டும் எருசலேமுக்கு செல்ல அனுமதிக்கும்படி தேவன் பெர்சிய ராஜாவான கோரேஸை வழிநடத்தினார். யூதர்களின் ஒரு குழு மிகுந்த மகிழ்ச்சியுடன் தங்கள் தேசத்திற்குத் திரும்பி, தேவனுக்கு தங்கள் வாழ்க்கையில் முதலிடம் கொடுத்து, அவரை வணங்கி, பாலஸ்தீனத்தில் வாழ்ந்த உள்ளூர் மக்களின் உதவியின்றி எருசலேம் ஆலயத்தை மீண்டும் கட்டத் தொடங்கினர். அவர்களின் தைரியமான நம்பிக்கை சுமார் 15*

ஆண்டுகளாக உள்ளூர் மக்களிடமிருந்தும் பெர்சிய அரசாங்கத்திலிருந்தும் பெரும் எதிர்ப்பை சந்தித்தது.

## *முன்னிழல்கள்:*

*சிறிய தீர்க்கதரிசிகளின் பெரும்பாலான புத்தகங்களைப் போலவே, ஆகாய் புத்தகம் மறுசீரமைப்பு மற்றும் ஆசீர்வாத வாக்குறுதிகளுடன் முடிவடைகிறது. கடைசி வசனமான ஆகாய் 2:23-ல், "என் ஊழியக்காரன்" என்று செருபாபேலைக் குறிக்க தேவன் ஒரு தெளிவான மேசியாவின் தலைப்பைப் பயன்படுத்துகிறார் (2 சாமுவேல் 3:18; 1 ராஜா. 11:34; ஏசாயா 42:1—9; எசேக்கியேல் 37:24, 25). ஆகாய் மூலம், தேவன் அவரை ஒரு முத்திரை மோதிரம் போல ஆக்குவார் என்று உறுதியளிக்கிறார், இது கனம், அதிகாரம் மற்றும் வல்லமையின் அடையாளமாக இருந்தது, கடிதங்கள் மற்றும் கட்டளைகளை முத்திரையிட பயன்படுத்தப்படும் ஒரு ராஜாவின் செங்கோல் போன்றது. தேவனுடைய முத்திர வளையமாக, செருபாபேல், தாவீதின் வீட்டைக் குறிக்கிறது மற்றும் நாடுகடத்தப்பட்டதால் இடையூறுக்குள்ளான மேசியாவின் வம்சாவளியை மீண்டும் தொடங்குகிறது. கிறிஸ்துவின் ஆயிரமாண்டு ஆட்சியில் உச்சக்கட்டத்தை அடையும் தாவீதின் வழியில் வந்த ராஜாக்களின் வரிசையை செருபாபேல் மீண்டும் நிறுவினார். யோசேப்பின் பக்கத்திலும் (மத் 1:12) மரியாளின் பக்கத்திலும் (லூக்கா 3:27) என கிறிஸ்துவின் வரிசையில் செருபாபேல் தோன்றுகிறார்.*

## *நடைமுறை பயன்பாடு:*

*ஆகாய் புத்தகம் இன்றும் பெரும்பாலான மக்கள் எதிர்கொள்ளும் பொதுவான பிரச்சினைகளுக்கு கவனத்தை ஈர்க்கிறது. ஆகாய் நம்மிடம் கேட்கிறார்: 1) தேவனுடைய வேலையைச் செய்வதை விட நம்முடைய சொந்த இன்பங்களில் நாம் அதிக அக்கறை கொண்டிருக்கிறோமா என்று பார்த்து நமது முன்னுரிமைகளை ஆராயவேண்டும்; 2) நாம் எதிர்ப்பில் ஈடுபடும்போது அல்லது சூழ்நிலைகளை ஊக்கப்படுத்தும் போது தோல்வியுற்ற அணுகுமுறையை நிராகரிக்க வேண்டும்; 3) நம்முடைய தோல்விகளை ஒப்புக்கொண்டு, தேவனுக்கு முன்பாக பரிசுத்தமான*

*வாழ்க்கையை வாழ முற்படவேண்டும்; 4) தேவனுக்காக தைரியமாக செயல்படவேண்டும், ஏனென்றால் அவர் எப்போதும் நம்முடன் இருக்கிறார், நம்முடைய சூழ்நிலைகளை முழுமையாகக் கட்டுப்படுத்துகிறார் என்ற உறுதி நமக்கு இருக்கிறது; மற்றும் 5) நாம் அவரை உண்மையாக சேவிக்கும்போது அவர் நம்மை தாராளமாக ஆசீர்வதிப்பார் என்பதை அறிந்து தேவனுடைய கைகளில் பாதுகாப்பாக சார்ந்து/சாய்ந்து கொள்ளவேண்டும்.*

# 41. சகரியா புத்தகம்

**எழுத்தாளர்:**

*சகரியா 1:1, சகரியா புத்தகத்தின் எழுத்தாளரை இத்தோவின் மகனான பெரகியாவின் குமாரனாகிய சகரியாவுக்கு உண்டான கர்த்தருடைய வார்த்தை என்று அடையாளப்படுத்துகிறது.*

**எழுதப்பட்ட காலம்:**

*சகரியா புத்தகம் கி.மு. 520 முதல் கி.மு. 470 வரையிலுள்ள காலக்கட்டத்தில் இரண்டு முதன்மை பிரிவுகளில் எழுதப்பட்டிருக்கலாம்.*

**எழுதப்பட்டதன் நோக்கம்:**

*தம்முடைய ஜனத்தினை கற்பிக்கவும், எச்சரிக்கவும், திருத்தவும் தேவன் தம்முடைய தீர்க்கதரிசிகளைப் பயன்படுத்தினார் என்று சகரியா வலியுறுத்தினார். துரதிர்ஷ்டவசமாக, அவர்கள் கேட்க மறுத்துவிட்டார்கள். அவர்கள் செய்த பாவம் தேவனுடைய தண்டனையைக் கொண்டு வந்தது. தீர்க்கதரிசனம் கூட சீர்கேட்டிற்குள்ளாக சென்று சிதைக்கப்படலாம் என்பதற்கான சான்றுகளையும் இந்த புத்தகம் கொண்டுள்ளது. இந்த காலகட்டத்தில் தீர்க்கதரிசனம் யூதர்களிடையே வெறுப்பை ஏற்படுத்தியது என்று வரலாறு காட்டுகிறது, இந்த காரியம் தேவனுடைய மக்களிடம் நீடித்த நாட்கள் அல்லது காலமாக தீர்க்கதரிசனக் குரல் எதுவும் பேசாத/கேட்காத ஏற்பாட்டின் இடையேயான காலத்திற்கு வழிவகுத்தது.*

**திறவுகோல் வசனங்கள்:**

*சகரியா 1:3, "ஆகையால் நீ அவர்களை நோக்கி: சேனைகளின் கர்த்தர் உரைக்கிறது என்னவென்றால்: என்னிடத்தில் திரும்புங்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; அப்பொழுது நான் உங்களிடத்துக்குத் திரும்புவேன் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்."*

*சகரியா 7:13, "ஆதலால் நான் கூப்பிட்டபோது, அவர்கள் எப்படி கேளாமற்போனார்களோ அப்படியே அவர்கள் கூப்பிட்டபோது நானும் கேளாமலிருந்தேனென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்."*

*சகரியா 9:9, "சீயோன் குமாரத்தியே, மிகவும் களிகூரு; எருசலேம் குமாரத்தியே, கெம்பீரி; இதோ, உன் ராஜா உன்னிடத்தில் வருகிறார்; அவர் நீதியுள்ளவரும் இரட்சிக்கிறவரும் தாழ்மையுள்ளவரும், கழுதையின்மேலும் கழுதைக்குட்டியாகிய மறியின்மேலும் ஏறிவருகிறவருமாயிருக்கிறார்."*

*சகரியா 13:9, "அந்த மூன்றாம் பங்கை நான் அக்கினிக்குட்படப்பண்ணி, வெள்ளியை உருக்குகிறதுபோல அவர்களை உருக்கி, பொன்னைப் புடமிடுகிறதுபோல அவர்களைப் புடமிடுவேன்; அவர்கள் என் நாமத்தைத் தொழுதுகொள்வார்கள்; நான் அவர்கள் விண்ணபத்தைக் கேட்பேன்; இது என் ஜனமென்று நான் சொல்லுவேன், கர்த்தர் என் தேவனென்று அவர்கள் சொல்லுவார்கள்."*

**சுருக்கமான திரட்டு:**

*இரட்சிப்பு அனைவராலும் பெறப்படலாம் என்று சகரியா புத்தகம் கற்பிக்கிறது. கடைசி அதிகாரத்தில் உலகெங்கிலுமுள்ள ஜனங்கள் தேவனை நமஸ்கரித்து வணங்க வருகிறார்கள், எல்லா மக்களும் அவரைப் பின்பற்ற வேண்டும் என்று விரும்புகிறார்கள் என்பதை விவரிக்கிறது. இது உலகளாவிய கோட்பாடு அல்ல, அதாவது, எல்லா மக்களும் இரட்சிக்கப்படுவார்கள் என்பதல்ல, ஏனெனில் இது தேவனுடைய இயல்பாகும். மாறாக, தேசிய அல்லது அரசியல் வெளிப்பாடுகளைப் பொருட்படுத்தாமல், எல்லா மக்களும் தன்னை வணங்குவதையும், ஏற்றுக்கொள்வதையும் தேவன் விரும்புகிறார் என்று புத்தகம் கற்பிக்கிறது. இறுதியாக, சகரியா தேவன் இந்த உலகத்தின் மீது இறையாண்மை உடையவர் என்று பிரசங்கித்தார், மாறாக எந்தவொரு தோற்றமும் இல்லை. எதிர்காலத்தைப் பற்றிய அவரது தரிசனங்கள், நடக்கும் அனைத்தையும் தேவன் காண்கிறார் என்பதைக் குறிக்கிறது. உலகில் தேவனுடைய தலையீட்டின் சித்தரிப்புகள் இறுதியில் அவர்*

தேர்ந்தெடுக்கும் மனித நிகழ்வுகளை அவர் கொண்டு வருவார் என்று கற்பிக்கிறது. தேவனைப் பின்பற்றவோ அல்லது கிளர்ச்சி செய்யவோ தனிநபரின் சுதந்திரத்தை அவர் அகற்றுவதில்லை, ஆனால் அவர்கள் செய்யும் தேர்வுகளுக்கு ஜனங்களே பொறுப்பேற்கிறார்கள். கடைசி அதிகாரத்தில், இயற்கையின் சக்திகள் கூட தேவனுடைய கட்டுப்பாட்டுக்கு அடங்கி பதிலளிக்கின்றன.

## முன்னிழல்கள்:

இயேசு கிறிஸ்து மற்றும் மேசியாவின் சகாப்தம் பற்றிய தீர்க்கதரிசனங்கள் சகரியாவில் உள்ளன. மேசியா வந்து நம் நடுவில் வசிப்பார் என்ற வாக்குறுதியிலிருந்து (சகரியா 2:10-12; மத்தேயு 1:23) கிளை மற்றும் கல் ஆகியவற்றின் அடையாளத்திற்கு (சகரியா 3:8-9, 6:12-13; ஏசாயா 11: 1; லூக்கா 20:17-18) அவருடைய இரண்டாவது வருகையின் வாக்குறுதியின்படி, அவரைத் குத்தினவர்கள் அவரைப் பார்த்து துக்கப்படுவார்கள் (சகரியா 12:10; யோவான் 19: 33-37), கிறிஸ்து தான் இந்த சகரியா புத்தகத்தின் கருப்பொருளாக இருக்கிறார். இயேசு இஸ்ரவேலின் இரட்சகராக இருக்கிறார், இரட்சிப்புக்காக தன்னிடம் வரும் அனைவரின் பாவங்களையும் இரத்தம் உள்ளடக்கிய ஒரு நீரூற்று கழுவுகிறது (சகரியா 13:1; 1 யோவான் 1:7).

## நடைமுறை பயன்பாடு:

இன்று நம்முடைய மெய்யான வழிபாட்டையும் தார்மீக வாழ்வையும் தேவன் எதிர்பார்க்கிறார். தேசிய தப்பெண்ணத்தை மீறுவதற்கான சகரியாவின் உதாரணம் நமது சமூகத்தின் அனைத்து பகுதிகளையும் சென்றடைய நினைவூட்டுகிறது. தேவனுடைய இரட்சிப்பின் அழைப்பை அனைத்து தேசிய தோற்றங்கள், மொழிகள், இனங்கள் மற்றும் கலாச்சாரங்களைச் சேர்ந்தவர்களுக்கு நாம் வழங்க வேண்டும். அந்த இரட்சிப்பு சிலுவையில் இயேசு கிறிஸ்துவின் சிந்தப்பட்ட இரத்தத்தின் மூலம் மட்டுமே கிடைக்கிறது, அவர் பாவத்திற்கு பரிகாரம் செய்ய நம் இடத்தில்/ஸ்தானத்தில் மரித்தார். ஆனால், அந்த பலியை நாம் நிராகரித்தால், வேறு எந்த பலியும் இல்லை, இதன் மூலம் நாம்

தேவனோடு ஒப்புரவாக முடியும். மனிதர்கள் இரட்சிக்கப்படுவதற்கு வானத்தின் கீழ் வேறு நாமம் கொடுக்கப்படவில்லை (அப்போஸ்தலர் *4:12*). நாம் இழப்பதற்கு நேரமில்லை; இன்றே இரட்சிப்பின் நாள் (2 கொரிந்தியர் *6:2*).

# *42. மல்கியா புத்தகம்*

### *எழுத்தாளர்:*

*மல்கியா 1:1, மல்கியா புத்தகத்தின் எழுத்தாளரை மல்கியாவைக்கொண்டு கர்த்தர் இஸ்ரவேலுக்குச் சொன்ன வார்த்தையின் பாரம் என்று குறிப்பிட்டு அடையாளப்படுத்துகிறது.*

### *எழுதப்பட்ட காலம்:*

*மல்கியா புத்தகம் கி.மு. 440 முதல் கி.மு. 400 வரையிலுள்ள காலக்கட்டத்தினுடைய இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

### *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*மல்கியா புத்தகம் மல்கியாவைக்கொண்டு கர்த்தர் இஸ்ரவேலுக்குச் சொன்ன வார்த்தையின் பாரம் ஆகும் (1:1). தேவனிடம் திரும்பும்படி மக்களுக்குச் சொல்ல இது மல்கியா வழியாக உரைக்கப்பட்ட தேவனுடைய எச்சரிக்கையாக இருந்தது. பழைய ஏற்பாட்டின் இறுதி புத்தகம் முடிவடையும் போது, தேவனுடைய நீதியின் அறிவிப்பும், வரவிருக்கும் மேசியா மூலம் அவர் மீட்கப்படுவதற்கான வாக்குறுதியும் இஸ்ரவேலரின் செவிகளில் ஒலிக்கிறது. நானூறு ஆண்டுகால மௌனம் தேவனுடைய அடுத்த தீர்க்கதரிசியாகிய யோவான் ஸ்நானகனிடமிருந்து இதேபோன்ற செய்தியுடன் முடிவடைகிறது, "மனந்திரும்புங்கள், பரலோகராஜ்யம் சமீபமாக இருக்கிறது" (மத்தேயு 3:2).*

### திறவுகோல் வசனங்கள்:

*மல்கியா 1:6, "குமாரன் தன் பிதாவையும், ஊழியக்காரன் தன் எஜமானையும் கனம்பண்ணுகிறார்களே; நான் பிதாவானால் என் கனம் எங்கே? நான் எஜமானானால் எனக்குப் பயப்படும் பயம் எங்கே என்று சேனைகளின் கர்த்தர் தமது நாமத்தை அசட்டைபண்ணுகிற ஆசாரியர்களாகிய உங்களைக் கேட்கிறார்; அதற்கு நீங்கள் உமது நாமத்தை எதினாலே அசட்டைபண்ணினோம் என்கிறீர்கள்."*

*மல்கியா **3:6-7**, "நான் கர்த்தர் நான் மாறாதவர்; ஆகையால் யாக்கோபின் புத்திரராகிய நீங்கள் நிர்மூலமாகவில்லை. நீங்கள் உங்கள் பிதாக்களின் நாட்கள் தொடங்கி என் கட்டளைகளைக் கைக்கொள்ளாமல், அவைகளைவிட்டு விலகிப்போனீர்கள்; என்னிடத்திற்குத் திரும்புங்கள், அப்பொழுது உங்களிடத்திற்குத் திரும்புவேன் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; நாங்கள் எந்த விஷயத்தில் திரும்பவேண்டும் என்கிறீர்கள்."*

## சுருக்கமான திரட்டு:

*வழிதவறிச் சென்ற தேவனுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களுக்கு, குறிப்பாக தேவனிடமிருந்து திரும்பிய ஆசாரியர்களுக்கு மல்கியா தேவனுடைய வார்த்தைகளை எழுதினார். ஆசாரியர்கள் அவர்கள் தேவனுக்கு செய்த பலிகளை பெரிதாக கருதவில்லை/நடத்தவில்லை. குறைபாடு இல்லாத விலங்குகளை நியாயப்பிரமாண சட்டம் கோரிய போதிலும் கறைகள்/குறைபாடுகள் உள்ள மிருகங்கள் பலியிடப்பட்டன (உபாகமம் **15:21**). யூதாவின் ஆண்கள் தங்கள் இளமைக்கால மனைவிகளுடன் துரோகமாக நடந்துகொண்டார்கள், தேவன் பலிகளை ஏன் ஏற்றுக்கொள்ள மாட்டார் என்று யோசித்துக்கொண்டிருந்தார்கள். மேலும், மக்கள் இருந்திருக்க வேண்டிய அளவுக்கு தசமபாகம் செலுத்தவில்லை (லேவியராகமம் **27:30, 32**). ஆனால் மக்கள் செய்த பாவம் இருந்தபோதிலும், தேவனிடமிருந்து விலகிச் சென்றாலும், மல்கியா தேவனுடைய மக்கள் மீதுள்ள அன்பை மீண்டும் வலியுறுத்துகிறார் (மல்கியா **1:1-5**) மற்றும் வரவிருக்கும் செய்தியாளரைக் பற்றிய வாக்குறுதிகள் (மல்கியா **2:17—3: 5**) கொடுக்கப்பட்டுள்ளன.*

## முன்னிழல்கள்:

*மல்கியா **3:1-6** வரையிலுள்ள வேதபாகம் யோவான் ஸ்நானகனைப் பற்றிய ஒரு தீர்க்கதரிசனமாகும். மேசியாவாகிய இயேசு கிறிஸ்துவுக்கு வழியை ஆயத்தம் பண்ணுவதற்காக அனுப்பப்பட்ட கர்த்தருடைய தூதுவர் அவர் (மத்தேயு **11:10**). யோவான் மனந்திரும்புதலைப் பிரசங்கித்து, கர்த்தருடைய நாமத்தில் ஞானஸ்நானம் வழங்கினார்,*

இதனால் இயேசுவின் முதல் வருகைக்கு வழியை ஆயத்தம் பண்ணினார். ஆனால் "திடீரென்று ஆலயத்திற்கு" வரும் தூதுவர் கிறிஸ்துவே அதிகாரத்திலும் வல்லமையிலும் வரும்போது தனது இரண்டாவது வருகையில் தானே அப்படியாகும் (மத்தேயு 24). அந்த நேரத்தில், அவர் "லேவியின் புத்திரர்களைத் பரிசுத்தப்படுத்துவார்" (வச. 3), அதாவது மோசேயின் நியாயப்பிரமாணத்தை எடுத்துக்காட்டுவோர் இரட்சகரின் இரத்தத்தின் மூலம் பாவத்திலிருந்து சுத்திகரிப்பை தேவைப்படுவார்கள். அப்போதுதான் அவர்களால் "நீதியிலுள்ள ஒரு பலியை" வழங்க முடியும், ஏனென்றால் அது விசுவாசத்தின் மூலம் அவர்களுக்கு விதிக்கப்பட்ட கிறிஸ்துவின் நீதியாகும் (2 கொரிந்தியர் 5:21).

## நடைமுறை பயன்பாடு:

நாம் அவருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாதபோது தேவன் மகிழ்ச்சியடைவதில்லை. தன்னைப் புறக்கணிப்பவர்களுக்கு அவர் திருப்பிப் பதில் செய்வார். தேவன் விவாகரத்தை வெறுப்பதைப் பொறுத்தவரை (2:16), திருமண உடன்படிக்கையை தேவன் தீவிரமாக எடுத்துக்கொள்கிறார், அதை உடைக்க அவர் விரும்பவில்லை என்பது தெளிவாக விளங்குகிறது. நம் வாலிப வாழ்க்கைத் துணையுடன் வாழ்நாள் முழுவதும் உண்மையாக இருக்க வேண்டும். தேவன் நம் இருதயங்களைக் காண்கிறார், எனவே நம்முடைய நோக்கங்கள் என்ன என்பதை அவர் அறிவார்; அவரிடமிருந்து எதையும் மறைக்க முடியாது. அவர் திரும்பி வருவார், அவர் நீதியுள்ள நீதிபதியாக இருப்பார். ஆனால் நாம் அவரிடம் திரும்பினால், அவர் நம்மிடம் திரும்புவார் (மல்கியா 3:6).

# 43. மத்தேயு எழுதின சுவிசேஷம்

## எழுத்தாளர்:

இந்த சுவிசேஷப் புத்தகம் மத்தேயு எழுதின சுவிசேஷம் என்று அழைக்கப்படுகிறது, ஏனெனில் அது அதே பெயரில் உள்ள மத்தேயு என்னும் அப்போஸ்தலரால் எழுதப்பட்டதாகும். ஒரு காலத்தில் வரி வசூலித்த ஒரு மனிதரிடம் எதிர்பார்க்கப்படுவதுதான் இந்த புத்தகத்தின் பாணியாகும். மத்தேயு கணக்கியலில் மிகுந்த ஆர்வம் கொண்டவர் (18:23-24; 25:14-15). புத்தகம் மிகவும் ஒழுங்காகவும் சுருக்கமாகவும் மிகவும் நேர்த்தியாகவும் இருக்கிறது. காலவரிசைப்படி எழுதுவதற்கு பதிலாக, மத்தேயு இந்த சுவிசேஷத்தை ஆறு கலந்துரையாடல்கள் மூலம் ஏற்பாடு செய்கிறார்.

வரி வசூலிப்பவர் என்ற முறையில், மத்தேயு ஒரு திறமையைக் கொண்டிருந்தார், அது அவருடைய எழுத்தை கிறிஸ்தவர்களுக்கு மிகவும் உற்சாகப்படுத்துகிறது. வரி வசூலிப்பவர்கள் சுருக்கெழுத்தின் வடிவத்தில் எழுத முடியும் என்று எதிர்பார்க்கப்பட்டது, இதன் பொருள் மத்தேயு ஒரு நபரின் வார்த்தைகளை அவர்கள் பேசும்போது, அதே வார்த்தைக்கான வார்த்தையை துல்லியமாக பதிவு செய்ய முடியும் என்பதாகும். இந்த திறன் என்பது மத்தேயுவின் வார்த்தைகள் பரிசுத்த ஆவியினால் ஏவப்பட்டவை என்பது மட்டுமல்ல, கிறிஸ்துவின் சில பிரசங்கங்களின் உண்மையான பிரதியெடுத்தலையும் குறிக்க வேண்டும். உதாரணமாக, 5-7 வரையிலுள்ள அதிகாரங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளபடி, மலைப்பிரசங்கம், நிச்சயமாக அந்த சிறந்த மாபெரும் செய்தியின் சரியான மற்றும் தெளிவான பதிவாகும்.

## எழுதப்பட்ட காலம்:

ஒரு அப்போஸ்தலராக, மத்தேயு இந்த புத்தகத்தை திருச்சபையின் ஆரம்ப காலத்தில் எழுதினார், அநேகமாக கி.பி. 50-ல் இந்த புத்தகத்தை அவர் எழுதினார். பெரும்பாலான கிறிஸ்தவர்கள் யூத மதத்திற்கு மதமாற்றம்

*செய்த காலமாக இது இருந்தது, எனவே இந்த நற்செய்தியில் யூதர்களின் பார்வையில் மத்தேயு அதிக கவனம் செலுத்துவது புரிந்துகொள்ளத்தக்கது.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*இயேசு கிறிஸ்து வாக்களிக்கப்பட்ட மேசியா என்பதை யூதர்களுக்கு நிரூபிக்க மத்தேயு விரும்புகிறார். வேறு எந்த நற்செய்தியையும் விட, யூத தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளை இயேசு எவ்வாறு நிறைவேற்றினார் என்பதைக் காட்ட பழைய ஏற்பாட்டை மேற்கோள் காட்டுகிறார் அப்போஸ்தலனாகிய மத்தேயு. மத்தேயு தாவீதிடமிருந்து இயேசுவின் வம்சாவளியை/பரம்பரையை விரிவாக விவரிக்கிறார், மற்றும் யூதர்கள் புரிந்துகொள்வதற்கு மிகவும் வசதியாக இருக்கும் நிலையில் பல வகையான உருவகப் பேச்சுகளைப் பயன்படுத்துகிறார். நற்செய்தி விவரணங்களை சொல்வதற்கான அவரது நுணுக்கமான அணுகுமுறையின் மூலம் மத்தேயுவின் மக்கள் மீதுள்ள கொண்டுள்ள அவருடைய அன்பும் அக்கறையும் தெளிவாகத் தெரிகிறது.*

## *திறவுகோல் வசனங்கள்:*

*மத்தேயு **5:17:** "நியாயப்பிரமாணத்தையானாலும் தீர்க்கதரிசனங்களையானாலும் அழிக்கிறதற்கு வந்தேன் என்று எண்ணிக்கொள்ளாதேயுங்கள்; அழிக்கிறதற்கு அல்ல, நிறைவேற்றுகிறதற்கே வந்தேன்."*

*மத்தேயு **5:43-44:** "உனக்கடுத்தவனைச் சிநேகித்து, உன் சத்துருவைப் பகைப்பாயாக என்று சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்குச் சொல்லுகிறேன், உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள்."*

*மத்தேயு **6:9-13:** "நீங்கள் ஜெபம்பண்ணவேண்டிய விதமாவது; பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம்*

*பரிசுத்தப்படுவதாக; உம்முடைய ராஜ்யம் வருவதாக; உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறதுபோல பூமியிலேயும் செய்யப்படுவதாக.*

*எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும். எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறதுபோல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும். எங்களைச் சோதனைக்குட்படப்பண்ணாமல், தீமையினின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும், ராஜ்யமும், வல்லமையும், மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே, ஆமென், என்பதே.''*

*மத்தேயு **16:26:** ''மனுஷன் உலகம் முழுவதையும் ஆதாயப்படுத்திக்கொண்டாலும், தன் ஜீவனை நஷ்டப்படுத்தினால் அவனுக்கு லாபம் என்ன? மனுஷன் தன் ஜீவனுக்கு ஈடாக என்னத்தைக் கொடுப்பான்?''*

*மத்தேயு **22:37-40:** ''இயேசு அவனை நோக்கி: உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு மனதோடும் அன்புகூருவாயாக; இது முதலாம் பிரதான கற்பனை. இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், உன்னிடத்தில் நீ அன்புகூருவதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்பதே. இவ்விரண்டு கற்பனைகளிலும் நியாயப்பிரமாணம் முழுமையும் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கிறது என்றார்.''*

*மத்தேயு **27:31:** ''அவரைப் பரியாசம்பண்ணினபின்பு, அவருக்கு உடுத்தின மேலங்கியைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி, அவரைச் சிலுவையில் அறையும்படி கொண்டுபோனார்கள்.''*

*மத்தேயு **28:5-6:** ''தூதன் அந்த ஸ்திரீகளை நோக்கி: நீங்கள் பயப்படாதிருங்கள்; சிலுவையில் அறையப்பட்ட இயேசுவைத் தேடுகிறீர்கள் என்று அறிவேன். அவர் இங்கே இல்லை; தாம் சொன்னபடியே உயிர்த்தெழுந்தார்; கர்த்தரை வைத்த இடத்தை வந்து பாருங்கள்.''*

மத்தேயு 28:19-20: "ஆகையால், நீங்கள் புறப்பட்டுப்போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்; இதோ, உலகத்தின் முடிவுபரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனேகூட இருக்கிறேன் என்றார். ஆமென்."

## சுருக்கமான திரட்டு:

முதல் இரண்டு அதிகாரங்களில் கிறிஸ்துவின் வம்சாவளி, பிறப்பு மற்றும் ஆரம்பகால வாழ்க்கை குறித்து மத்தேயு கலந்துரையாடுகிறார். அங்கிருந்து, புத்தகம் இயேசுவின் ஊழியத்தைப் பற்றி கலந்துரையாடுகிறது. கிறிஸ்துவின் போதனைகளின் விளக்கங்கள் 5 முதல் 7 அதிகாரங்களில் உள்ள மலைப்பிரசங்கம் போன்ற "சொற்பொழிவுகளை" சுற்றி அமைக்கப்பட்டிருக்கின்றன. 10-ஆம் அதிகாரம் சீஷர்களின் ஊழியம் மற்றும் நோக்கத்தை உள்ளடக்கியது; 13-வது அதிகாரம் உவமைகளின் தொகுப்பு; 18-வது அதிகாரம் திருச்சபையைப் பற்றி கலந்துரையாடுகிறது; 23-ஆம் அதிகாரம் மாய்மாலத்தனம் மற்றும் எதிர்காலம் பற்றிய ஒரு சொற்பொழிவைத் தொடங்குகிறது. 21 முதல் 27 வரையிலுள்ள அதிகாரங்கள் இயேசுவைக் கைது செய்தல், சித்திரவதை செய்தல் மற்றும் சிலுவையில் மரணதண்டனை அடைதல் பற்றி மிகவும் தெளிவாக விரிவாக விவாதிக்கின்றன. இறுதி அதிகாரம் (28-ஆம் அதிகாரம்) இயேசுவின் உயிர்த்தெழுதல் மற்றும் அவர் அளிக்கும் பிரதான ஆணையத்தை விவரிக்கிறது.

## இணைப்புகள்:

இயேசு கிறிஸ்துவை இஸ்ரவேலின் ராஜாவாகவும் மேசியாவாகவும் முன்வைப்பதே மத்தேயுவின் பிரதான நோக்கம் என்பதால், அவர் மற்ற மூன்று சுவிசேஷ புத்தகங்களின் எழுத்தாளர்களைக் காட்டிலும் பழைய ஏற்பாட்டில் இருந்து அதிக்கப்படியான காரியங்களை மேற்கோள் காட்டுகிறார். அப்போஸ்தலனாகிய மத்தேயு பழைய ஏற்பாட்டின் தீர்க்கதரிசன பத்திகளில் இருந்து 60-க்கும் மேற்பட்ட முறைகள்

மேற்கோள் காட்டி, இயேசு அவற்றை எவ்வாறு நிறைவேற்றினார் என்பதை நிரூபிக்கிறார். அவர் இயேசுவின் வம்சாவளியைக் கொண்டு தனது நற்செய்தியைத் தொடங்குகிறார், யூதர்களின் முற்பிதாக்களான ஆபிரகாமிடம் இருந்து துவங்குகிறார். அங்கிருந்து, மத்தேயு தீர்க்கதரிசிகளிடமிருந்து விரிவாக மேற்கோள் காட்டுகிறார், "தீர்க்கதரிசி (கள்) மூலம் பேசப்பட்டதைப் போல" (மத்தேயு 1:22-23, 2:5-6, 2:15, 4:13-16, 8:16-17, 13:35, 21:4-5). இந்த வசனங்கள் பெத்லகேமில் (மீகா 5:2), கன்னிப் பிறப்பின் பழைய ஏற்பாட்டு தீர்க்கதரிசனங்களைக் குறிக்கின்றன (ஏசாயா 7:14), ஏரோது இறந்தபின் எகிப்திலிருந்து அவர் திரும்பினது (ஓசியா 11:1), புறஜாதியினருக்கு அவர் செய்த ஊழியம் (ஏசாயா 9:1-2; 60:1-3), சரீரம் மற்றும் ஆத்துமா இரண்டையும் அவர் அற்புதமாகக் குணப்படுத்துகிறார் (ஏசாயா 53:4), அவர் உவமைகளில் பேசுதல் (சங்கீதம் 78:2), எருசலேமுக்கு அவர் வெற்றிகரமாக பவனி வந்து நுழைதல் (சகரியா 9:9) போன்றவைகள் இதில் அடங்கும்.

## நடைமுறை பயன்பாடு:

மத்தேயு நற்செய்தி கிறிஸ்தவத்தின் முக்கிய போதனைகளுக்கு ஒரு சிறந்த அறிமுகமாகும். தர்க்கரீதியான திட்டவரைவு பாணி பல்வேறு தலைப்புகளின் விவாதங்களைக் கண்டறிவதை எளிதாக்குகிறது. பழைய ஏற்பாட்டின் தீர்க்கதரிசனங்களின் நிறைவேற்றமாக கிறிஸ்துவின் வாழ்க்கை எவ்வாறு இருந்தது என்பதைப் புரிந்துகொள்ள மத்தேயு மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது.

மத்தேயுவின் கருத்தில் கொண்ட வாசகர்கள் அவருடைய சக யூதர்கள் ஆகும், அவர்களில் பலர் - குறிப்பாக பரிசேயர்கள் மற்றும் சதுசேயர்கள் ஆகும் - இயேசுவை தங்கள் மேசியாவாக ஏற்றுக்கொள்வதற்கு பிடிவாதமாக மறுத்துவிட்டனர். பழைய ஏற்பாட்டைப் பல நூற்றாண்டுகள் படித்து படித்து அதில் ஊறிப்போனவர்களாக அவர்கள் இருந்தபோதிலும், இயேசு யார் என்ற உண்மையை அறிந்துகொள்ளும் விஷயத்தில் சரிவர புரிந்துகொள்ள முடியாமல் அவர்களின் கண்கள் கண்மூடி மறைக்கப்பட்ட நிலையில் இருந்தன. அவர்களுடைய கடினமான இருதயங்களுக்காகவும், அவர்கள் எதிர்பார்த்து

*காத்திருந்ததாகக் கருதப்பட்டவரை அடையாளம் காண மறுத்ததற்காகவும் இயேசு அவர்களை வன்மையாகக் கண்டித்தார் (யோவான் 5:38-40). அவர்கள் தங்கள் சொந்த விருப்பப்படி விளங்கும் ஒரு மேசியாவையே விரும்பினர், அவர்கள் தங்கள் சொந்த விருப்பங்களை நிறைவேற்றி, அவர்கள் என்ன செய்ய வேண்டுமோ அதைமட்டுமே செய்தார்கள். நம்முடைய சொந்த சொற்களில் நாம் எத்தனை முறை தேவனை நாடுகிறோம்? நாம் ஏற்றுக்கொள்ளக்கூடியதாகக் கருதப்படும் பண்புகளை, அவரின் அன்பு, இரக்கம், கிருபை போன்றவற்றை மட்டுமே அவரிடம் குறிப்பிடுவதன் மூலம் மற்றும் அதேவேளையில் அவருடைய கோபம், நியாயம் மற்றும் பரிசுத்த கோபத்தையும் நிராகரிக்க வேண்டாமா? பரிசேயர்களின் அதே தவறை நாமும் செய்யத் துணியவில்லை, தேவனை நம்முடைய சாயலில் படைத்து, பின்னர் அவர் நம்முடைய தரத்திற்கு ஏற்ப வாழ்வார் என்று எதிர்பார்க்கிறோம். அத்தகைய தேவன் ஒரு விக்கிரகத்தைத் தவிர வேறில்லை. நம்முடைய ஆராதனைக்கும் கீழ்ப்படிதலுக்கும் உத்தரவாதமளிக்க தேவன் மற்றும் இயேசு கிறிஸ்துவின் உண்மையான தன்மை மற்றும் அடையாளம் பற்றிய போதுமான தகவல்களை வேதாகமம் நமக்கு அளிக்கிறது.*

# *44. மாற்கு எழுதின சுவிசேஷம்*

## *எழுத்தாளர்:*

*மாற்கு எழுதின சுவிசேஷம் அதன் எழுத்தாளரின் பெயரைக் குறிப்பாக குறிப்பிடவில்லை என்றாலும், ஆரம்பகால திருச்சபை பிதாக்களின் ஏகமனதான சாட்சியம் யோவான் மாற்கு தான் இதன் எழுத்தாளராக இருந்தார் என்பதாகும். அவர் அப்போஸ்தலனாகிய பேதுருவின் சக கூட்டாளியாக இருந்தார், அவருடைய ஆவிக்குரிய மகன் ஆவார் (1 பேதுரு 5:13). பேதுருவிடமிருந்து அவர் கர்த்தருடைய நிகழ்வுகள் மற்றும் போதனைகள் பற்றிய முதல் தகவல்களைப் பெற்றார், மேலும் தகவல்களை எழுத்து வடிவில் பாதுகாத்தார்.*

*மாற்கு என்பது புதிய ஏற்பாட்டின் யோவான் மாற்கு என்று பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது (அப்போஸ்தலர் 12:12). அவரது தாயார் எருசலேம் திருச்சபையில் ஒரு பணக்கார மற்றும் முக்கிய கிறிஸ்தவராக இருந்தார், அநேகமாக திருச்சபையானது அவரது வீட்டில் கூடிவந்தது. மாற்கு பவுல் மற்றும் பர்னபாவுடன் முதல் மிஷனரி பயணத்தில் சேர்ந்தார், ஆனால் இரண்டாவது மிஷினரி பயணத்தில் பங்குபெறவில்லை காரணம் இருவருக்கும் (பவுல் மற்றும் பர்னபா) இடையில் கடுமையான கருத்து வேறுபாடு இருந்தது (அப்போஸ்தலர் 15:37-38). இருப்பினும், பவுலினுடைய வாழ்க்கையின் முடிவில் (இறுதி காலத்தில்), மாற்கு தன்னுடன் இருக்கும்படி அவர் அழைத்தார் (2 தீமோத்தேயு 4:11).*

## *எழுதப்பட்ட காலம்:*

*மாற்கு எழுதின சுவிசேஷம் புதிய ஏற்பாட்டில் எழுதப்பட்ட முதல் புத்தகங்களில் ஒன்றாகும், அநேகமாக கி.பி. 57-59 வரையிலுள்ள காலக்கட்டத்தில் எழுதப்பட்டிருக்கலாம்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*மத்தேயு எழுதின சுவிசேஷம் முதன்மையான நிலையில் அவருடைய சக யூதர்களுக்கு எழுதப்பட்டிருந்தாலும், மாற்குவின் சுவிசேஷப் புத்தகம்*

ரோம விசுவாசிகளுக்கு, குறிப்பாக புறஜாதியாரை கருத்திகொண்டு அவர்களுக்காக குறிப்பாக எழுதியதாக தெரிகிறது. முன்பு சுவிசேஷத்தைக் கேட்டு நம்பிய கிறிஸ்தவர்களுக்கு ஒரு போதகராக மாற்கு எழுதினார் *(ரோமர் 1:8).* கடுமையான துன்புறுத்தல்களுக்கு முகங்கொடுத்து தங்கள் நம்பிக்கையை வலுப்படுத்தவும், அவருடைய சீஷர்களாக இருப்பதன் அர்த்தத்தை அவர்களுக்குக் கற்பிக்கவும், கர்த்தருடைய ஊழியராகவும், உலக மீட்பராகவும் இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றுக் கதை இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினார்.

## திறவுகோல் வசனங்கள்:

*மாற்கு **1:11:** "அன்றியும், நீர் என்னுடைய நேச குமாரன், உம்மில் பிரியமாயிருக்கிறேன் என்று, வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாயிற்று."*

*மாற்கு **1:17:** "இயேசு அவர்களை நோக்கி: என் பின்னே வாருங்கள், உங்களை மனுஷரைப் பிடிக்கிறவர்களாக்குவேன் என்றார்."*

*மாற்கு **10:14-15:** "இயேசு அதைக்கண்டு விசனமடைந்து: சிறு பிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்கு இடங்கொடுங்கள்; அவர்களைத் தடைபண்ணாதிருங்கள்; தேவனுடைய ராஜ்யம் அப்படிப்பட்டவர்களுடையது. எவனாகிலும் சிறு பிள்ளையைப்போல் தேவனுடைய ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால், அவன் அதில் பிரவேசிப்பதில்லையென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்."*

*மாற்கு **10:45:** "அப்படியே, மனுஷகுமாரனும் ஊழியங்கொள்ளும்படி வராமல், ஊழியஞ்செய்யவும், அநேகரை மீட்கும்பொருளாகத் தம்முடைய ஜீவனைக்கொடுக்கவும் வந்தார் என்றார்."*

*மாற்கு **12:33:** "முழு இருதயத்தோடும், முழு மனதோடும், முழு ஆத்துமாவோடும், முழுப் பலத்தோடும் அவரிடத்தில் அன்பு கூருகிறதும், தன்னிடத்தில் அன்புகூருகிறது போல் பிறனிடத்தில் அன்புகூருகிறதுமே சர்வாங்கதகனம் முதலிய பலிகளைப்பார்க்கிலும் முக்கியமாயிருக்கிறது என்றான்."*

*மாற்கு 16:6:* "அவன் அவர்களை நோக்கி: பயப்படாதிருங்கள், சிலுவையில் அறையப்பட்ட நசரேயனாகிய இயேசுவைத் தேடுகிறீர்கள்; அவர் உயிர்த்தெழுந்தார், அவர் இங்கேயில்லை; இதோ, அவரை வைத்த இடம்."

*மாற்கு 16:15:* "பின்பு, அவர் அவர்களை நோக்கி: நீங்கள் உலகமெங்கும் போய், சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்."

## சுருக்கமான திரட்டு:

இந்த சுவிசேஷப் புத்தகமானது தனித்துவமானது ஆகும், ஏனெனில் அது இயேசுவின் போதனைகளை விட அவருடைய செயல்களையே கூடுதலாக வலியுறுத்துகிறது. இது மிகவும் எளிமையான நடையில் எழுதப்பட்டுள்ளது, கிறிஸ்துவின் வாழ்க்கையில் ஒரு அத்தியாயத்திலிருந்து இன்னொரு அத்தியாயத்திற்கு விரைவாக நகரும் விவரணங்களைக் கொண்டுள்ள புத்தகமாகும். மத்தேயுவைப் போல இது ஒரு வம்சாவளியுடன் தொடங்குவதில்லை, ஏனென்றால் புறஜாதியார் அவருடைய பரம்பரையில் அவ்வளவாக அக்கறை காட்ட மாட்டார்கள். ஞானஸ்நானத்தில் இயேசுவை அறிமுகப்படுத்திய பிறகு, இயேசு கலிலேயாவில் தனது பொதுவான வெளியரங்கமான ஊழியத்தைத் தொடங்கினார், அவருடைய பன்னிரண்டு சீஷர்களில் முதல் நான்கு பேரை அழைத்தார். பின்வருவது இயேசுவின் வாழ்க்கை, மரணம் மற்றும் உயிர்த்தெழுதல் பற்றிய பதிவு.

மாற்குவின் கணக்கு வெறும் சம்பவங்களின் தொகுப்பு மட்டுமல்ல, யூதர்களுக்கு மட்டுமல்லாது, புறஜாதியினருக்கும் இயேசு மேசியா என்பதை வெளிப்படுத்த எழுதப்பட்ட ஒரு உரைநடை சரித்திரமாகும். ஒரு மாற்றத்தின் நிலையில், பேதுரு தலைமையிலான சீஷர்கள், அவருடைய உயிர்த்தெழுதல் வரையிலும் அவர்களுடைய மேசியாவை முழுமையாகப் புரிந்து கொள்ளத் தவறியிருந்தாலும் அவர்கள் இயேசுவின்மீதுள்ள தங்களது நம்பிக்கையை ஒப்புக் கொண்டனர் (மாற்கு *8:29-30*).

கலிலேயா, சுற்றியுள்ள பகுதிகள், பின்னர் யூதேயா வழியாக அவருடைய பயணங்களை நாம் பின்பற்றும்போது, அவர் எவ்வளவு விரைவான வேகத்தை அமைத்துக்கொண்டார் என்பதை நாம் உணர்கிறோம். அவர் பலரின் வாழ்க்கையைத் தொட்டார், ஆனால் அவர் தம்முடைய சீஷர்கள் மீது அழியாத அடையாளத்தை வைத்தார். மறுரூபமானபோது (மாற்கு **9:1-9**), அவர்களில் மூன்று பேருக்கு அவர் எதிர்காலத்தில் அதிகாரத்திலும் மகிமையிலும் திரும்புவதற்கான முன்னோட்டத்தைக் கொடுத்தார், மீண்டும் அவர் யார் என்பது அவர்களுக்குத் தெரியவந்தது.

இருப்பினும், எருசலேமுக்கான அவரது இறுதிப் பயணத்திற்கு வழிவகுத்த நாட்களில், அவர்கள் திகைத்து, பயந்து, சந்தேகிக்கிறார்கள். இயேசுவின் கைது நேரத்தில், அவர்கள் தப்பி ஓடியபின் அவர் தனியாக நின்றார். பரியாச சோதனைகளின் அடுத்த மணிநேரங்களில், இயேசு தான் கிறிஸ்து, ஆசீர்வதிக்கப்பட்டவரின் குமாரன் என்றும், அவர் திரும்பி வரும்போது அவர் வெற்றி பெறுவார் என்றும் தைரியமாக அறிவித்தார் (மாற்கு **14:61-62**). சிலுவையில் அறையப்படுதல், மரணம், அடக்கம் மற்றும் உயிர்த்தெழுதல் ஆகியவற்றைச் சுற்றியுள்ள காலநிலை நிகழ்வுகள் அவருடைய சீஷர்களில் பெரும்பாலோர் காணவில்லை. ஆனால் உண்மையுள்ள பல பெண்கள் அவருடைய ஆர்வத்திற்கு சாட்சியாக இருந்தார்கள். ஓய்வுநாளுக்குப் பிறகு, வாரத்தின் முதல் நாளின் அதிகாலையில், அவர்கள் அடக்கம் செய்யப்பட்ட சுகந்த வர்க்கப் பொருட்களுடன் கல்லறைக்குச் சென்றார்கள். மூடியிருந்த பெரிய கல் உருட்டப்பட்டதைக் கண்ட அவர்கள் கல்லறைக்குள் நுழைந்தார்கள். அவர்கள் பார்க்க வந்த இயேசுவின் உடல் அங்கெ இல்லை, ஆனால் ஒரு தேவதூதன் வெண்ணிற வஸ்திரத்தில் தோன்றி காட்சியளித்தான். அவர்களுக்குக் கிடைத்த மகிழ்ச்சியான செய்தி என்னவென்றால், “அவர் உயிர்த்தெழுந்தார்!” அவருடைய உயிர்த்தெழுதல் பற்றிய நற்செய்தியை பரப்பிய விஷயத்தில் ஸ்திரீகள் முதல் சுவிசேஷகர்கள் ஆவர். இதே செய்தி பின்வரும் நூற்றாண்டுகளில் உலகம் முழுவதும் பரப்பப்பட்டுள்ளது.

## இணைப்புகள்:

*மாற்குவின் வாசகர்கள் புறஜாதியார் என்பதால், அவர் பழைய ஏற்பாட்டிலிருந்து மத்தேயு தனது நூலில் அடிக்கடி மேற்கோள் காட்டினதுபோல மேற்கோள் காட்டவில்லை, மத்தேயு தனது புத்தகத்தை முதன்மையாக யூதர்களுக்கு எழுதினார் என்பது குறிப்பிடத்தக்கது. இயேசுவை யூத தேசபக்தர்களுடன் இணைப்பதற்கான ஒரு வம்சாவளியில் அவர் தொடங்கவில்லை, மாறாக அவருடைய ஞானஸ்நானத்தோடு தொடங்குகிறார், அது அவருடைய பூமிக்குரிய ஊழியத்தின் ஆரம்பம் ஆகும். ஆனால் அங்கே கூட, மாற்கு தூதுவர் யோவான் ஸ்நானகனைப் பற்றிய ஒரு பழைய ஏற்பாட்டு தீர்க்கதரிசனத்திலிருந்து மேற்கோள் காட்டுகிறார், அவர் "கர்த்தருக்கு வழியை ஆயத்தம்பண்ணி" ஜனங்களை அவர்கள் மேசியாவின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தபோது அறிவுறுத்துவார் என்பதாகும் (மாற்கு 1:3; ஏசாயா 40:3).*

*இயேசு பழைய ஏற்பாட்டை மாற்குவில் பல பத்திகளில் குறிப்பிடுகிறார். மாற்கு 7:6-ல், பரிசேயர்களை அவர்கள் தங்கள் உதடுகளால் மேலோட்டமாக தேவனை வணங்குவதற்காக இயேசு கடுமையாக கடிந்துகொண்டு வலியுறுத்துகிறார், அவர்களுடைய இருதயங்கள் அவரிடமிருந்து வெகு தொலைவில் இருந்தன என்றும், அவர்களுடைய சொந்த மனப்பான்மையான ஏசாயா குறிப்பிடுகின்றது, அவர்களுடைய கடின மனப்பான்மையைக் காட்டும்படி (ஏசாயா 29:13) இந்த பகுதியை மேற்கோள் காட்டுகிறார். இயேசு கைது செய்யப்பட்டு கொல்லப்படும்போது ஒரு மேய்ப்பன் இல்லாமல் சீடர்கள் ஆடுகளைப் போல சிதறடிக்கப்படுவார்கள் என்று அன்றிரவு நிறைவேற வேண்டிய மற்றொரு பழைய ஏற்பாட்டு தீர்க்கதரிசனத்தை இயேசு குறிப்பிட்டார் (மாற்கு 14:27; சகரியா 13:7). பணத்தை மாற்றுவோரின் விஷயத்தில் ஆலயத்தை அவர் தூய்மைப்படுத்தியபோது அவர் மீண்டும் ஏசாயாவைக் குறிப்பிட்டார் (மாற்கு 11:15-17; ஏசாயா 56:7; எரேமியா 7:11) மற்றும் அவர் சங்கீதத்தில் நம்முடைய மற்றும் திருச்சபையின் விசுவாசத்தின் பிரதான மூலக்கல்லாகவும் சித்தரிக்கப்பட்டுள்ளார் (மாற்கு 12:10-11; சங்கீதம் 118:22-23).*

***நடைமுறை பயன்பாடு:***

மாற்கு இயேசுவை தேவனுடைய பாடு அனுபவிக்கிற ஊழியராகவும் (மாற்கு 10:45), மேலும் நமக்காக சேவை செய்யவும் பலியாகவும் வந்தவர், ஒரு பகுதியாக இதைச் செய்ய தூண்டுகிறார் என்பதையும் முன்வைக்கிறார். அவர் செய்ததைப் போலவே நாம் ஊழியம் செய்ய வேண்டும், அதே மனத்தாழ்மையும், மற்றவர்களின் சேவைக்கு பக்தியும் உண்டாக வேண்டும். தேவனுடைய ராஜ்யத்தில் பெரியவராக இருக்க, நாம் அனைவருக்கும் ஊழியராக இருக்க வேண்டும் என்பதை நினைவில் கொள்ளும்படி இயேசு நமக்கு அறிவுறுத்தினார் (மாற்கு 10:44). சுய தியாகம் என்பது அங்கீகாரம் அல்லது வெகுமதிக்கான நமது தேவைக்கு மேலானதாக இருக்கவேண்டும், இயேசு ஆடுகளுக்காக தனது உயிரைக் கொடுத்தபடியே அவமதிக்கப்படுவதற்கும் தயாராக இருந்தார்.

# 45. லூக்கா எழுதின சுவிசேஷம்

### எழுத்தாளர்:

*லூக்கா எழுதின சுவிசேஷம் அதன் எழுத்தாளரை குறிப்பாக யாரென்று அடையாளம் காண்பிக்கவில்லை. லூக்கா 1:1-4 மற்றும் அப்போஸ்தலர் 1:1-3 ஆகியவற்றிலிருந்து, ஒரே எழுத்தாளர் தான் லூக்கா எழுதின சுவிசேஷம் மற்றும் அப்போஸ்தலருடைய நடபடிகள் ஆகிய இரண்டையும் எழுதினார் என்பது தெளிவாகிறது, இரண்டையும் "மகா கனம்பொருந்திய தெயோப்பிலுவே" என்று அழைத்தார், ஒருவேளை இவர் ரோமாப் பிரமுகராக இருக்கலாம். திருச்சபையின் ஆரம்ப நாட்களிலிருந்து வந்த பாரம்பரியம் என்னவென்றால், ஒரு மருத்துவரும் அப்போஸ்தலனாகிய பவுலின் நெருங்கிய கூட்டாளியுமான லூக்கா தான் இந்த லூக்கா மற்றும் அப்போஸ்தலர் இரண்டையும் எழுதினார் என்பதாகும் (கொலோசெயர் 4:14; 2 தீமோத்தேயு 4:11). இது வேதாகமத்தின் புத்தகங்களை எழுதும் ஒரே புறஜாதியார் லூக்காவை உருவாக்குகிறது.*

### எழுதப்பட்ட காலம்:

*லூக்காவின் நற்செய்தி கி.பி. 58 முதல் கி.பி. 65 ஆகிய காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.*

### எழுதப்பட்டதன் நோக்கம்:

*மத்தேயு மற்றும் மாற்கு ஆகிய மற்ற இரண்டு ஒருங்கிணைந்த சுவிசேஷப் புத்தகங்களைப் போலவே, இந்த புத்தகத்தின் நோக்கம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவையும் அவர் "பரலோகத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நாள் வரை அவர் செய்யத் தொடங்கவும் கற்பிக்கவும்" செய்ததை அனைத்தையும் வெளிப்படுத்துவதாகும் (அப்போஸ்தலர் 1:1-2). லூக்காவின் சுவிசேஷப் புத்தகமானது தனித்துவமானது, இது ஒரு துல்லியமான வரலாறு - லூக்காவின் மருத்துவ மனதுடன் ஒத்துப்போகின்ற ஒரு "ஒழுங்கான கணக்கு" (லூக்கா 1: 3) -*

*பெரும்பாலும் மற்ற கணக்குகள் தவிர்க்கும் விவரங்களைத் இது தருகிறது. மாபெரும் வைத்தியரின் வாழ்க்கையை லூக்காவின் வரலாறு, அவருடைய ஊழியத்தை புறஜாதியினர், சமாரியர்கள், ஸ்திரீகள், குழந்தைகள், வரி வசூலிப்பவர்கள், பாவிகள் மற்றும் இஸ்ரேலில் வெளியேற்றப்பட்டவர்களாகக் கருதப்படும் மற்றவர்களுக்கும் அவருடைய இரக்கத்தை வலியுறுத்துகிறது.*

## திறவுகோல் வசனங்கள்:

*லூக்கா **2:4-7:** "அப்பொழுது யோசேப்பும், தான் தாவீதின் வம்சத்தானும் குடும்பத்தானுமாயிருந்தபடியினாலே, தனக்கு மனைவியாக நியமிக்கப்பட்டுக் கர்ப்பவதியான மரியாளுடனே குடிமதிப்பெழுதப்படும்படி, கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து யூதேயா நாட்டிலுள்ள பெத்லகேம் என்னும் தாவீதின் ஊருக்குப்போனான். அவ்விடத்திலே அவர்கள் இருக்கையில், அவளுக்குப் பிரசவகாலம் நேரிட்டது. அவள் தன் முதற்பேறான குமாரனைப்பெற்று, சத்திரத்திலே அவர்களுக்கு இடமில்லாதிருந்தபடியினால், பிள்ளையைத் துணிகளில் சுற்றி, முன்னணையிலே கிடத்தினாள்."*

*லூக்கா **3:16:** "யோவான் எல்லாருக்கும் பிரதியுத்தரமாக: நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுக்கிறேன், என்னிலும் வல்லவர் ஒருவர் வருகிறார், அவருடைய பாதரட்சைகளின் வாரை அவிழ்க்கிறதற்கும், நான் பாத்திரன் அல்ல, அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுப்பார்."*

*லூக்கா **4:18-19, 21:** "கர்த்தருடைய ஆவியானவர் என்மேலிருக்கிறார்; தரித்திரருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி என்னை அபிஷேகம்பண்ணினார்; இருதயம் நருங்குண்டவர்களைக் குணமாக்கவும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப் பார்வையையும் பிரசித்தப்படுத்தவும், நொறுங்குண்டவர்களை விடுதலையாக்கவும், கர்த்தருடைய அநுக்கிரக வருஷத்தைப் பிரசித்தப்படுத்தவும், என்னை அனுப்பினார், என்று எழுதியிருக்கிற இடத்தை அவர் கண்டு,*

*அப்பொழுது அவர் அவர்களோடே பேசத்தொடங்கி: உங்கள் காதுகள் கேட்க இந்த வேதவாக்கியம் இன்றையத்தினம் நிறைவேறிற்று என்றார்.''*

*லூக்கா **18:31-32:** ''பின்பு அவர் பன்னிருவரையும் தம்மிடத்தில் அழைத்து: இதோ, எருசலேமுக்குப் போகிறோம், மனுஷகுமாரனைக் குறித்துத் தீர்க்கதரிசிகளால் எழுதப்பட்டவைகளெல்லாம் நிறைவேறும். எப்படியெனில், அவர் புறஜாதியாரிடத்தில் ஒப்புக்கொடுக்கப்பட்டு, பரியாசமும் நிந்தையும் அடைந்து, துப்பப்படுவார்.''*

*லூக்கா **23:33-34:** ''கபாலஸ்தலம் என்று சொல்லப்பட்ட இடத்தில் அவர்கள் சேர்ந்தபொழுது, அவரையும், அவருடைய வலதுபக்கத்தில் ஒரு குற்றவாளியையும், அவருடைய இடதுபக்கத்தில் ஒரு குற்றவாளியையும் சிலுவைகளில் அறைந்தார்கள். அப்பொழுது இயேசு: பிதாவே இவர்களுக்கு மன்னியும், தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே என்றார். அவருடைய வஸ்திரங்களை அவர்கள் பங்கிட்டுச் சீட்டுப்போட்டார்கள்.''*

*லூக்கா **24:1-3:** ''வாரத்தின் முதலாம்நாள் அதிகாலையிலே தாங்கள் ஆயத்தம்பண்ணின அந்த கந்தவர்க்கங்களை அவர்கள் எடுத்துக்கொண்டு வேறு சில ஸ்திரீகளோடுங்கூடக் கல்லறையினிடத்தில் வந்தார்கள். கல்லறையை அடைத்திருந்த கல் புரட்டித் தள்ளப்பட்டிருக்கிறதைக் கண்டு, உள்ளே பிரவேசித்து, கர்த்தராகிய இயேசுவின் சரீரத்தைக் காணாமல்.''*

### சுருக்கமான திரட்டு:

*இதுவரையில் எழுதப்பட்ட புத்தகங்களில் மிகவும் அழகான புத்தகம் என்று அழைக்கப்படும் லூக்கா எழுதின சுவிசேஷம் இயேசுவின் பெற்றோரைப் பற்றி நமக்குக் கூறித் தொடங்குகிறது; அவரது உறவினர் யோவான்ஸ்நானனின் பிறப்பு; மரியாள் மற்றும் யோசேப்பின் பெத்லகேம் பயணம், அங்கு இயேசு ஒரு மாட்டுத்தொழுவத்தில் பிறந்தார்; மரியாள் மூலம் வருகிற கிறிஸ்துவின் பரம்பரை விவரிக்கப்பட்டுள்ளது. இயேசுவின் பொதுவான பகிரங்க ஊழியம் கெட்டகுமாரன், ஐசுவரியவான் மற்றும்*

*லாசரு, மற்றும் நல்ல சமாரியனின் கதைகள் மூலம் அவருடைய மனதுருக்கம் மற்றும் மன்னிப்பை வெளிப்படுத்துகிறது. எல்லா மனித வரம்புகளையும் மீறும் இந்த பாரபட்சமற்ற அன்பை பலர் நம்புகிறார்கள், இன்னும் பலர் நம்பிக்கை வைக்கிறார்கள், இருப்பினும் இயேசுவின் கூற்றுக்களை பலர் சவால் செய்கிறார்கள், எதிர்க்கிறார்கள் குறிப்பாக மதத் தலைவர்கள். கிறிஸ்துவின் சீஷர்கள் சீஷத்துவத்தின் விலையை கணக்கிட ஊக்குவிக்கப்படுகிறார்கள், அதே நேரத்தில் அவருடைய எதிரிகள் சிலுவையில் அவருடைய மரணத்தை நாடுகிறார்கள். இறுதியாக, இயேசு காட்டிக் கொடுக்கப்படுகிறார், விசாரிக்கப்படுகிறார், தண்டிக்கப்படுகிறார், சிலுவையில் அறையப்படுகிறார். ஆனால் கல்லறை அவரைப் பிடித்து வைக்க முடியாமல் போனது! இழந்துபோனவர்களைத் தேடுவதும் இரட்சிப்பதுமே அவருடைய ஊழியத்தின் தொடர்ச்சியை அவருடைய உயிர்த்தெழுதலில் உறுதிப்படுத்துகிறது.*

## இணைப்புகள்:

*ஒரு புறஜாதியார் என்ற முறையில், பழைய ஏற்பாட்டைப் பற்றிய லூக்காவின் குறிப்புகள் மத்தேயுவின் நற்செய்தியுடன் ஒப்பிடும்போது மிகக் குறைவுதான், மேலும் பழைய ஏற்பாட்டுக் குறிப்புகள் பெரும்பாலானவை லூக்காவின் சரிதைகளில் அல்லாமல் இயேசு தாம் பேசிய வார்த்தைகளில் அடங்கியுள்ளன. இயேசு பழைய ஏற்பாட்டை சாத்தானின் தாக்குதல்களுக்கு எதிராகப் பயன்படுத்தினார், அவனுக்கு ''எழுதியிருக்கிறதே'' என்று பதிலளித்தார் (லூக்கா 4:1-13); வாக்குறுதியளிக்கப்பட்ட மேசியா என்று தன்னை அடையாளம் காண்பிக்க (லூக்கா 4:17-21); பரிசேயருக்கு நியாயப்பிரமாணத்தைக் கடைப்பிடிக்க இயலாமை மற்றும் இரட்சகரின் தேவை ஆகியவற்றை நினைவூட்டுவதற்காக (லூக்கா 10: 25-28, 18: 18-27); அவரைப் பிடிக்கவும் ஏமாற்றவும் முயன்றபோது அவர்களின் கற்றலைக் குழப்பவும் (லூக்கா 20) மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.*

## நடைமுறை பயன்பாடு:

நம்முடைய இரக்கமுள்ள இரட்சகரின் அழகிய உருவப்படத்தை லூக்கா நமக்குத் தருகிறார். ஏழைகள் மற்றும் ஏழைகளால் இயேசு "அணைக்கப்படவில்லை"; உண்மையில், அவைகள்தான் அவருடைய ஊழியத்தின் முதன்மையான மையமாக இருந்தன. அந்த நேரத்தில் இஸ்ரவேல் தேசம் இயேசு வாழ்ந்த நாட்களில் மிகவும் ஜாதி இன வர்க்க உணர்வுள்ள ஒரு சமூகமாக இருந்தது. பலவீனமான மற்றும் நலிந்தவர்கள் வாழ்க்கையில் தங்கள் வாழ்க்கையை மேம்படுத்துவதற்கு உண்மையில் சக்தியற்றவர்களாக இருந்தனர், குறிப்பாக "தேவனுடைய ராஜ்யம் உங்களுக்குச் சமீபமாய் வந்திருக்கிறது" (லூக்கா 10:9) என்ற செய்தியைத் திறந்திருந்தது. இது நம்மைச் சுற்றியுள்ளவர்களும் கேட்க வேண்டிய ஒரு முக்கியமான செய்தியாகும். ஒப்பீட்டளவில் செல்வந்த நாடுகளில் கூட - ஒருவேளை குறிப்பாக — ஆவிக்குரியத் தேவை மிகவும் மோசமானதாக இருக்கிறது. கிறிஸ்தவர்கள் இயேசுவின் முன்மாதிரியைப் பின்பற்றி, ஆவிக்குரிய ரீதியில் ஏழைகளுக்கும் நலிந்தோர்களுக்கும் இரட்சிப்பின் நற்செய்தியைக் கொண்டு செல்ல வேண்டும். தேவனுடைய ராஜ்யம் நெருங்கிவிட்டது, ஒவ்வொரு நாளும் செல்லச்செல்ல நேரம் குறைந்துகொண்டே இருக்கிறது.

# 46. யோவான் எழுதின சுவிசேஷம்

## எழுத்தாளர்:

*யோவான் 21:20-24, எழுத்தாளர் தன்னை "இயேசுவுக்கு அன்பாயிருந்த சீஷன்" என்று விவரிக்கிறார், வரலாற்று மற்றும் உள்ளான காரணங்களால் இது செபுதேயுவின் குமாரர்களில் ஒருவரான யோவான் அப்போஸ்தலன் என்று புரிந்து கொள்ளப்படுகிறது (லூக்கா 5:10).*

## எழுதப்பட்ட காலம்:

*கி.பி. 135-ல் தேதியிட்ட சில பாப்பிரஸ் துண்டுகளை கண்டுபிடித்ததன் அடிப்படையில், அதற்கு முன்னர் இந்த புத்தகம் எழுதப்பட்டு, நகலெடுக்கப்பட்டு, புழக்கத்தில் விடப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. அதே வேளையில் எருசலேம் அழிக்கப்படுவதற்கு (கி.பி. 70), முன்பு இது எழுதப்பட்டதாக சிலர் நினைக்கிறார்கள், ஆகவே கி.பி. 85-90 வரையிலுள்ள காலம் இதன் எழுத்துக்கு மிகவும் ஏற்றுக்கொள்ளப்பட்ட காலமாக இருக்கிறது.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*யோவான் 20:31ல், பின்வருமாறு நோக்கத்தை யோவான் மேற்கோளிடுகிறார்: "இயேசு தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று நீங்கள் விசுவாசிக்கும்படியாகவும், விசுவாசித்து அவருடைய நாமத்தினாலே நித்தியஜீவனை அடையும்படியாகவும், இவைகள் எழுதப்பட்டிருக்கிறது." மூன்று ஒருங்கிணைந்த சுவிசேஷப் புத்தகங்களைப் போலல்லாமல், யோவானின் நோக்கம் கிறிஸ்துவின் வாழ்க்கையைப் பற்றிய காலவரிசைக் கதையை முன்வைப்பதல்ல, மாறாக அவருடைய தெய்வத்துவத்தைக் காண்பிப்பதாகும். யோவான் இரண்டாம் தலைமுறை விசுவாசிகளின் நம்பிக்கையை வலுப்படுத்தவும், மற்றவர்களையும் இந்த விசுவாசத்திற்குள்ளாக வரும்படிக்கு வளர்க்கவும் முயன்றது மட்டுமல்லாமல், பரவி வரும் ஒரு தவறான போதனையையும் சரிசெய்ய முயன்றார். யோவான் இயேசு கிறிஸ்துவை "தேவனுடைய குமாரன்" என்று வலியுறுத்தினார், பரிபூரணமான தேவனாகவும், பரிபூரணமான*

*மனிதனாகவும், "கிறிஸ்து-ஆவி" என்கிற மனித இயேசுவின் ஞானஸ்நானத்தில் வந்து அவரை சிலுவையில் அறையும்படி பார்த்த பொய்யான கோட்பாட்டிற்கு மாறாக யோவான் இதை விவரித்து தெளிவு படுத்துகிறார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*"ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது. அந்த வார்த்தை மாம்சமாகி, கிருபையினாலும் சத்தியத்தினாலும் நிறைந்தவராய், நமக்குள்ளே வாசம்பண்ணினார்; அவருடைய மகிமையைக் கண்டோம்; அது பிதாவுக்கு ஒரே பேறானவருடைய மகிமைக்கு ஏற்ற மகிமையாகவே இருந்தது." (யோவான் 1:1,14).*

*"மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன்னிடத்தில் வரக்கண்டு: இதோ, உலகத்தின் பாவத்தைச் சுமந்துதீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி." (யோவான் 1:29).*

*"தேவன், தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார்." (யோவான் 3:16).*

***"இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக:***

*அவர் அனுப்பினவரை நீங்கள் விசுவாசிப்பதே தேவனுக்கேற்ற கிரியையாயிருக்கிறது என்றார்." (யோவான் 6:29).*

*"நான் அவைகளுக்கு நித்தியஜீவனைக் கொடுக்கிறேன்; அவைகள் ஒருக்காலும் கெட்டுப்போவதில்லை, ஒருவனும் அவைகளை என் கையிலிருந்து பறித்துக்கொள்வதுமில்லை." (யோவான் 10:28).*

***"இயேசு அவளை நோக்கி:***

*நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன், என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான்; உயிரோடிருந்து என்னை*

*விசுவாசிக்கிறவனெவனும் என்றென்றைக்கும் மரியாமலும் இருப்பான்; இதை விசுவாசிக்கிறாயா என்றார்.'' (யோவான் 11:25-26).*

**''அதற்கு இயேசு:**

*நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்.'' (யோவான் 14:6).*

**''அதற்கு இயேசு:**

*பிலிப்புவே, இவ்வளவுகாலம் நான் உங்களுடனேகூட இருந்தும் நீ என்னை அறியவில்லையா? என்னைக் கண்டவன் பிதாவைக் கண்டான்; அப்படியிருக்க, பிதாவை எங்களுக்குக் காண்பியும் என்று நீ எப்படி சொல்லுகிறாய்?'' (யோவான் 14:9).*

*''உம்முடைய சத்தியத்தினாலே அவர்களைப் பரிசுத்தமாக்கும்; உம்முடைய வசனமே சத்தியம்.'' (யோவான் 17:17).*

*''இயேசு காடியை வாங்கினபின்பு, முடிந்தது என்று சொல்லி, தலையைச்சாய்த்து, ஆவியை ஒப்புக்கொடுத்தார்.'' (யோவான் 19:30).*

*''அதற்கு இயேசு: தோமாவே, நீ என்னைக் கண்டதினாலே விசுவாசித்தாய், காணாதிருந்தும் விசுவாசிக்கிறவர்கள் பாக்கியவான்கள் என்றார்.'' (யோவான் 20:29).*

## சுருக்கமான திரட்டு:

*கிறிஸ்துவின் தெய்வத்துவத்தை நிரூபிப்பதற்கும் அவருடைய ஊழியத்தை விளக்குவதற்கும் அடையாளங்களாக யோவானின் நற்செய்தி ஏழு அற்புதங்களை மட்டுமே தேர்ந்தெடுக்கிறது. இந்த அறிகுறிகள் மற்றும் சம்பவங்கள் சில யோவானில் மட்டுமே காணப்படுகின்றன. நான்கு நற்செய்திகளில் இது மிகவும் இறையியல் மற்றும் பிற நற்செய்திகளில் குறிப்பிடப்பட்டுள்ள நிகழ்வுகளுக்குப் பின்னால் இருக்கும் காரணத்தைக் கூறுகிறது. பரிசுத்த ஆவியானவர் தனது பரமேறுதலுக்குப் பிறகு இறங்கி வரும் ஊழியத்தைப் பற்றி அவர் அதிகம் பகிர்ந்து கொள்கிறார்.*

யோவான் தனது நற்செய்தியின் தொடர்ச்சியான கருப்பொருள்களைக் காட்டும் சில சொற்கள் அல்லது சொற்றொடர்கள் உள்ளன: விசுவாசியுங்கள், சாட்சி, தேற்றரவாளர், ஜீவன் - மரணம், ஒளி - இருள், நானே ... (இயேசு "நானே" என மொழிந்த கூற்றுக்கள்), மற்றும் அன்பு.

யோவான் நற்செய்தி கிறிஸ்துவை அவரது பிறப்பிலிருந்து அல்ல, மாறாக "ஆதியில்" இருந்த "வார்த்தை" (லோகோஸ்) என்று அறிமுகப்படுத்துகிறது, அவர் தேவனாக, படைப்பின் ஒவ்வொரு அம்சத்திலும் ஈடுபட்டுள்ளார் (1:1-3) பின்னர் அவர் இந்த பூமிக்கு வரும்படிக்கு மாம்சமாக மாறுகிறார் (1:14) அவர் குற்றமில்லாத, பழுதற்ற பலியிடப்பட்ட ஆட்டுக்குட்டியாக நம் பாவங்களை அகற்றுவதற்காக (யோவான் 1:29) ஜீவனையே தந்தார். இயேசு மேசியா என்பதைக் காட்டும் ஆவிக்குரிய உரையாடல்களை யோவான் தேர்ந்தெடுக்கிறார் (4:26) மற்றும் சிலுவையில் அவர் அடைந்த மரணத்தின் மூலம் ஒருவர் எவ்வாறு இரட்சிக்கப்படுகிறார் என்பதை விளக்குகிறார் (3:14-16). யூதத் தலைவர்களைத் திருத்துவதன் மூலம் அவர் பலமுறை கோபப்படுகிறார் (2:13-16); ஓய்வுநாளில் குணப்படுத்துதல், மற்றும் தேவனுக்கு சொந்தமான சுபாவ குணாதிசயங்கள் (5:18; 8:56-59; 9:6,16; 10:33) அவரில் காணப்பட்டன. இயேசு தம்முடைய சீஷர்களை அவருக்கு நேரிடவிருக்கும் மரணத்துக்காகவும், அவருடைய உயிர்த்தெழுதலுக்கும் பரமேறுதலுக்கும் பின்னர் அவர்கள் செய்யும் ஊழியத்திற்கும் தயார் செய்கிறார் (யோவான் 14-17). பின்னர் அவர் நம் ஸ்தானத்தில் சிலுவையில் மனமுவந்து சிலுவையில் மரிக்கிறார் (10:15-18), நம்முடைய பாவக் கடனை முழுவதுமாக செலுத்துகிறார் (19:30) இதனால் பாவத்திலிருந்து இரட்சிக்கும் இரட்சகராக அவரையே நம்புகிற எவரும் இரட்சிக்கப்படுவார்கள் (யோவான் 3:14-16 ). பின்னர் அவர் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்து, தம்முடைய அவர் தேவன் மற்றும் கர்த்தர் என்று சந்தேகிக்கும் தமது சீஷர்களுக்கு தெளிவு படுத்துகிறார் (20:24-29).

## இணைப்புகள்:

இயேசுவை பழைய ஏற்பாட்டின் தேவன் என்று யோவான் சித்தரிப்பது இயேசுவின் ஏழு "நானே/நான்" என்னும் அறிக்கைகளில் மிகவும்

உறுதியாகக் காணப்படுகிறது. அவர் "ஜீவ அப்பம்" (யோவான் 6:35), வனாந்தரத்தில் இஸ்ரவேலருக்கு உணவளிக்க வானத்திலிருந்து மன்னாவை வழங்கியதைப் போலவே, அவருடைய மக்களின் ஆத்துமாக்களுக்கு உணவளிக்க தேவன் வழங்கினார் (யாத்திராகமம் 16:11-36). இயேசு "உலகத்தின் ஒளி" (யோவான் 8:12), பழைய ஏற்பாட்டில் தேவன் தம் மக்களுக்கு வாக்குறுதியளித்த அதே ஒளி (ஏசாயா 30:26, 60:19-22), அதன் உச்சத்தை புதிய எருசலேமில் காணலாம், அங்கெ ஆட்டுக்குட்டியானவராகிய கிறிஸ்து அதன் வெளிச்சமாக இருக்கும் போது தெளிவாகும் (வெளிப்படுத்துதல் 21:23). "நான்" அறிக்கைகளில் இரண்டு இயேசுவை "நல்ல மேய்ப்பன்" மற்றும் "ஆடுகளின் வாசல்" என்று குறிப்பிடுகின்றன. பழைய ஏற்பாட்டின் தேவன், இஸ்ரேலின் மேய்ப்பர் என்று இயேசுவைப் பற்றிய தெளிவான குறிப்புகள் இங்கே (சங்கீதம் 23:1; 80:1; எரேமியா 31:10; எசேக்கியேல் 34:23), ஆடுகளுக்குள் ஒரே வாசலாக, இரட்சிப்பின் ஒரே வழியாக இயேசு இருக்கிறார்.

யூதர்கள் உயிர்த்தெழுதலை நம்பினர், உண்மையில், அந்த கோட்பாட்டை பயன்படுத்தி இயேசுவை அவருக்கு எதிராகப் பயன்படுத்தக்கூடிய அறிக்கைகளை கூறி அவரை ஏமாற்ற முயன்றனர். ஆனால் லாசருவின் கல்லறையில் அவர் கூறியது "நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன்" (யோவான் 11:25) என்னும் கூற்று அவர்களை வியப்பில் ஆழ்த்தியிருக்க வேண்டும். அவர் உயிர்த்தெழுதலுக்கான காரணம் என்றும், ஜீவன் மற்றும் மரணம் மீதான அதிகாரத்தை வைத்திருப்பவர் என்றும் அவர் கூறிக்கொண்டிருந்தார். தேவனைத் தவிர வேறு எவருக்கும் இதுபோன்ற ஒன்றைக் கோர முடியாது செய்யவும் இயலாது. இதேபோல், "நானே வழியும், சத்தியமும் மற்றும் ஜீவனுமாயிருக்கிறேன்" என்று அவர் கூறுவது (யோவான் 14:6) அவரை பழைய ஏற்பாட்டுடன் தொடர்புபடுத்தியது. ஏசாயா 35:8-ல் தீர்க்கதரிசனமாக சொல்லப்பட்ட "பரிசுத்த பாதை" அவருடையது; சகரியாவின் சத்திய நகரத்தை அவர் ஸ்தாபித்தார் 8:3 "சத்தியம்" தானே எருசலேமில் இருந்தபோது, நற்செய்தியின் சத்தியங்கள் அவரும் அவருடைய அப்போஸ்தலர்களும் அங்கு பிரசங்கித்தார்கள்; "ஜீவன்"

*என்று, அவர் தனது தெய்வத்துவத்தை, ஜீவனின் படைப்பாளராக, தேவனின் அவதாரம் என்பதில் விளங்கிற்று (யோவான் **1:1-3**). இறுதியாக, "மெய்யான திராட்சைச்செடி" (யோவான் **15:1, 5**) பல பழைய ஏற்பாட்டுப் பத்திகளில் கர்த்தருடைய திராட்சைத் தோட்டம் என்று அழைக்கப்படும் இஸ்ரவேல் தேசத்தோடு இயேசு தன்னை அடையாளப்படுத்துகிறார். இஸ்ரவேலின் திராட்சைத் தோட்டத்தின் உண்மையான திராட்சைத் தோட்டமாக, அவர் தன்னை "உண்மையான இஸ்ரவேலின்" தேவன் என்று சித்தரிக்கிறார் - விசுவாசத்தோடு அவரிடம் வருவோர் அனைவருமே மெய்யான இஸ்ரவேலர்கள், ஏனென்றால் "... இஸ்ரவேலிலிருந்து வந்தவர்கள் அனைவரும் இஸ்ரவேலர்கள் அல்ல" (ரோமர் **9:6**).*

## *நடைமுறை பயன்பாடு:*

*சுவிசேஷத்திற்கு மிகவும் பயனுள்ள தகவல்களைக் கொண்டுவருவதற்கான அதன் நோக்கத்தை யோவானின் நற்செய்தி தொடர்ந்து நிறைவேற்றுகிறது (யோவான் **3:16** என்பது பலரால் சரியாகப் புரிந்து கொள்ளப்படாவிட்டாலும் கூட, நன்கு அறியப்பட்ட வசனம்) மற்றும் இந்த வசனம் பெரும்பாலும் சுவிசேஷ வேதாகமப் படிப்புகளில் பயன்படுத்தப்படுகிறது. இயேசுவிற்கும் நிக்கொதேமுவோடும் மற்றும் கிணற்றின் அருகே சமாரிய ஸ்திரீக்கும் இடையில் பதிவுசெய்யப்பட்ட சந்திப்புகளில் (அத்தியாயங்கள் **3-4**), இயேசுவின் தனிப்பட்ட சுவிசேஷத்தின் மாதிரியிலிருந்து நாம் அதிகம் கற்றுக்கொள்ளலாம். மரிப்பதற்கு முன்னர் அவருடைய சீஷர்களிடம் அவர் அளித்த ஆறுதலான வார்த்தைகள் (**14:1-6,16; 16:33**) கிறிஸ்துவில் நம்முடைய அன்புக்குரியவர்களை மரணம் நேரிடும் மற்றும் வருத்தப்படுத்தும்போது உள்ள காலங்களில் இன்னும் மிகுந்த ஆறுதலளிக்கிறது, அதேபோல் **17**-ஆம் அதிகாரத்தில் விசுவாசிகளுக்காக அவர் செய்த "உயர் ஆசாரிய ஜெபமும்" அவரது அக்கறை மற்றும் இரக்கத்திற்கு வலுச்சேர்க்கிறது. கிறிஸ்துவின் தெய்வத்துவத்தைப் பற்றிய யோவானின் போதனைகள் (**1:1-3,14; 5:22-23; 8:58; 14:8-9; 20:28**, முதலியன) இயேசுவை முழு தேவனை விட குறைவாக இருப்பதைக் காணும் வழிபாட்டு*

முறைகளாகிய சிலரின் தவறான போதனைகளை எதிர்ப்பதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

# 47. அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம்

## எழுத்தாளர்:

அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் அதன் எழுத்தாளரை குறிப்பாக யாரென்று அடையாளம் காண்பிக்கவில்லை. லூக்கா 1:1-4 மற்றும் அப்போஸ்தலர் 1:1-3 ஆகியவற்றிலிருந்து, ஒரே எழுத்தாளர்தான் லூக்கா மற்றும் அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் ஆகிய இரண்டையும் எழுதினார் என்பது தெளிவாகிறது. அப்போஸ்தலனாகிய பவுலின் கூட்டாளியான மருத்துவர் லூக்கா தான் லூக்கா மற்றும் அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் ஆகிய இரண்டையும் எழுதினார் என்பது திருச்சபையின் ஆரம்ப நாட்களிலிருந்து வந்த பாரம்பரியமாகும் (கொலோசெயர் 4:14; 2 தீமோத்தேயு 4:11).

## எழுதப்பட்ட காலம்:

அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் கி.பி. 61-64 வரையிலுள்ள காலக்கட்டத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும்.

## எழுதப்பட்டதன் நோக்கம்:

ஆரம்பகால திருச்சபையின் வரலாற்றை வழங்குவதற்காக அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் எழுதப்பட்டது. புத்தகத்தின் பிரதான முக்கியத்துவம் பெந்தெகொஸ்தே நாளின் முக்கியத்துவம் மற்றும் இயேசு கிறிஸ்துவுக்கு பயனுள்ள சாட்சிகளாக இருக்க அதிகாரம் பெற்றது ஆகியவைகளாகும். அப்போஸ்தலர்கள் எருசலேம், யூதேயா, சமாரியா மற்றும் சுற்றியுள்ள உலகின் பிற பகுதிகளுக்கும் கிறிஸ்துவின் சாட்சிகளாக இருப்பதை அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் பதிவு செய்கிறது. நம்முடைய ஆலோசகராக அதிகாரம், வழிகாட்டுதல், கற்பித்தல் மற்றும் சேவை செய்யும் பரிசுத்த ஆவியின் இணையற்ற ஈவை இந்த புத்தகம் வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகத்தைப் படிக்கும்போது, சீஷர்களான பேதுரு, யோவான் மற்றும் பவுல் ஆகியோரால் நிகழ்த்தப்பட்ட பல அற்புதங்களால் நாம் அறிவொளி பெறுகிறோம், ஊக்குவிக்கப்படுகிறோம். தேவனுடைய

*வார்த்தைக்குக் கீழ்ப்படிவதன் முக்கியத்துவத்தையும், கிறிஸ்துவை அறிந்ததன் விளைவாக ஏற்படும் மாற்றத்தையும் அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் வலியுறுத்துகிறது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றி சீஷர்கள் பிரசங்கித்த சத்தியத்தை நிராகரித்தவர்கள் பற்றிய பல குறிப்புகள் உள்ளன. வல்லமை, பேராசை மற்றும் பிசாசின் பல தீமைகள் அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகத்தில் சாட்சியமாக உள்ளன.*

## திறவுகோல் வசனங்கள்:

*அப்போஸ்தலர் **1:8:** "பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும்போது நீங்கள் பெலனடைந்து, எருசலேமிலும், யூதேயா முழுவதிலும், சமாரியாவிலும், பூமியின் கடைசிபரியந்தமும், எனக்குச் சாட்சிகளாயிருப்பீர்கள் என்றார்."*

*அப்போஸ்தலர் **2:4:** "அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு, ஆவியானவர் தங்களுக்குத் தந்தருளின வரத்தின்படியே வெவ்வேறு பாஷைகளிலே பேசத்தொடங்கினார்கள்."*

*அப்போஸ்தலர் **4:12:** "அவராலேயன்றி வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும், மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை என்றான்."*

*அப்போஸ்தலர் **4:19-20:** "பேதுருவும் யோவானும் அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: தேவனுக்குச் செவிகொடுக்கிறதைப்பார்க்கிலும் உங்களுக்குச் செவிகொடுக்கிறது தேவனுக்கு முன்பாக நியாயமாயிருக்குமோ நீங்களே நிதானித்துப்பாருங்கள். நாங்கள் கண்டவைகளையும் கேட்டவைகளையும் பேசாமலிருக்கக்கூடாதே என்றார்கள்."*

*அப்போஸ்தலர் **9:3-6:** "அவன் பிரயாணமாய்ப் போய், தமஸ்குவுக்குச் சமீபித்தபோது சடிதியிலே வானத்திலிருந்து ஒரு ஒளி அவனைச் சுற்றிப் பிரகாசித்தது; அவன் தரையிலே விழுந்தான். அப்பொழுது: சவுலே, சவுலே, நீ என்னை ஏன் துன்பப்படுத்துகிறாய் என்று தன்னுடனே*

சொல்லுகிற ஒரு சத்தத்தைக் கேட்டான். அதற்கு அவன்: ஆண்டவரே, நீர் யார், என்றான். அதற்குக் கர்த்தர்: நீ துன்பப்படுத்துகிற இயேசு நானே, முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாம் என்றார். அவன் நடுங்கித் திகைத்து: ஆண்டவரே, நான் என்னசெய்யச் சித்தமாயிருக்கிறீர் என்றான். அதற்குக் கர்த்தர்: நீ எழுந்து, பட்டணத்துக்குள்ளே போ, நீ செய்யவேண்டியது அங்கே உனக்குச் சொல்லப்படும் என்றார்."

அப்போஸ்தலர் **16:31:** "அதற்கு அவர்கள்: கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசி, அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று சொன்னார்கள்."

## சுருக்கமான திரட்டு:

அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் கிறிஸ்தவ திருச்சபையின் வரலாற்றையும் இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியின் பரவலையும், அதற்கு பெருகிய எதிர்ப்பையும் தொகுத்து தருகிறது. இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியைப் பிரசங்கிக்கவும் கற்பிக்கவும் பல உண்மையுள்ள ஊழியர்கள் பயன்படுத்தப்பட்டிருந்தாலும், பவுல் என்று பெயர் மாற்றப்பட்ட சவுல் மிகவும் செல்வாக்கு பெற்றவர் ஆவார். அவர் மனமாற்றப்படுவதற்கு முன்பு, கிறிஸ்தவர்களைத் துன்புறுத்துவதிலும் கொலை செய்வதிலும் பவுல் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். தமஸ்கு சாலையில் பவுலின் வியத்தகு மாற்றம் (அப்போஸ்தலர் **9:1-31**) அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகத்தின் சிறப்பம்சமாகும். அவர் மாற்றப்பட்ட பிறகு, தேவனை நேசிப்பதற்கும், அவருடைய வார்த்தையை வல்லமை, உற்சாகம் மற்றும் உண்மையான மற்றும் ஜீவனுள்ள தேவனுடைய ஆவியால் பிரசங்கிப்பதற்கும் நேர்மாறான நிலைக்குச் சென்றார். எருசலேமில் (**1—8:3** அதிகாரங்கள்), யூதேயா மற்றும் சமாரியாவிலும் (அதிகாரங்கள் **8:4—12:25**), பூமியின் எல்லா முனைகளிலும் (அதிகாரங்கள் **13:1—28**) பரிசுத்த ஆவியானவர் சீஷர்களுக்கு அதிகாரம் அளித்தார். கடைசி பகுதியில் பவுலின் மூன்று மிஷனரி பயணங்கள் (**13:1—21:16**), எருசலேம் மற்றும் சிசரியாவில் அவர் சந்தித்த சோதனைகள் (**21:17—26: 32**) மற்றும் ரோமாபுரிக்கு

*அவர் மேற்கொண்ட இறுதி பயணம் (27:1—28:31)ஆகிய விவரணங்களை இந்த அப்புத்தகம் அளிக்கிறது.*

## இணைப்புகள்:

*நியாயப்பிரமான சட்டங்களின் பழைய உடன்படிக்கையிலிருந்து இரக்கம் மற்றும் விசுவாசத்தின் புதிய உடன்படிக்கைக்கு மாறுவதற்கு அப்போஸ்தலருடைய நடபடிகள் புத்தகம் மிகவும் உதவுகிறது. இந்த மாற்றம் நியாயப்பிரமான சட்டங்களில் பல முக்கிய நிகழ்வுகளில் காணப்படுகிறது. முதலாவதாக, பரிசுத்த ஆவியின் ஊழியத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டது, பழைய ஏற்பாட்டில் முதன்மையான செயல்பாடு தேவனுடைய மக்களின் வெளிப்புற "அபிஷேகம்" ஆகும், அவர்களில் மோசே (எண்கள் 11:17), ஒத்தனியேல் (நியாயாதிபதிகள் 3:8-10) , கிதியோன் (நியாயாதிபதிகள் 6:34), சவுல் (1 சாமுவேல் 10:6-10) அடங்குவர். இயேசுவின் உயிர்த்தெழுதலுக்குப் பிறகு, ஆவியானவர் விசுவாசிகளின் இருதயங்களில் தங்கி வாசம் செய்யும்படி வந்தார் (ரோமர் 8:9-11; 1 கொரிந்தியர் 3:16), அவர்களை உள்ளே இருந்து வழிநடத்தி அதிகாரம் அளித்தார். இது விசுவாசத்தில் தம்மிடம் வருபவர்களுக்கு தேவன் அளிக்கும் அவருடைய ஈவாகும்.*

*பழைய உடன்படிக்கையிலிருந்து புதியதாக மாறுவதற்கு பவுலின் மனமாற்றம் ஒரு வியத்தகு எடுத்துக்காட்டு. உயிர்த்தெழுந்த இரட்சகரைச் சந்திப்பதற்கு முன்பு, அவர் இஸ்ரவேலர்களில் மிகவும் வைராக்கியமுள்ளவர் என்றும், "நியாயப்பிரமாணத்தின் நீதியைப்" பொறுத்தமட்டில் (பிலிப்பியர் 3:6) குற்றமற்றவர் என்றும் பவுல் ஒப்புக்கொண்டார். கிறிஸ்துவில் நம்பிக்கை வைக்கும் முன்னர் கிறிஸ்தவர்களை துன்புறுத்த வைராக்கியம் கொண்டு கொதித்தெழுந்தார். ஆனால் அவர் மாற்றப்பட்ட பின்னர், அவருடைய சட்டபூர்வமான முயற்சிகள் அனைத்தும் பயனற்றவை என்பதை அவர் உணர்ந்தார், அவர் அவைகளை வெறும் "குப்பைகளாக" கருதினார், "நான் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணிக்கொண்டிருக்கிறேன். நான் கிறிஸ்துவை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கும், நியாயப்பிரமாணத்தினால் வருகிற*

சுயநீதியை உடையவனாயிராமல், கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினால் வருகிறதும் விசுவாசமூலமாய் தேவனால் உண்டாயிருக்கிறதுமான நீதியை உடையவனாயிருந்து, கிறிஸ்துவுக்குள் இருக்கிறவனென்று காணப்படும்படிக்கும்'' (பிலிப்பியர் 3: 8-9). இப்போது நாமும் விசுவாசத்தினாலே வாழ்கிறோம், நியாயப்பிரமாணத்தின் கிரியைகளால் அல்ல, எனவே மேன்மை பாராட்ட நமது சொந்த முயற்சிகள் எதுவும் இல்லை (எபேசியர் 2:8-9).

அப்போஸ்தலர் 10:9-15-ல் உள்ள புசிக்கும் உணவுகளைக் குறித்த துப்பட்டியைப் பற்றிய பேதுருவின் பார்வை பழைய உடன்படிக்கையிலிருந்து மாறுவதற்கான மற்றொரு அறிகுறியாகும் இந்த விஷயத்தில் யூதர்களுக்கு குறிப்பாக உணவுச் சட்டங்கள் இருந்தன - புதிய உடன்படிக்கையின் யூத மற்றும் புறஜாதியாரின் ஒற்றுமைக்கு ஒரு உலகளாவிய திருச்சபையில் இப்படியானது. யூதர்களைக் குறிக்கும் "பரிசுத்தமான" விலங்குகள் மற்றும் புறஜாதியாரைக் குறிக்கும் "அசுத்தமான" விலங்குகள் இரண்டும் கிறிஸ்துவின் சிலுவைப் பலியின் மரணத்தின் மூலம் தேவனால் "சுத்திகரிக்கப்பட்டவை" என்று அறிவிக்கப்பட்டன. பழைய நியாயப்பிரமாண சட்டத்தின் கீழ் இனி இராமல், இருகூட்டத்தார்களும் இப்போது கிறிஸ்துவின் சிலுவையில் சிந்தப்பட்ட இரத்தத்தினால் விசுவாசம் மூலம் கிருபையின் புதிய உடன்படிக்கையில் ஒன்றுபட்டுள்ளனர்.

## நடைமுறை பயன்பாடு:

தேவன் தம்முடைய ஆவியின் மூலம் அவர்களுக்கு அதிகாரம் அளிக்கும்போது சாதாரண மனிதர்கள் மூலமாக அற்புதமான காரியங்களைச் செய்ய முடியும். தேவன் அடிப்படையில் ஒரு மீனவர் குழுவை எடுத்து உலகை தலைகீழாக மாற்ற பயன்படுத்தினார் (அப்போஸ்தலர் 17:6). தேவன் கிறிஸ்தவர்களை வெறுக்கும் கொலைபாதகனை அழைத்து, புதிய ஏற்பாட்டின் கிட்டத்தட்ட பாதி புத்தகங்களை எழுதிய மிகப் பெரிய கிறிஸ்தவ சுவிசேஷகராக அவரை மாற்றினார். உலக வரலாற்றில் ஒரு "புதிய நம்பிக்கையின்" விரைவான விரிவாக்கத்தை ஏற்படுத்த தேவன் உபவத்திரவத்தைப் பயன்படுத்தினார்.

நம்முடைய இருதயங்களை மாற்றுவது, பரிசுத்த ஆவியினால் நமக்கு அதிகாரம் அளிப்பது, கிறிஸ்துவின் மூலமாக இரட்சிப்பின் நற்செய்தியை பரப்புவதற்கான ஆர்வத்தை நமக்குக் கொடுப்பதன் மூலம் தேவன் நம் மூலமாகவும் அதைச் செய்ய முடியும். இவற்றை நம் நமது சொந்த சக்தியால்/பெலத்தால் நிறைவேற்ற முயன்றால், நாம் தோல்வியடைவோம். அப்போஸ்தலர் 1:8-ல் உள்ள சீஷர்களைப் போலவே, ஆவியின் அதிகாரம் மற்றும் வல்லமை பெறுவதற்காக நாம் காத்திருக்க வேண்டும், பின்னர் நமதாண்டவர் நமக்கு அருளிய பெரிய ஆணையத்தை நிறைவேற்ற அவருடைய வல்லமையுடன் செல்லுவோம் (மத்தேயு 28:19-20).

# 48. ரோமாபுரியாருக்கு எழுதின நிருபம்

## எழுத்தாளர்:

*ரோமர் 1:1, ரோமாபுரியாருக்கு எழுதின நிருபத்தின் எழுத்தாளர் அப்போஸ்தலனாகிய பவுல் என்று அடையாளம் காட்டுகிறது. ரோமர் 16:22-ல், பவுல் தனது வார்த்தைகளை எழுத தெர்தியு என்னும் மனிதரைப் பயன்படுத்தினார் என்பதை வாசிக்கிறோம்.*

## எழுதப்பட்ட காலம்:

*ரோமாபுரியாருக்கு எழுதின நிருபம் கி.பி. 56 முதல் கி.பி. 58 வரையிலுள்ள காலகட்டத்தில் எழுதப்பட்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*திருச்சபைகளுக்கு பவுல் எழுதிய அனைத்து நிருபங்களையும் போலவே, இந்த நிருபத்திலும் அவருடைய எழுத்தின் நோக்கம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மகிமையை பிரஸ்தாப படுத்ததக்கதான கோட்பாட்டைக் கற்பிப்பதும், அவருடைய நிருபத்தை பெறும் விசுவாசிகளைத் நல்வழிப்படுத்தி ஆவிக்குரிய வாழ்வில் வளரத்தக்கதாக ஊக்குவிப்பதும் ஆகும். இந்த நிருபம் யாருக்கு எழுதப்பட்டதோ அவர்களைக் குறித்து பவுல் குறிப்பாக அக்கறை கொண்டிருந்தார் — அவர்கள் தான் "ரோமாபுரியிலுள்ள தேவப்பிரியரும் பரிசுத்தவான்களாகும்படி அழைக்கப்பட்டவர்களுமானவர்கள்" (ரோமர் 1:2). அவரே ஒரு ரோமக் குடியுரிமை பெற்ற குடிமகனாக இருந்ததால், ரோமிலுள்ள விசுவாசிகளின் கூட்டத்தில் இருப்பவர்கள் மீது அவருக்கு ஒரு தனித்துவமான அக்கறை மற்றும் ஆர்வம் இருந்தது. அவர் இதுவரை, ரோமில் உள்ள திருச்சபைக்கு விஜயம் செய்யவில்லை என்பதால், இந்த நிருபம் பவுலைக் குறித்து அவர்களுக்கு ஒரு அறிமுகமாகவும் இருந்தது.*

## திறவுகோல் வசனங்கள்:

*ரோமர் 1:16, "கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக் குறித்து நான் வெட்கப்படேன்; முன்பு யூதரிலும் பின்பு கிரேக்கரிலும் விசுவாசிக்கிறவனெவனோ அவனுக்கு இரட்சிப்பு உண்டாவதற்கு அது தேவபெலனாயிருக்கிறது."*

*ரோமர் 3:9-11, "ஆனாலும் என்ன? அவர்களைப்பார்க்கிலும் நாங்கள் விசேஷித்தவர்களா? எவ்வளவேனும் விசேஷித்தவர்களல்ல. யூதர் கிரேக்கர் யாவரும் பாவத்திற்குட்பட்டவர்களென்பதை முன்பு திருஷ்டாந்தப்படுத்தினோமே. அந்தப்படியே: நீதிமான் ஒருவனாகிலும் இல்லை; உணர்வுள்ளவன் இல்லை; தேவனைத் தேடுகிறவன் இல்லை."*

*ரோமர் 3:21, "இப்படியிருக்க, நியாயப்பிரமாணமில்லாமல் தேவநீதி வெளியாக்கப்பட்டிருக்கிறது; அதைக்குறித்து நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசனங்களும் சாட்சியிடுகிறது."*

*ரோமர் 3:23, "எல்லாரும் பாவஞ்செய்து, தேவமகிமையற்றவர்களாகிப் போனார்கள்."*

*ரோமர் 5:8, "நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே, தேவன் நம்மேல் வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார்."*

*ரோமர் 6:23, "பாவத்தின் சம்பளம் மரணம்; தேவனுடைய கிருபைவரமோ நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினால் உண்டான நித்தியஜீவன்."*

*ரோமர் 8:9, "தேவனுடைய ஆவி உங்களில் வாசமாயிருந்தால், நீங்கள் மாம்சத்துக்குட்பட்டவர்களாயிராமல் ஆவிக்குட்பட்டவர்களாயிருப்பீர்கள். கிறிஸ்துவின் ஆவியில்லாதவன் அவருடையவனல்ல."*

*ரோமர் 8:28, "அன்றியும், அவருடைய தீர்மானத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய் தேவனிடத்தில் அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கு ஏதுவாக நடக்கிறதென்று அறிந்திருக்கிறோம்."*

*ரோமர் **8:37-39,** "இவையெல்லாவற்றிலேயும் நாம் நம்மில் அன்புகூருகிறவராலே முற்றும் ஜெயங்கொள்ளுகிறவர்களாயிருக்கிறோமே. மரணமானாலும், ஜீவனானாலும், தேவதூதர்களானாலும், அதிகாரங்களானாலும், வல்லமைகளானாலும், நிகழ்காரியங்களானாலும், வருங்காரியங்களானாலும், உயர்வானாலும், தாழ்வானாலும், வேறெந்தச் சிருஷ்டியானாலும் நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவிலுள்ள தேவனுடைய அன்பைவிட்டு நம்மைப் பிரிக்கமாட்டாதென்று நிச்சயித்திருக்கிறேன்."*

*ரோமர் **10:9-10,** "என்னவென்றால், கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு, தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய். நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும், இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கைபண்ணப்படும்."*

*ரோமர் **12:1,** "அப்படியிருக்க, சகோதரரே, நீங்கள் உங்கள் சரீரங்களைப் பரிசுத்தமும் தேவனுக்குப் பிரியமுமான ஜீவபலியாக ஒப்புக்கொடுக்கவேண்டுமென்று, தேவனுடைய இரக்கங்களை முன்னிட்டு உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்; இதுவே நீங்கள் செய்யத்தக்க புத்தியுள்ள ஆராதனை."*

*ரோமர் **12:19,** "பிரியமானவர்களே, பழிவாங்குதல் எனக்குரியது, நானே பதிற்செய்வேன், என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று எழுதியிருக்கிறபடியால், நீங்கள் பழிவாங்காமல், கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள்."*

*ரோமர் **16:17,** "அன்றியும் சகோதரரே, நீங்கள் கற்றுக்கொண்ட உபதேசத்திற்கு விரோதமாய்ப் பிரிவினையும் இடறல்களையும் உண்டாக்குகிறவர்களைக்குறித்து எச்சரிக்கையாயிருந்து, அவர்களை விட்டு விலகவேண்டுமென்று உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்."*

***சுருக்கமான திரட்டு:***

இந்த திருச்சபையில் கடைசியாக ஊழியம் செய்ய முடிந்ததைப் பற்றி பவுல் உற்சாகமாக இருந்தார், எல்லோரும் அந்த உண்மையை நன்கு அறிந்திருந்தார்கள் (ரோமர் 1:8-15). எருசலேமிலுள்ள ஏழைகளுக்காக வழங்கப்பட்ட தர்மபணத்தை வழங்குவதற்காக பவுல் எருசலேமுக்குச் செல்வதற்கு சற்று முன்பு கொரிந்துவிலிருந்து இந்த நிருபத்தை ரோமர்களுக்கு எழுதினார். பவுல் ஸ்பானியா தேசத்திற்கு செல்லவும் பின்னர் அங்கிருந்து ரோமாபுரி செல்லவும் விரும்பினார் (ரோமர் 15:24), ஆனால் அவர் எருசலேமில் கைது செய்யப்பட்டபோது அவரது திட்டங்கள் தடைபட்டன. அவர் இறுதியில் ஒரு கைதியாக ரோமாபுரிக்கு செல்லும்படியாயிற்று. கொரிந்துக்கு அருகிலுள்ள கெங்கிரேயா ஊர் சபைக்கு ஊழியக்காரியாகிய பெபேயாள் (ரோமர் 16:1), பெரும்பாலும் இந்தக் நிருபத்தை ரோமுவிற்கு கொண்டு சென்றிருக்கலாம்.

ரோமர் புத்தகம் முதன்மையாக ஒரு உபதேசத்தின் கிரியையாகும் மற்றும் அதை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்: தேவையான நீதி, 1:18—3:20; வழங்கப்பட்ட நீதி, 3:21—8:39; நிரூபிக்கப்பட்ட நீதி, 9:1—11:36; மற்றும் நடைமுறைப்படுத்தப்பட்ட நீதி, 12:1—15:13. இந்த நிருபத்தின் முக்கிய கருப்பொருள் நிச்சயமாக வெளிப்படையானதாகும் — அதாவது நீதி. பரிசுத்த ஆவியினால் வழிநடத்தப்பட்ட பவுல் முதலில் எல்லா மனிதர்களையும் அவர்கள் செய்த பாவத்தை கண்டிக்கிறார். தேவனுடைய வார்த்தையின் சத்தியத்தை ரோமில் உள்ளவர்களுக்கும் பிரசங்கிப்பதற்கான தனது விருப்பத்தை அவர் வெளிப்படுத்துகிறார். அவர்கள் சரியான பாதையில் தங்கியிருப்பதாக உறுதியளிப்பது அவருடைய நம்பிக்கையாக இருந்தது. அவர் சுவிசேஷத்தைப் பற்றி வெட்கப்படவில்லை என்று அவர் வலுவாக சுட்டிக்காட்டுகிறார் (ரோமர் 1:16), ஏனென்றால் எல்லோரும் இரட்சிக்கப்படுவதற்கு அதுவே தேவ வல்லமையாக இருக்கிறது.

ரோமர் புத்தகம் தேவனைப் பற்றியும், அவர் யார், அவர் என்ன செய்தார் என்பதையும் சொல்லுகிறது. இது இயேசு கிறிஸ்துவைப் பற்றியும் அவருடைய மரணம் என்ன சாதித்தது என்பதைப் பற்றியும் சொல்லுகிறது. இது நம்மைப் பற்றியும், கிறிஸ்து இல்லாமல் நாம் எப்படி இருந்தோம், கிறிஸ்துவை விசுவாசித்து அவர்மேல் நம்பிக்கை வைத்தபின் நாம் யார் என்பதையுங்குறித்து சொல்லுகிறது. கிறிஸ்துவிடம் வருவதற்கு

*முன்பு மனிதர்கள் தங்கள் வாழ்க்கையை நேராக்க வேண்டும் என்று தேவன் கோரவில்லை என்று பவுல் சுட்டிக்காட்டுகிறார். மாறாக நாம் பாவிகளாக இருந்தபோது கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காக சிலுவையில் மரித்தார் என்று அறிவிக்கிறது.*

## *இணைப்புகள்:*

*பவுல் பல பழைய ஏற்பாட்டு நபர்களையும் நிகழ்வுகளையும் ரோமர் புத்தகத்தில் மேற்கோள் காண்பித்து அவைகளை புகழ்பெற்ற சத்தியங்களின் எடுத்துக்காட்டுகளாகப் பயன்படுத்துகிறார். ஆபிரகாம் விசுவாசித்தார், தேவன் அதை அவருக்கு நீதியாக கணக்கிட்டார், இது ஆபிரகாமுடைய செயல்களால் அல்ல (ரோமர் 4:1-5). ரோமர் 4:6-9-ல், அதே சத்தியத்தை மீண்டும் வலியுறுத்திய தாவீதைப் பவுல் குறிப்பிடுகிறார்: "எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்டதோ, எவனுடைய பாவம் மூடப்பட்டதோ, அவன் பாக்கியவான். எவனுடைய அக்கிரமத்தைக் கர்த்தர் எண்ணாதிருக்கிறாரோ, எவனுடைய ஆவியில் கபடமில்லாதிருக்கிறதோ, அவன் பாக்கியவான்." பவுல் ஆதாமைப் பயன்படுத்தி ரோமர்களுக்கு மரபுரிமையான பாவத்தின் கோட்பாட்டை விளக்குகிறார், மேலும் கிறிஸ்தவர்களின் கொள்கையை விளக்குவதற்கு வாக்குறுதியின் பிள்ளையான சாரா மற்றும் ஈசாக்கின் ஜீவசரிதையைப் பயன்படுத்துகிறார். அதாவது கிறிஸ்துவின் மூலம் தேவனுடைய தெய்வீக கிருபையின் வாக்குத்தத்த பிள்ளைகளாக மாறியிருக்கிறோம். 9-11 வரையிலுள்ள அதிகாரங்களில், பவுல் இஸ்ரவேல் தேசத்தின் வரலாற்றை விவரிக்கிறார், மேலும் தேவன் இஸ்ரவேலை முற்றிலுமாக நிராகரிக்கவில்லை (ரோமர் 11:11-12) என்று அறிவிக்கிறார், ஆனால் புறஜாதியார்கள் இரட்சிப்புக்குள் கொண்டு வரப்படுவதற்கான முழு எண்ணிக்கையும் வரும் வரை மட்டுமே அவர்களை சிறிது "தடுமாற" அனுமதித்திருக்கிறார்.*

## *நடைமுறை பயன்பாடு:*

*நம்மை இரட்சித்துக்கொள்ள நம்மால் எதுவும் செய்ய இயலாது என்பதை ரோமர் புத்தகம் தெளிவுபடுத்துகிறது. நாம் செய்த ஒவ்வொரு "நல்ல"*

*செயலும் தேவனுக்கு முன்பாக ஒரு அழுக்கான கந்தையைப் போன்றதாகும். நாம் நம்முடைய அக்கிரமங்களிலும் பாவங்களிலும் மரித்துவிட்டோம், தேவனுடைய கிருபையும் இரக்கமும் மட்டுமே நம்மைக் இரட்சிக்க முடியும். தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனாகிய இயேசு கிறிஸ்துவை சிலுவையில் மரிக்கும்படி அனுப்புவதன் மூலம் அந்த கிருபையையும் இரக்கத்தையும் அவர் வெளிப்படுத்தினார். நாம் நம் வாழ்க்கையை கிறிஸ்துவிடமாய் திருப்பும்போது, நம்முடைய பாவ இயல்புகளால் இனி நாம் கட்டுப்படுத்தப்படுவதில்லை, ஆனால் அதற்கு மாறாக ஆவியினால் கட்டுப்படுத்தப்படுகிறோம். இயேசுவே கர்த்தர் என்று நாம் அறிக்கை செய்து, அவர் மரித்தோரிலிருந்து உயிரோடெழுப்பப்பட்டார் என்று விசுவாசித்தால், நாம் இரட்சிக்கப்படுவோம், அதன் மூலமாக நாம் மறுபடியும் பிறக்கிறோம். நமது வாழ்க்கையை ஜீவ பலியாக தேவனுக்கு ஒப்புக்கொடுத்து நம் வாழ்க்கையை நாம் வாழ வேண்டும். நம்மை இரட்சித்த தேவனை ஆராதிப்பது நம்முடைய உயர்ந்த விருப்பமாக இருக்க வேண்டும். ரோமர் **1:16**-ஐப் பயன்படுத்துவதும், சுவிசேஷத்தைப் பற்றி வெட்கப்படாமல் இருப்பதும் ரோமர் புத்தகத்தின் சிறந்த பயன்பாடாகும். மாறாக, அதை அறிவிப்பதில் நாம் அனைவரும் உண்மையுள்ளவர்களாக இருப்போமாக!*

# *49. 1 கொரிந்தியர் புத்தகம்*

## *எழுத்தாளர்:*

*1 கொரிந்தியர் முதலாம் அதிகாரம் 1-வது வசனம், 1 கொரிந்தியர் புத்தகத்தின் எழுத்தாளர் அப்போஸ்தலனாகிய பவுல் என்று அடையாளப்படுத்துகிறது.*

## *எழுதப்பட்ட காலம்:*

*1 கொரிந்தியர் புத்தகம் ஏறக்குறைய கி.பி. 55-ல் எழுதப்பட்டதாகும்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*அப்போஸ்தலன் பவுல் கொரிந்துவில் திருச்சபையை நிறுவினார். அங்குள்ள சபையிலிருந்து வெளியேறிய சில ஆண்டுகளுக்குப் பிறகு, கொரிந்திய திருச்சபையைப் பற்றி அப்போஸ்தலனாகிய பவுல் சில பிரச்சனைகளான அறிக்கைகளைக் கேள்விப்பட்டார். அவர்கள் பெருமை நிறைந்தவர்கள் மற்றும் பாலியல் ஒழுக்கக்கேட்டை ஆமோதித்து சமரசம் செய்தனர். ஆவிக்குரிய வரங்கள் முறையற்ற கிரமமில்லாத முறையில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன எனவும், மேலும் முக்கிய கிறிஸ்தவ உபதேச கோட்பாடுகளின் தவறான புரிதல் இருந்தது எனவும் அறிந்தார். கொரிந்து பட்டண திருச்சபையை அதன் அஸ்திபாரமான இயேசு கிறிஸ்துவுக்கு மீட்டெடுக்கும் முயற்சியில் அப்போஸ்தலனாகிய பவுல் கொரிந்தியருக்கு தனது முதல் கடிதத்தை எழுதினார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*1 கொரிந்தியர் 3:3, "பொறாமையும் வாக்குவாதமும் பேதகங்களும் உங்களுக்குள் இருக்கிறபடியால், நீங்கள் மாம்சத்திற்குரியவர்களாயிருந்து மனுஷமார்க்கமாய் நடக்கிறீர்களல்லவா?"*

*1 கொரிந்தியர் 6:19-20, "உங்கள் சரீரமானது நீங்கள் தேவனாலே பெற்றும் உங்களில் தங்கியும் இருக்கிற பரிசுத்த ஆவியினுடைய*

*ஆலயமாயிருக்கிறதென்றும், நீங்கள் உங்களுடையவர்களல்லவென்றும் அறியீர்களா? கிரயத்துக்குக் கொள்ளப்பட்டீர்களே; ஆகையால் தேவனுக்கு உடையவைகளாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியினாலும் தேவனை மகிமைப்படுத்துங்கள்.*"

*1 கொரிந்தியர் 10:31,* "*ஆகையால் நீங்கள் புசித்தாலும், குடித்தாலும், எதைச் செய்தாலும், எல்லாவற்றையும் தேவனுடைய மகிமைக்கென்று செய்யுங்கள்.*"

*1 கொரிந்தியர் 12:7,* "*ஆவியினுடைய அநுக்கிரகம் அவனவனுடைய பிரயோஜனத்திற்கென்று அளிக்கப்பட்டிருக்கிறது.*"

*1 கொரிந்தியர் 13:4-7,* "*அன்பு நீடிய சாந்தமும் தயவுமுள்ளது; அன்புக்குப் பொறாமையில்லை; அன்பு தன்னைப் புகழாது, இறுமாப்பாயிராது, அயோக்கியமானதைச் செய்யாது, தற்பொழிவை நாடாது, சினமடையாது, தீங்கு நினையாது, அநியாயத்தில் சந்தோஷப்படாமல், சத்தியத்தில் சந்தோஷப்படும். சகலத்தையும் தாங்கும், சகலத்தையும் விசுவாசிக்கும், சகலத்தையும் நம்பும், சகலத்தையும் சகிக்கும்.*"

*1 கொரிந்தியர் 15:3-4,* "*நான் அடைந்ததும் உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததும் என்னவென்றால், கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார்.*"

## சுருக்கமான திரட்டு:

*கொரிந்துவிலுள்ள திருச்சபையானது பல்வேறு உட்பிவுகளால் பாதிக்கப்பட்டிருந்தது. கொரிந்துவிலுள்ள விசுவாசிகள் சில ஆவிக்குரியத் தலைவர்களுக்கு விசுவாசமுள்ள குழுக்களாகப் பிரிந்து இருந்தார்கள் (1 கொரிந்தியர் 1:12; 3:1-6). கிறிஸ்துவுக்குள்ள தேவபக்தியால் கொரிந்து சபை விசுவாசிகள் ஒன்றுபட வேண்டும் என்று பவுல் அறிவுறுத்தினார் (1 கொரிந்தியர் 3:21-23). திருச்சபையில் பலர் அடிப்படையில்*

ஒழுக்கக்கேடான உறவை அங்கீகரித்து ஏற்றுக்கொண்டனர் (1 கொரிந்தியர் 5:1-2). துன்மார்க்கரை சபையிலிருந்து வெளியேற்றும்படி பவுல் அவர்களுக்குக் கட்டளையிட்டார் (1 கொரிந்தியர் 5:13). கொரிந்து சபை விசுவாசிகள் ஒருவருக்கொருவர் வழக்குண்டாக்கிக்கொண்டு அவர்களுக்கு எதிராக நீதிமன்றத்திற்கு சென்றார்கள் (1 கொரிந்தியர் 6:1-2). கிறிஸ்தவ சாட்சியை சேதப்படுத்துவதை விட சாதகமாகப் பயன்படுத்துவது நல்லது என்று பவுல் கொரிந்தியருக்குக் கற்பித்தார் (1 கொரிந்தியர் 6:3-8).

பவுல் கொரிந்து சபையிலுள்ள விசுவாசிகளுக்கு திருமணம் மற்றும் பிரம்மச்சரியம் (7-ஆம் அதிகாரம்), விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட உணவு (8 மற்றும் 10 வது அதிகாரங்கள்), கிறிஸ்தவ சுதந்திரம் (9-ஆம் அதிகாரம்), ஸ்திரீகள் தலையை முக்காடிட்டுக்கொண்டிருத்தல் (1 கொரிந்தியர் 11:1-16), கர்த்தருடைய பந்தி (1 கொரிந்தியர் 11:17-34), ஆவிக்குரிய வரங்கள் (12-14 வரையிலுள்ள அதிகாரங்கள்), மற்றும் உயிர்த்தெழுதல் (15-ஆம் அதிகாரம்) ஆகியவைகளைக் குறித்த போதனைகள் மற்றும் அறிவுரைகளை வழங்கினார். கொரிந்து சபை விசுவாசிகள் அவரிடம் கேட்ட கேள்விகளுக்கு பதிலளிப்பதன் மூலமும், அவர்கள் ஏற்றுக்கொண்ட தவறான நடத்தை மற்றும் தவறான நம்பிக்கைகளுக்கு பதிலளிப்பதன் மூலமும் பவுல் 1 கொரிந்தியர் புத்தகத்தை சீராக மற்றும் நேர்த்தியாக எழுதினார்/வடிவமைத்தார்.

## இணைப்புகள்:

1 கொரிந்தியர் புத்தகத்தின் 10-ஆம் அதிகாரத்தில், பவுல் வனாந்தரத்தில் அலைந்து திரிந்த இஸ்ரவேலர்களின் சரித்திரத்தை கொரிந்து சபை விசுவாசிகளுக்கு எடுத்துக்காட்டி விளக்குகிறார். கொரிந்தியர்களுக்கு சுய ஒழுக்கம் மற்றும் கட்டுப்பாடு இல்லாததைப் பற்றி பவுல் கடுமையாக எச்சரித்திருக்கிறார் (1 கொரிந்தியர் 9:24-27). தேவனுடைய அற்புதங்களைப் பார்த்து, அவர்களை தேவன் எவ்வாறு கருதினார் என்பதை அறிந்தபோதிலும், செங்கடலை இரண்டாகப் பிரித்தது, வானத்திலிருந்து மன்னா மற்றும் ஒரு பாறையிலிருந்து தண்ணீர் போன்ற அற்புதமான ஏற்பாடுகளைச் செய்தபோதிலும், அவர்கள் தங்கள்

*சுதந்திரத்தை தவறாகப் பயன்படுத்தினார்கள், தேவனுக்கு எதிராகக் கலகம் செய்தார்கள், ஒழுக்கக்கேடு மற்றும் விக்கிரக ஆராதனை போன்றவற்றில் ஈடுபட்டார்கள். இஸ்ரவேலரின் முன்மாதிரியைக் கவனிக்கவும், காமங்களையும் பாலியல் ஒழுக்கக்கேட்டையும் தவிர்க்கவும் மற்றும் கிறிஸ்துவை சோதனைக்கு உட்படுத்தி புகார் கூறுகிறதை தவிர்க்கவும் பவுல் கொரிந்து சபை விசுவாசிகளை அறிவுறுத்துகிறார் (வச. 6-10). எண்ணாகமம் 11:4, 34, 25:1-9; யாத்திராகமம் 16:2, 17:2, 7 ஆகிய வசனங்களையும் காண்க.*

## ***நடைமுறை பயன்பாடு:***

*கொரிந்து சபையானது கையாண்ட பல பிரச்சினைகள் மற்றும் கேள்விகள் இன்றும் இன்றைய திருச்சபைகளில் காணப்படுகின்றன. திருச்சபைகள் இன்றும் பிளவுகளுடன், ஒழுக்கக்கேட்டோடு, ஆவிக்குரிய வரங்களைப் பயன்படுத்துகின்றன. 1 கொரிந்தியர் புத்தகம் இன்றுள்ள திருச்சபைக்கும் மிக நன்றாக எழுதப்பட்டிருக்கிறது, ஆகையால் பவுலின் எச்சரிக்கைகளுக்கு செவிசாய்த்து அவற்றை நமக்குப் பயன்படுத்துவோமாக. எல்லா கண்டனங்களும் திருத்தங்களும் இருந்தபோதிலும், 1 கொரிந்தியர் புத்தகம் கிறிஸ்துவின் மீது நமக்கு இருக்க வேண்டிய இடத்திற்கு நம் கவனத்தை மீண்டும் கொண்டு வருகிறது. உண்மையான கிறிஸ்தவ அன்பு பல பிரச்சினைகளுக்கு விடையாக இருக்கிறது (13-வது அதிகாரம்). கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல் பற்றிய சரியான புரிதல், 15 ஆம் அதிகாரத்தில் வெளிப்படுத்தப்பட்டுள்ளபடி, அதன் மூலம் நம்முடைய சொந்த உயிர்த்தெழுதலைப் பற்றிய சரியான புரிதலும், நம்மைப் பிரித்து தோற்கடிப்பதற்கான காரணிகளுக்கு தீர்வாகும்.*

# *50. 2 கொரிந்தியர் புத்தகம்*

## *எழுத்தாளர்:*

*2 கொரிந்தியர் புத்தகம் முதலாம் அதிகாரத்தின் முதலாவது வசனம், 2 கொரிந்தியர் புத்தகத்தின் எழுத்தாளர் அப்போஸ்தலனாகிய பவுல் என்று அடையாளம் காட்டுகிறது, ஒருவேளை தீமோத்தேயுவுடன் சேர்ந்து பவுல் இதை எழுதியிருக்கலாம்.*

## *எழுதப்பட்ட காலம்:*

*2 கொரிந்தியர் புத்தகம் ஏறக்குறைய கி.பி. 55-57 வரையிலுள்ள காலக்கட்டத்தில் எழுதப்பட்டிருக்கலாம்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*கொரிந்து திருச்சபை கி.பி. 52-ல் பவுல் தனது இரண்டாவது சுவிசேஷப் பயணத்தில் அங்கு சென்றபோது ஆரம்பிக்கப்பட்டதாகும். அப்போதுதான் அவர் ஒன்றரை ஆண்டுகள் காலம் அங்கே தங்கியிருந்தார், இங்குதான் முதல் முறையாக அவர் விரும்பிய வரை ஒரே இடத்தில் தங்க அனுமதிக்கப்பட்டார். இந்த பயணம் மற்றும் திருச்சபையின் ஆரம்பம் பற்றிய பதிவு அப்போஸ்தலர் 18:1-18-ல் காணப்படுகிறது.*

*கொரிந்தியருக்கு எழுதிய இரண்டாவது நிருபத்தில், கொரிந்தியர்கள் (விசுவாசிகள்) தன்னுடைய "கடுமையான" நிருபத்தை (இப்போது அது இல்லை, அது இழந்துபோய்விட்டது) நேர்மறையான முறையில் பெற்றிருப்பதாக பவுல் தனது நிம்மதியையும் மகிழ்ச்சியையும் வெளிப்படுத்துகிறார். அந்த கடிதம் திருச்சபையை கிழித்தெறியும் பிரச்சினைகளைக் குறித்து உரையாற்றியது, முதன்மையாக சுய பாணியில் (தவறான) அப்போஸ்தலர்களின் வருகை (2 கொரிந்தியர் 11:13) அவர்கள் பவுலின் தன்மையைத் தாக்கி, விசுவாசிகளிடையே கருத்து வேறுபாட்டை விதைத்து, தவறான கோட்பாட்டைக் கற்பித்தனர். அவருடைய உண்மைத்தன்மை (2 கொரிந்தியர் 1:15-17), அவர் பேசும் திறன் (2 கொரிந்தியர் 10:10; 11:6) மற்றும் கொரிந்து சபையின் ஆதரவை ஏற்க*

*அவர் விரும்பாதது போன்றவற்றை அவர்கள் கேள்விக்குள்ளாக்கியதாகத் தெரிகிறது (2 கொரிந்தியர் 11:7- 9; 12:13). அவர்களுடைய உரிமம் பெற்ற நடத்தையிலிருந்து மனந்திரும்பாத சிலரும் இருந்தார்கள் (2 கொரிந்தியர் 12:20-21).*

*கொரிந்தியர்களில் பெரும்பாலானோர் பவுலுக்கு எதிரான கிளர்ச்சியிருந்து மனந்திரும்பியதாக தீத்துவிடமிருந்து பவுல் கேட்டறிந்து பெரும் மகிழ்ச்சியடைந்தார் (2 கொரிந்தியர் 2:12-13; 7:5-9). அப்போஸ்தலனாகிய பவுல் இதற்காக தனது உண்மையான அன்பின் வெளிப்பாடாக அவர்களை ஊக்குவிக்கிறார் (2 கொரிந்தியர் 7:3-16). ஏழைகளுக்காக ஒரு தர்மபணத்தை சேகரிப்பதை முடிக்கவும் (8—9 அதிகாரங்கள்) பொய்யான போதகர்களுக்கு எதிராக கடுமையான நிலைப்பாட்டை எடுக்கவும் பவுல் கொரிந்தியர்களை வலியுறுத்தினார் (10—13 வரையிலுள்ள அதிகாரங்கள்). இறுதியாக, பவுல் தான் அப்போஸ்தலனாக இருப்பதை நிரூபித்தார், ஏனெனில் சபையில் சிலர் அவருடைய அப்போஸ்தல அதிகாரத்தை கேள்விக்குள்ளாக்கியிருக்கலாம் (2 கொரிந்தியர் 13:3).*

## திறவுகோல் வசனங்கள்:

*2 கொரிந்தியர் 3:5, "எங்களால் ஏதாகிலும் ஆகும் என்பதுபோல ஒன்றை யோசிக்கிறதற்கு நாங்கள் எங்களாலே தகுதியானவர்கள் அல்ல; எங்களுடைய தகுதி தேவனால் உண்டாயிருக்கிறது."*

*2 கொரிந்தியர் 3:18, "நாமெல்லாரும் திறந்த முகமாய்க் கர்த்தருடைய மகிமையைக் கண்ணாடியிலே காண்கிறதுபோலக் கண்டு, ஆவியாயிருக்கிற கர்த்தரால் அந்தச் சாயலாகத்தானே மகிமையின்மேல் மகிமையடைந்து மறுரூபப்படுகிறோம்."*

*2 கொரிந்தியர் 5:17, "இப்படியிருக்க, ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புதுச்சிருஷ்டியாயிருக்கிறான்; பழையவைகள் ஒழிந்துபோயின, எல்லாம் புதிதாயின."*

*2 கொரிந்தியர் 5:21, "நாம் அவருக்குள் தேவனுடைய நீதியாகும்படிக்கு, பாவம் அறியாத அவரை நமக்காகப் பாவமாக்கினார்."*

*2 கொரிந்தியர் 10:5, "அவைகளால் நாங்கள் தர்க்கங்களையும், தேவனை அறிகிற அறிவுக்கு விரோதமாய் எழும்புகிற எல்லா மேட்டிமையையும் நிர்மூலமாக்கி, எந்த எண்ணத்தையும் கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியச் சிறைப்படுத்துகிறவர்களாயிருக்கிறோம்."*

*2 கொரிந்தியர் 13:4, "ஏனெனில் அவர் பலவீனத்தால் சிலுவையில் அறையப்பட்டிருந்தும், தேவனுடைய வல்லமையினால் பிழைத்திருக்கிறார்; அப்படி நாங்களும் அவருக்குள் பலவீனராயிருந்தும், உங்களிடமாய் விளங்கிய தேவனுடைய வல்லமையினால் அவருடனேகூடப் பிழைத்திருப்போம்."*

**சுருக்கமான திரட்டு:**

*கொரிந்து திருச்சபையிலுள்ள விசுவாசிகளை வாழ்த்தி, முதலில் திட்டமிட்டபடி அவர் ஏன் அவர்களை சந்திக்கவில்லை என்பதை விளக்கிய பிறகு (வச. 1: 3—2:2), பவுல் தனது ஊழியத்தின் தன்மையை விளக்குகிறார். கிறிஸ்துவின் மூலம் வெற்றியும், தேவனுக்கு முன்பாக நேர்மையும் அவர் திருச்சபைகளுக்கு செய்த ஊழியத்தின் அடையாளங்களாக இருந்தன (2:14-17). அவர் கிறிஸ்துவினுடைய நீதியின் புகழ்பெற்ற ஊழியத்தை நியாயப்பிரமாணமான "கண்டன ஊழியத்திற்கு" ஒப்பிடுகிறார் (வசனம் 3:9) மற்றும் கடுமையான துன்புறுத்தல்களுக்கு மத்தியிலும் தனது ஊழியத்தின் செல்லுபடியாகும் நம்பிக்கையை அவர் அறிவிக்கிறார் (4:8-18) . 5-ஆம் அதிகாரம் கிறிஸ்தவ விசுவாசத்தின் அடிப்படையைக் கோடிட்டுக் காட்டுகிறது - புதிய சுபாவம் (வச. 17) மற்றும் கிறிஸ்துவின் நீதிக்காக நம்முடைய பாவத்தை பரிமாறிக்கொள்வது (வச. 21).*

*6 மற்றும் 7-வது அதிகாரங்கள் பவுல் தன்னையும் ஊழியத்தையும் பாதுகாத்து வருவதைக் காண்பிக்கின்றன, கொரிந்தியர்களிடம் அவர்மீது வைத்திருக்கும் நேர்மையான அன்பை மீண்டும் உறுதிப்படுத்துவதோடு*

மனந்திரும்புதலுக்கும் பரிசுத்த வாழ்க்கைக்கும் அவர்களை அறிவுறுத்துகின்றன. 8 மற்றும் 9-ஆம் அதிகாரங்களில், கொரிந்திலுள்ள விசுவாசிகளுக்கு மக்கதொனியாவில் உள்ள சகோதரர்களின் முன்மாதிரிகளைப் பின்பற்றவும், தேவைப்படும் பரிசுத்தவான்களுக்கு தாராள மனப்பான்மையை வழங்கவும் பவுல் அறிவுறுத்துகிறார். இரக்கத்துடன் கொடுப்பதன் கொள்கைகளையும் வெகுமதிகளையும் அவர் அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கிறார்.

பவுல் தமது அப்போஸ்தல அதிகாரத்தை மீண்டும் வலியுறுத்துவதன் மூலம் தனது கடிதத்தை முடிக்கிறார் (10வது அதிகாரம்) மற்றும் பொய்யான கள்ள அப்போஸ்தலர்களிடமிருந்து கடுமையான எதிர்ப்பை எதிர்கொள்வதில் அவர்கள் உண்மையுள்ளவர்களாக இருப்பதைக் கவனித்துக்கொள்கிறார். தன்னுடைய தகுதிகளையும், கிறிஸ்துவுக்காக அவர் அனுபவித்த துன்பங்களையும் தயக்கமின்றி பெருமைப்படுத்தியதற்காக அவர் தன்னை ஒரு "முட்டாள்" என்று அழைக்கிறார் (அத்தியாயம் 11). அவர் அனுபவிக்க அனுமதிக்கப்பட்ட பரலோகத்தின் தரிசனத்தையும், அவருடைய மனத்தாழ்மையையும் உறுதிப்படுத்த தேவனால் அவருக்கு வழங்கப்பட்ட "மாம்சத்தில் உள்ள முள்ளையும்" விவரிப்பதன் மூலம் அவர் தனது நிருபத்தை முடிக்கிறார் (12வது அதிகாரம்). கடைசி அதிகாரத்தில் கொரிந்தியருக்கு அவர்களுக்கு அறிவுறுத்துவது யதார்த்தமானதா என்று தங்களை ஆராய்ந்து பார்க்க வேண்டும் என்றும், மேலும் அன்பு மற்றும் சமாதானத்தின் ஒரு முடிவோடு முடிகிறது.

## இணைப்புகள்:

பவுல் தனது நிருபங்கள் முழுவதும், மோசேயின் சட்டத்தை அடிக்கடி மேற்கொள்காட்டிக் குறிப்பிடுகிறார், அதை இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியின் மிகைப்படுத்தப்பட்ட மகத்துவத்துடனும், கிருபையால் உண்டாகும் இரட்சிப்பிற்கும் ஒப்பிடுகிறார். 2 கொரிந்தியர் 3:4-11-ல், பவுல் பழைய ஏற்பாட்டு நியாயப்பிரமாணச் சட்டத்தை கிருபையின் புதிய உடன்படிக்கையுடன் முரண்படுத்துகிறார், நியாயப்பிரமாணம் கொல்கிறது என்றும் ஆவியானது உயிர்ப்பிக்கிறது என்றும்

நியாயப்பிரமாண சட்டத்தைக் குறித்துக் குறிப்பிடுகிறார். நியாயப்பிரமாணச் சட்டம் என்பது "எழுத்துக்களினால் எழுதப்பட்டுக் கற்களில் பதிந்திருந்த மரணத்துக்கேதுவான ஊழியம்" (வச. 7; யாத்திராகமம் 24:12) ஏனெனில் அது பாவத்தைப் பற்றிய அறிவையும் அதன் கண்டனத்தையும் மட்டுமே தருகிறது. நியாயப்பிரமாணத்தின் மகிமை என்னவென்றால், அது தேவனுடைய மகிமையை பிரதிபலிக்கிறது, ஆனால் ஆவியின் ஊழியம் நியாயப்பிரமாணத்தின் ஊழியத்தை விட மிகவும் மகிமையானது, ஏனென்றால் அது கிறிஸ்துவை நியாயப்பிரமாணத்தின் நிறைவேறுதலாக வழங்குவதில் அவருடைய இரக்கம், கிருபை மற்றும் அன்பை பிரதிபலிக்கிறது.

## நடைமுறை பயன்பாடு:

இந்த நிருபம் பவுலின் நிருபங்களில் மிகவும் கூடுதல் சுயசரிதை மற்றும் குறைந்தளவு போதனைக்கோட்பாடு அடங்கியதாகும். இந்த நிருபமானது மற்றெல்லாவற்றைக் காட்டிலும் பவுலைப் பற்றி ஒரு நபராகவும் ஊழியராகவும் நமக்கு அதிகம் சொல்லுகிறது. இவற்றிலிருந்து சில விஷயங்களை நாமும் எடுத்து இன்று நம் வாழ்விற்குப் பயன்படுத்தலாம். முதல் விஷயம் உக்கிராணத்துவம், பண விஷயத்தில் மட்டுமல்ல, நேரமும் கூட. மக்கதொனியாவில் உள்ளவர்கள் தாராளமாகக் கொடுத்ததோடு மட்டுமல்லாமல், "தேவனுடைய சித்தத்தினாலே முன்பு தங்களைத்தாமே கர்த்தருக்கும், பின்பு எங்களுக்கும் ஒப்புக்கொடுத்தார்கள்" (2 கொரிந்தியர் 8:5). அதேபோல், தேவனுக்காக நம்மிடமுள்ள அனைத்தையும் மட்டுமல்ல, நம்மையே முழுமையாக அர்ப்பணிக்க வேண்டும். அவருக்கு உண்மையில் நம்முடைய பணம் தேவையில்லை. அவர் சர்வ வல்லமையுள்ளவர்! அவர் விரும்புவது நம் இதயத்தை தான், நாம் முழு இருதயத்தோடு சேவை செய்ய விரும்புகிறார், நம்மேல் தயவு காண்பித்து நேசிக்கிறார். உக்கிராணத்துவம் மற்றும் தேவனுக்கு கொடுத்தல் என்பது பணத்தை விட மேலானதாகும். ஆம், நம்முடைய வருமானத்தின் ஒரு பகுதியை நாம் தசமபாகமாக கொடுக்க வேண்டும் என்று தேவன் விரும்புகிறார், நாம் அவருக்குக் கொடுக்கும்போது அவர் நம்மை ஆசீர்வதிப்பார் என்று வாக்குறுதியும் அளிக்கிறார். இன்னும் அதிகம்

*உள்ளது. தேவன் 100% விரும்புகிறார். நம்முடைய அனைத்தையும் அவருக்குக் கொடுக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். நாமும் நமக்குள்ளது எல்லாமும் அவருக்கே உரியதாகும். நம்முடைய பிதாவுக்கு சேவை செய்வதற்காக நாம் நம் வாழ்க்கையை வாழ வேண்டும். நம்முடைய சம்பளக் காசோலையிலிருந்து நாம் தேவனுக்குக் கொடுக்கக் கூடாது, ஆனால் நம்முடைய வாழ்க்கையே அவருக்கு கொடுக்கவேண்டும், அது அவரைப் பிரதிபலிப்பதாக இருக்க வேண்டும். நாம் முதலில் கர்த்தருக்கும், பின்னர் திருச்சபைக்கும், இயேசு கிறிஸ்துவினுடைய ஊழியத்தின் வேலைக்காகவும் கொடுக்க வேண்டும்.*

# 51. கலாத்தியருக்கு எழுதின நிருபம்

## எழுத்தாளர்:

*கலாத்தியர் 1:1-வது வசனம் அப்போஸ்தலனாகிய பவுலை கலாத்தியருக்கு எழுதின நிருபத்தின் எழுத்தாளராக தெளிவாக அடையாளம் காட்டுகிறது.*

## எழுதப்பட்ட காலம்:

*கலாத்தியருக்கு எழுதின நிருபம் சரியாக எங்கு அனுப்பப்பட்டது என்பதையும், எந்த மிஷனரி பயணத்தின் போது பவுல் அந்த பகுதியில் திருச்சபைகளை ஸ்தாபித்தார் என்பதையும் பொறுத்து, கலாத்தியருக்கு எழுதின நிருபம் கி.பி. 48 முதல் கி.பி. 55 வரையிலுள்ள காலக்கட்டத்தில் எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*கலாத்தியாவில் உள்ள திருச்சபைகள் மனந்திரும்பி கிறிஸ்துவை விசுவாசித்த யூதர்கள் மற்றும் புறஜாதியினரை கொண்டிருந்தது. பவுல் தனது அப்போஸ்தல குணத்தையும், அவர் கற்பித்த கோட்பாடுகளையும் வலியுறுத்துகிறார், அவர் கிறிஸ்துவின்மேலுள்ள விசுவாசத்தில் கலாத்திய திருச்சபைகளை உறுதிப்படுத்தும் நோக்கத்தில், குறிப்பாக விசுவாசத்தால் மட்டுமே நீதிமானாக்கப்பட முடியும் என்பதான முக்கியமான கருத்தை வலியுறுத்தினார். ஆகவே இந்த பொருள் முக்கியமாக ரோமர்களுக்கு எழுதிய நிருபத்தில் விவாதிக்கப்பட்டதைப் போன்றது, அதாவது விசுவாசத்தால் மட்டுமே நீதிமானாக்கப்படுகிறார்கள். எவ்வாறாயினும், இந்த நிருபத்தில் மோசேயின் நியாயப்பிரமாணத்தின் செயல்கள் இல்லாமல் மனிதர்கள் விசுவாசத்தினால் நீதிமானாக்கப்படுகிறார்கள் என்பதில் கவனம் செலுத்தப்படுகிறது.*

*சமகால வரலாறு அடங்கிய ஒரு கட்டுரையாக இந்த கலாத்தியர் நிருபம் எழுதப்படவில்லை. இது கிறிஸ்துவின் சுவிசேஷத்தை அசுசிப்படுத்துதலுக்கு எதிரான போராட்டமாகும். நியாயப்பிரமாணத்தின் செயல்களால் அல்லாமல் விசுவாசத்தால் நீதிமானாக்கப்படுவதற்கான*

*அத்தியாவசிய சத்தியத்தை யூதர்கள் புறக்கணித்து, தேவனுக்கு முன்பாக பரிபூரணமாக இருக்க வேண்டுமானால் கிறிஸ்தவ விசுவாசிகள் நியாயப்பிரமாண சட்டத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று வலியுறுத்தினார்கள். இந்த போதனை கலாத்திய திருச்சபைகளில் ஊடுருவத் தொடங்கியிருப்பதாகவும், அது அவர்களின் சுதந்திரத்தின் பாரம்பரியத்திலிருந்து அவர்களை அந்நியப்படுத்தியதாகவும் பவுல் அறிந்தபோது, இந்த நிருபத்தில் உள்ள உணர்ச்சிமிக்க மறுபரிசீலனை ஒன்றை எழுதினார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*கலாத்தியர் **2:16,** "நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலே எந்த மனுஷனும் நீதிமானாக்கப்படுவதில்லையே."*

*கலாத்தியர் **2:20,** "கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையிலறையப்பட்டேன்; ஆயினும், பிழைத்திருக்கிறேன்; இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்பொழுது மாம்சத்தில் பிழைத்திருக்கிறதோ, என்னில் அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப்பற்றும் விசுவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன்."*

*கலாத்தியர் **3:11,** "நியாயப்பிரமாணத்தினாலே ஒருவனும் தேவனிடத்தில் நீதிமானாகிறதில்லையென்பது வெளியரங்கமாயிருக்கிறது. ஏனெனில், விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான் என்று எழுதியிருக்கிறதே."*

*கலாத்தியர் **4:5-6,** "காலம் நிறைவேறினபோது, ஸ்திரீயினிடத்திற் பிறந்தவரும் நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவருமாகிய தம்முடைய குமாரனை தேவன் அனுப்பினார். மேலும் நீங்கள் புத்திரராயிருக்கிறபடியினால், அப்பா, பிதாவே! என்று கூப்பிடத்தக்கதாக தேவன் தமது குமாரனுடைய ஆவியை உங்கள் இருதயங்களில் அனுப்பினார்."*

*கலாத்தியர் **5:22-23,** "ஆவியின் கனியோ, அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடியபொறுமை, தயவு, நற்குணம், விசுவாசம், சாந்தம்,*

இச்சையடக்கம்; இப்படிப்பட்டவைகளுக்கு விரோதமான பிரமாணம் ஒன்றுமில்லை.''

கலாத்தியர் 6:7, ''மோசம்போகாதிருங்கள், தேவன் தம்மைப் பரியாசம்பண்ணவொட்டார்; மனுஷன் எதை விதைக்கிறானோ அதையே அறுப்பான்.''

## சுருக்கமான திரட்டு:

விசுவாசத்தின் மூலம் கிருபையால் நீதிமானாக்கப்பட்டதன் விளைவாக ஆவிக்குரிய சுதந்திரம் கிடைத்திருக்கிறது. பவுல் கலாத்தியரை அவர்களது கிறிஸ்தவ சுதந்திரத்தில் நிலைத்து நிற்கும்படிக்கு வேண்டுகோள் விடுத்தார், மேலும் "அவர்களை மறுபடியும் அடிமைத்தனத்தின் நுகத்துக்குட்படாமல் (அதாவது மோசேயின் நியாயப்பிரமாணம்), கிறிஸ்து நமக்கு உண்டாக்கின சுயாதீன நிலைமையிலே நிலைகொண்டிருங்கள்" (கலாத்தியர் 5:1) என்று கூறினார். கிறிஸ்தவ சுதந்திரம் என்பது ஒருவரின் தாழ்ந்த தன்மையைப் உயர்த்திக் காண்பித்து அதனால் திருப்தி அடைந்துகொள்வது அல்ல; மாறாக, இது ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவதற்கான ஒரு வாய்ப்பாகும் (கலாத்தியர் 5:13; 6:7-10). இத்தகைய சுதந்திரம் ஒருவரை அவரது வாழ்க்கைப் போராட்டங்களிலிருந்து இரட்சிக்காது. உண்மையில், அது ஆவிக்கும் மாம்சத்திற்கும் இடையிலான போரை தீவிரப்படுத்தக்கூடும். ஆயினும், மாம்சமானது (கீழான சுபாவம்) கிறிஸ்துவுடன் சிலுவையில் அறையப்பட்டுள்ளது (கலாத்தியர் 2:20); அதன் விளைவாக, ஆவியானவர் விசுவாசியின் வாழ்க்கையில் அன்பு, சந்தோஷம், மற்றும் சமாதானம் போன்ற ஆவியின் கனியதைத் தரும்படிச் செய்வார் (கலாத்தியர் 5:22-23).

கலாத்தியர்களுக்கு எழுதிய நிருபம் ஈர்க்கப்பட்ட கிளர்ச்சியின் உந்துதலால் எழுதப்பட்டது. பவுலைப் பொறுத்தமட்டில், ஒரு நபர் விருத்தசேதனம் செய்யப்பட்டாரா என்பது அல்ல, ஆனால் அவர் "ஒரு புதிய சிருஷ்டி" ஆகிவிட்டாரா என்பதுதான் (கலாத்தியர் 6:15) முக்கியமான காரியமாகும். விசுவாசத்தால் மட்டுமே நீதிமானாக்கப்படுவதற்கான விவாதத்தில் பவுல் வெற்றிபெறவில்லை என்றால், கிறிஸ்தவ மதம்

*உலகளாவிய இரட்சிப்பின் வழியாக இருப்பதற்குப் பதிலாக யூத மதத்திற்குள் ஒரு பிரிவாகவே இருந்திருக்கும். ஆகவே, கலாத்தியருக்கு எழுதப்பட்ட நிருபம் லூத்தரின் நிருபம் மட்டுமல்ல; பவுலுடன் அறிக்கைசெய்யும் ஒவ்வொரு விசுவாசியின் நிருபமும் இதுதான்: "கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையிலறையப்பட்டேன்; ஆயினும், பிழைத்திருக்கிறேன்; இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்; நான் இப்பொழுது மாம்சத்தில் பிழைத்திருக்கிறதோ, என்னில் அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப்பற்றும் விசுவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன்" (கலாத்தியர் 2:20).*

*கிறிஸ்தவத்தின் இரண்டு அம்சங்களை யாக்கோபு மற்றும் கலாத்தியர் புத்தகங்கள் விளக்குகின்றன, ஆரம்பத்தில் இருந்தே அவைகள் இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பாடாகத் தெரிகின்றன, ஆனால் அவை உண்மையில் ஒன்றுக்கொன்று துணை நிற்கின்றன. கிறிஸ்துவின் நன்நெறிமுறையை யாக்கோபு வலியுறுத்துகிறார், விசுவாசமானது அதன் பலன்களால் அதனுடைய இருப்பை நிரூபிக்க வேண்டும் என்ற கோரிக்கையை முன்வைக்கிறார். ஆயினும், யாக்கோபு, பவுலுக்கு எந்த விதத்திலும் குறையாமல், தேவனுடைய கிருபையால் தான் தனிநபரின் மனமாற்றம் என்கிற அவசியத்தை வலியுறுத்துகிறார் (யாக்கோபு 1:18). மறுபுறம் நன்நெறிமுறையை உருவாக்கும் நற்செய்தியின் ஆற்றலை கலாத்தியர் நிருபம் வலியுறுத்துகிறது (கலாத்தியர் 3:13-14). நன்நெறிமுறை வாழ்க்கையைப் பற்றி பவுல் யாக்கோபை விடக் குறைவாக அக்கறை காட்டவில்லை (கலாத்தியர் 5:13). ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போலவே, கிறிஸ்தவ சத்தியத்தின் இந்த இரண்டு அம்சங்களும் எப்போதும் ஒன்றுக்கொன்று நிகராக துல்லியமாக இருக்க வேண்டும்.*

## இணைப்புகள்:

*கலாத்தியருக்கு பவுல் எழுதிய இந்த நிருபம் முழுவதும், கிருபையால் இரட்சிக்கப்படுதல் — அது தேவனுடைய ஈவு — அது இரட்சிக்க இயலாத மோசேயின் நியாயப்பிரமாணத்திற்கு எதிராக இணைக்கப்பட்டுள்ளது. நீதிமானாக்கப்படுத்துதலுக்கான ஆதாரமாக*

*மோசேயின் நியாயப்பிரமாணத்திற்கு திரும்பும் யூதர்கள், ஆரம்பகால திருச்சபையில் முக்கியத்துவம் வாய்ந்தவர்கள், பேதுரு போன்ற ஒரு முக்கிய கிறிஸ்தவரை தற்காலிகமாக தங்கள் வஞ்சக வலையில் இவர்கள் இழுக்கிறார்கள் (கலாத்தியர் **2:11-13).** கிருபையினாலே உண்டாகும் இரட்சிப்புக்கும் நியாயப்பிரமாணத்தைக் கடைப்பிடிப்பதற்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை என்ற உண்மையை பவுல் தொடர்ந்து மீண்டும் மீண்டும் வலியுறுத்த வேண்டிய அளவிற்கு ஆரம்பகால கிறிஸ்தவர்கள் நியாயப்பிரமாணத்துடன் இணைந்திருந்தனர். நியாயப்பிரமாணத்தைச் சுற்றியுள்ள பழைய ஏற்பாட்டு மையத்துடன் கலாத்தியர் நிருபத்தை இணைக்கும் கருப்பொருள்கள்: கிருபை vs நியாயப்பிரமாணம்: நீதிமானாக்கமுடியாத நியாயப்பிரமாணம் **(2:16);** விசுவாசி நியாயப்பிரமாணத்திற்கு மரித்தவராக இருக்கிறார் **(2:19);** விசுவாசத்தால் ஆபிரகாம் நீதிமானாக்கப்படுகிறார் **(3:6);** நியாயப்பிரமாணம் இரட்சிப்பைக் கொண்டுவருவதில்லை, ஆனால் தேவனுடைய கோபத்தை அது கொண்டுவருகிறதாய் இருந்தது **(3:10);** அன்பு, கிரியை அல்ல, நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறது **(5:14).***

## ***நடைமுறை பயன்பாடு:***

*கலாத்தியர் புத்தகத்தின் முக்கிய கருப்பொருளில் ஒன்று **3:11**-ல் காணப்படுகிறது: "விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான்." விசுவாசத்தினால் நாம் இரட்சிக்கப்படுவது மட்டுமல்ல (யோவான் **3:16;** எபேசியர் **2:8-9),** ஆனால் கிறிஸ்துவை விசுவாசிப்பவரின் வாழ்க்கை - நாளுக்கு நாள், ஒவ்வொரு கணமும் - அந்த விசுவாசத்தினாலும் அதன் மூலமும் வாழ்கிறது. விசுவாசம் என்பது நாம் சொந்தமாகக் கற்பனை செய்யும் ஒன்று அல்ல — அது தேவனுடைய ஈவாக இருக்கிறது, கிரியைகளால் அல்ல - ஆனால் (1) நம்முடைய விசுவாசத்தை வெளிப்படுத்துவது நம்முடைய பொறுப்பும் மகிழ்ச்சியும் ஆகும், இதனால் மற்றவர்கள் கிறிஸ்துவின் வேலையை நம்மில் காண்பார்கள், (2) ஆவிக்குரிய நடைமுறை செயல்பாடுகளைக் (அதாவது வேத வாசிப்பு, ஜெபம், கீழ்ப்படிதல்) கையாண்டு அதன் மூலம் நம் நம்பிக்கையை மென்மேலும் அதிகரிக்கும்படிச் செய்யலாம்.*

*நம்முடைய வாழ்க்கையின் கனிகளால் நாம் அறியப்படுவோம் என்று இயேசு சொன்னார் (மத்தேயு **7:16**), இது நமக்குள் இருக்கும் நம்பிக்கையின் சான்றுகளைத் தருகிறது. எல்லா கிறிஸ்தவர்களும் தங்களுக்குள் இருக்கும் இரட்சிப்பின் நம்பிக்கையை கட்டியெழுப்ப முயற்சிப்பதில் முனைப்புடன் இருக்க வேண்டும், இதனால் கிறிஸ்துவை மற்றவர்களுக்கு முன்பாக பிரதிபலிக்கும் நம் வாழ்க்கை அவர்கள் நம்மில் காணும்படிச் செய்யும், மேலும் அது "பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவை மகிமைப்படுத்தும்" (மத்தேயு **5:16**).*

# 52. எபேசியருக்கு எழுதின நிருபம்

***எழுத்தாளர்:***

*எபேசியர் 1:1-வது வசனம், எபேசியருக்கு எழுதின நிருபத்தின் எழுத்தாளரை அப்போஸ்தலனாகிய பவுல் என்று அடையாளம் காட்டுகிறது.*

***எழுதப்பட்ட காலம்:***

*எபேசியருக்கு எழுதின நிருபம் கி.பி. 60-63 வரையிலுள்ள காலக்கட்டத்தில் எழுதப்பட்டதாகும்.*

***எழுதப்பட்டதன் நோக்கம்:***

*கிறிஸ்துவைப் போலாகும் முதிர்ச்சிக்காக ஏங்கும் அனைவருக்கும்ம் இந்த நிருபத்தின் எழுத்துக்கள் ஏற்றதாக இருக்கும் என்று பவுல் சித்தங்கொண்டார். தேவனுடைய உண்மையான பிள்ளைகளாக வளரத் தேவையான ஒழுக்கம் எபேசியர் புத்தகத்தில் இணைக்கப்பட்டுள்ளது. மேலும், எபேசியர் புத்தகத்தின் படிப்பும் ஆய்வும் விசுவாசியை பலப்படுத்துவதற்கும் நிலைநிறுத்துவதற்கும் உதவும், இதனால் தேவன் அழைத்து நமக்களித்த அவர் நோக்கத்தை நிறைவேற்றமுடியும். இந்த நிருபத்தின் நோக்கம் ஒரு முதிர்ச்சியடைந்த திருச்சபையை உறுதிப்படுத்துவதும் கட்டியெழுப்புவதும் ஆகும். இது கிறிஸ்துவின் சரீரத்தைப் பற்றிய ஒரு சீரான பார்வையையும் தேவனுடைய பொருளாதாரத்தில் அதன் முக்கியத்துவத்தையும் முன்வைக்கிறது.*

***திறவுகோல் வசனங்கள்:***

*எபேசியர் 1:3, "நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்; அவர் கிறிஸ்துவுக்குள் உன்னதங்களிலே ஆவிக்குரிய சகல ஆசீர்வாதத்தினாலும் நம்மை ஆசீர்வதித்திருக்கிறார்."*

*எபேசியர் **2:8-10**, "கிருபையினாலே விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களால் உண்டானதல்ல, இது தேவனுடைய ஈவு; ஒருவரும் பெருமைபாராட்டாதபடிக்கு இது கிரியைகளினால் உண்டானதல்ல; ஏனெனில், நற்கிரியைகளைச் செய்கிறதற்கு நாம் கிறிஸ்து இயேசுவுக்குள் சிருஷ்டிக்கப்பட்டு, தேவனுடைய செய்கையாயிருக்கிறோம்; அவைகளில் நாம் நடக்கும்படி அவர் முன்னதாக அவைகளை ஆயத்தம்பண்ணியிருக்கிறார்."*

*எபேசியர் **4:4-6**, "உங்களுக்கு உண்டான அழைப்பினாலே நீங்கள் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல, ஒரே சரீரமும் ஒரே ஆவியும் உண்டு; ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும், எல்லாருக்கும் ஒரே தேவனும் பிதாவும் உண்டு; அவர் எல்லார்மேலும், எல்லாரோடும், உங்கள் எல்லாருக்குள்ளும் இருக்கிறவர்."*

*எபேசியர் **5:21**, "தெய்வ பயத்தோடே ஒருவருக்கொருவர் கீழ்ப்படிந்திருங்கள்."*

*எபேசியர் **6:10-11**, "கடைசியாக, என் சகோதரரே, கர்த்தரிலும் அவருடைய சத்துவத்தின் வல்லமையிலும் பலப்படுங்கள். நீங்கள் பிசாசின் தந்திரங்களோடு எதிர்த்துநிற்கத் திராணியுள்ளவர்களாகும்படி, தேவனுடைய சர்வாயுதவர்க்கத்தையும் தரித்துக்கொள்ளுங்கள்."*

### சுருக்கமான திரட்டு:

*எபேசியர் புத்தகத்தின் மிகப் பெரிய பகுதியை போதனைக்கோட்பாடு ஆக்கிரமித்துள்ளது. இந்த நிருபத்திலுள்ள போதனைகளில் பாதி கிறிஸ்துவில் நாம் நிற்பது தொடர்பானதாகும், மீதமுள்ளவை நம் நிலையை பாதிக்கிறதாய் இருக்கிறது. பெரும்பாலும் இந்த புத்தகத்திலிருந்து கற்பிப்பவர்கள் அனைத்து அடித்தள வழிமுறைகளையும் கடந்து நேரடியாக இறுதி அதிகாரத்திற்கு செல்கிறார்கள். இந்த அதிகாரம்தான் ஆவிக்குரிய யுத்தம் அல்லது பரிசுத்தவான்களின் ஆவிக்குரிய போராட்டத்தை வலியுறுத்துகிறது. எவ்வாறாயினும், இந்த நிருபத்தின் உள்ளடக்கங்களிலிருந்து முழுமையாக பயனடைய, இந்த*

*நிருபத்தில் பவுலின் அறிவுறுத்தலின் ஆரம்பத்தில் இருந்து ஒருவர் தொடங்க வேண்டும்.*

*முதலாவதாக, கிறிஸ்துவின் சீஷர்களாகிய நம்மை, தேவன் யார் என்று அறிவிக்கிறார் என்பதை நாம் முழுமையாக புரிந்து கொள்ள வேண்டும். எல்லா மனிதர்களுக்குமான தேவனுடைய சாதனையைப் பற்றிய அறிவில் நாம் அடித்தளம் கொண்டவர்களாக இருக்க வேண்டும். அடுத்து, நம்முடைய தற்போதைய இருப்பு மற்றும் நடை ஆகியவை நடைமுறைப் படுத்தப்பட்டு அது பலப்படுத்தப்பட வேண்டும். புருஷர்களின் கற்பித்தல் மற்றும் நுணுக்கத்தின் ஒவ்வொரு ஆவியுடனும் நாம் இனிமேல் பின்மாறவோ அல்லது தடுமாறவோ கூடாது.*

*பவுலின் எழுத்துக்கள் மூன்று முக்கிய பகுதிகளாக பிரிந்து காணப்படுகிறது. (1) முதல் மூன்று அதிகாரங்கள் தேவனுடைய சாதனை தொடர்பான கொள்கைகளை அறிமுகப்படுத்துகின்றன. (2) நான்கு மற்றும் ஐந்தாவது அதிகாரங்கள் நமது தற்போதைய இருப்பைப் பற்றிய கொள்கைகளை முன்வைக்கின்றன. இறுதியாக (3) ஆறாம் அதிகாரம் நமது அன்றாட கிறிஸ்தவ வாழ்க்கையிலுள்ள ஆவிக்குரியப் போராட்டத்தைப் பற்றிய கொள்கைகளை முன்வைக்கிறது.*

## *இணைப்புகள்:*

*எபேசியரில் உள்ள பழைய ஏற்பாட்டின் முதன்மையான இணைப்பு திருச்சபையானது கிறிஸ்துவின் சரீரம் என்ற திடுக்கிடும் (யூதர்களுக்கு) கருத்தில் உள்ளது (எபேசியர் 5:32). திருச்சபையின் இந்த அற்புதமான மர்மம் (முன்னர் வெளிப்படுத்தப்படாத ஒரு உண்மை) என்னவென்றால், "புறஜாதிகள் சுவிசேஷத்தினாலே உடன் சுதந்தரருமாய், ஒரே சரீரத்திற்குள்ளானவர்களுமாய், கிறிஸ்துவுக்குள் அவர் பண்ணின வாக்குத்தத்தத்துக்கு உடன்பங்காளிகளுமாயிருக்கிறார்களென்பதாகும்" (எபேசியர் 3:3). இது பழைய ஏற்பாட்டு பரிசுத்தவான்களிடமிருந்து முற்றிலும் மறைக்கப்பட்ட ஒரு இரகசியமாகும்/மர்மமாகும் (எபேசியர் 3:6, 9). தேவனை மெய்யாகப் பின்பற்றுபவர்களாக இருந்த இஸ்ரவேலர்கள் தாங்கள் மட்டுமே தேவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட*

*ஜனம் என்று எப்போதும் நம்பினர் (உபாகமம் 7:6). புறஜாதியாரை சமமான நிலையில் யூதர்களுக்கு நிகராக ஏற்றுக்கொள்வது மிகவும் கடினம், இந்த புதிய முன்னுதாரணத்தில் யூத விசுவாசிகள் மற்றும் புறஜாதிய விசுவாசிகளுக்கிடையே பல மோதல்களை ஏற்படுத்தியது. திருச்சபையின் மர்மத்தை "கிறிஸ்துவின் மணவாட்டி" என்றும் பவுல் கூறுகிறார், இது பழைய ஏற்பாட்டில் முன்னர் கேள்விப்படாத ஒரு கருத்தாகும்.*

## ***நடைமுறை பயன்பாடு:***

*வேதாகமத்திலுள்ள வேறு எந்த புத்தகத்தையும் விட, எபேசியர் புத்தகம் கிறிஸ்தவ வாழ்க்கையில் ஆரோக்கியமான உபதேச கோட்பாட்டிற்கும் சரியான நடைமுறை வாழ்க்கைக்கும் இடையிலான தொடர்பை பலமாக வலியுறுத்துகிறது. பலர் "இறையியலை" புறக்கணிக்கிறார்கள், அதற்கு பதிலாக "நடைமுறை" விஷயங்களை மட்டுமே விவாதிக்க விரும்புகிறார்கள். எபேசியரில், இறையியல் நடைமுறை என்று பவுல் வாதிடுகிறார். நம் வாழ்வில் தேவனுடைய சித்தத்தை நடைமுறையில் வாழ்வதற்கு, நாம் முதலில் கிறிஸ்துவில் யார் என்னும் உபதேசக்கோட்பாட்டு ரீதியாக புரிந்து கொள்ள வேண்டும்.*

# 53. பிலிப்பியருக்கு எழுதின நிருபம்

## எழுத்தாளர்:

*பிலிப்பியர் 1:1-வது வசனம், பிலிப்பியருக்கு எழுதின நிருபத்தின் எழுத்தாளரை அப்போஸ்தலனாகிய பவுல் என்று அடையாளம் காட்டுகிறது, மேலும் பவுல் இந்த நிருபத்தை தீமோத்தேயுவின் உதவியுடன் எழுதியிருக்கலாம்.*

## எழுதப்பட்ட காலம்:

*பிலிப்பியர் புத்தகம் ஏறக்குறைய கி.பி. 61-ல் எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*பவுலின் சிறையிருப்பின் காலத்தில் எழுதப்பட்ட நிருபங்களில் ஒன்றான பிலிப்பியர் எழுதிய நிருபம் ரோமாபுரியிலிருந்து எழுதப்பட்டதாகும். பிலிப்பு பட்டணத்திற்கு அப்போஸ்தலனாகிய பவுல் தனது இரண்டாவது மிஷனரி பயணத்தில் (அப்போஸ்தலர் 16:12) விஜயம் செய்தார், லீதியாள் என்னும் பேருள்ள ஒரு ஸ்திரீ மற்றும் சிறை அதிகாரியும் அவரது குடும்பத்தினரும் கிறிஸ்துவுக்குள் மாற்றப்பட்டனர். இப்போது, சில ஆண்டுகளுக்குப் பிறகு, திருச்சபை அங்கு நிறுவப்பட்டது என்பது, இந்த நிருபத்தின் ஆரம்ப வரிகளில் பவுல், ''பிலிப்பி பட்டணத்தில் கிறிஸ்து இயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்கள் அனைவருக்கும், கண்காணிகளுக்கும், உதவிக்காரருக்கும் எழுதுகிறதாவது'' (பிலிப்பியர் 1:1) என்பதிலிருந்து தெளிவாக விளங்குகிறது.*

*இந்த நிருபத்தின் சூழ்நிலை சந்தர்ப்பம், பிலிப்பியில் உள்ள திருச்சபையிலிருந்து ஒரு காணிக்கைப் பரிசை ஏற்றுக்கொள்வதாகும், அதன் சபை உறுப்பினர்களில் ஒருவரான எப்பாப்பிரோதீத்துவின் கையில் கொடுத்தனுப்பப்பட்டது (பிலி 4:10-18). இது பவுலின் இருதயத்திற்கு குறிப்பாக நெருக்கமாக இருந்த ஒரு கிறிஸ்தவர்களுக்கு எழுதப்பட்ட நிருபமாகும் (2 கொரிந்தியர் 8:1-6), மற்றும் ஒப்பீட்டளவில் உபதேச*

*கோட்பாட்டு பிழையைப் பற்றி மிகவும் குறைவாகவே இந்த நிருபத்தில் கூறப்பட்டுள்ளது.*

## திறவுகோல் வசனங்கள்:

*பிலிப்பியர் 1:21, "கிறிஸ்து எனக்கு ஜீவன், சாவு எனக்கு ஆதாயம்."*

*பிலிப்பியர் 3:7, "ஆகிலும், எனக்கு லாபமாயிருந்தவைகளெவைகளோ அவைகளைக் கிறிஸ்துவுக்கு நஷ்டமென்று எண்ணினேன்."*

*பிலிப்பியர் 4:4, "கர்த்தருக்குள் எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள்; சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லுகிறேன்."*

*பிலிப்பியர் 4:6-7, "நீங்கள் ஒன்றுக்குங் கவலைப்படாமல், எல்லாவற்றையுங்குறித்து உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்தோடே கூடிய ஜெபத்தினாலும் வேண்டுதலினாலும் தேவனுக்குத் தெரியப்படுத்துங்கள். அப்பொழுது, எல்லாப் புத்திக்கும்மேலான தேவசமாதானம் உங்கள் இருதயங்களையும் உங்கள் சிந்தைகளையும் கிறிஸ்து இயேசுவுக்குள்ளாகக் காத்துக்கொள்ளும்."*

*பிலிப்பியர் 4:13, "என்னைப் பெலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையுஞ்செய்ய எனக்குப் பெலனுண்டு."*

## சுருக்கமான திரட்டு:

*பிலிப்பியர் நிருபம் "துன்பத்தின் மூலம் வளங்கள்" என்று அழைக்கப்படலாம். இந்த புத்தகம் நம் வாழ்க்கையில் கிறிஸ்துவைப் பற்றியும், நம் மனதில் கிறிஸ்துவைப் பற்றியும், கிறிஸ்து நம் இலக்காகவும், கிறிஸ்து நம்முடைய பலமாகவும், மற்றும் பாடுகளின் துன்பத்தின் மூலம் மகிழ்ச்சியாகவும் இருக்கிறது. இது ரோமாபுரியில் பவுலின் சிறைவாசத்தின் போது எழுதப்பட்டது, கிறிஸ்துவின் பரமேறுதலுக்கு சுமார் முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு, அல்லது பிலிப்பியில் பவுல் முதன்முதலில் பிரசங்கித்த பத்து ஆண்டுகளுக்குப் பிறகு எழுதப்பட்டதாகும்.*

*பவுல் ரோமச் சக்கிரவர்த்தி நீரோவின் கைதியாக இருந்தார், ஆனால் இந்த நிருபம் சந்தோஷமாயிருங்கள் சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லி வெற்றியுடன் பறைச்சாட்டுகிறது (பிலிப்பியர் **1:4, 18, 25, 26; 2:2, 28;** பிலிப்பியர் **3:1, 4:1 , 4, 10**). சரியான கிறிஸ்தவ அனுபவம் என்பது நம் சூழ்நிலைகள் எதுவாக இருந்தாலும், நம்மில் வாழும் கிறிஸ்துவின் ஜீவன், சுபாவம் மற்றும் மனம் ஆகியவற்றின் செயல்பாடாகும் (பிலிப்பியர் **1:6, 11; 2:5, 13**). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவில் தாழ்மைப்படுத்தப்பட்ட அவமானப்படுத்துவதும் பின்பு மேலாக உயர்த்துவதும் பற்றிய மகிமையான மற்றும் ஆழமான அறிவிப்புடன் பிலிப்பியர் **2:5-11** வரையிலுள்ள வேதப்பாகம் உச்சத்தை அடைகிறது.*

## ***பிலிப்பியர் நிருபத்தைப் பின்வருமாறு பிரிக்கலாம்:***

***முன்னுரை, 1:1-7***

*I. கிறிஸ்தவனின் ஜீவனாகிய கிறிஸ்து: துன்பத்தின் மத்தியிலும் மகிழ்ச்சி, **1:8-30***

*II. கிறிஸ்தவனின் முறையாகிய கிறிஸ்து: தாழ்ந்த சேவையில் மகிழ்ச்சி, **2:1-30***

*III. கிறிஸ்தவனின் விசுவாசம், விருப்பம் மற்றும் எதிர்பார்ப்பின் பொருளாகிய கிறிஸ்து, **3:1-21***

*IV. கிறிஸ்தவனின் பெலனாகிய கிறிஸ்து: கவலையின் மூலம் மகிழ்ச்சி, **4:1-9***

*முடிவுரை, **4: 10-23***

## ***இணைப்புகள்:***

*பவுல் தனது பல நிருபங்களைப் போலவே, பிலிப்பி பட்டணத்து திருச்சபையில் புதிய விசுவாசிகளை ஆரம்பகால திருச்சபைகளில் தொடர்ந்து வளர்த்துக் கொண்ட பழக்கவழக்கமான போக்கைப் பற்றி எச்சரிக்கையாக இருக்குமாறு எச்சரித்தார். பழைய ஏற்பாட்டுச்*

*நியாயப்பிரமாண சட்டத்துடன் பிணைக்கப்பட்ட யூதர்கள், யூதர்கள் கிரியைகளின் மூலம் இரட்சிப்பு என்னும் போதனைக்குத் திரும்புவதற்கான ஒரு நிலையான முயற்சி இருந்தது. ஆனால், இரட்சிப்பு என்பது கிறிஸ்துவை விசுவாசிப்பதினால் மட்டுமே என்றும் விசுவாசிப்பதால் மட்டுமே இரட்சிப்பு உண்டாகிறது என்று பவுல் மீண்டும் வலியுறுத்தினார், யூதர்களை "நாய்கள்" மற்றும் "தீமை செய்யும் மனிதர்கள்" என்று முத்திரை குத்தினார். குறிப்பாக, கிறிஸ்துவில் இரட்சிக்கப்பட்டு வந்த புதிய விசுவாசிகள் தேவைகளுக்கு ஏற்ப விருத்தசேதனம் செய்யப்பட வேண்டும் என்று நியாயப்பிரமாண சட்டத்தை மேற்கோள்காட்டி பழைய உடன்படிக்கையின் (ஆதியாகமம் 17:10-12; லேவியராகமம் 12:3) ஆசரிப்பை யூதர்கள் வலியுறுத்தி வந்தனர். இந்த வழியில், அவர்கள் தங்கள் சொந்த முயற்சியால் தேவனைப் பிரியப்படுத்தவும், சடங்கில் பங்கேற்காத புறஜாதி கிறிஸ்தவர்களுக்கு மேலாக தங்களை உயர்த்தவும் முயன்றனர். ஆட்டுக்குட்டியானவரின் இரத்தத்தால் கழுவப்பட்டவர்கள் இனி தூய்மையான இருதயத்தின் அவசியத்தைக் குறிக்கும் சடங்கைச் செய்ய மாட்டார்கள் என்று பவுல் விளக்கினார்.*

## ***நடைமுறை பயன்பாடு:***

*பிலிப்பியருக்கு எழுதின நிருபம் பவுலின் மிகவும் தனிப்பட்ட நிருபங்களில் ஒன்றாகும், மேலும் இது விசுவாசிகளுக்கு பல தனிப்பட்ட நடைமுறைப் பயன்பாடுகளைக் கொண்டுள்ளது. ரோமாபுரியில் சிறைவாசம் அனுபவித்தபோது எழுதப்பட்ட பிலிப்பியர் நிருபம், பவுல் தனது முன்மாதிரியைப் பின்பற்றும்படி அறிவுறுத்துகிறார், துன்புறுத்தலின் போது அல்லது பாடுகளின் மத்தியில் "கர்த்தருக்குள் திடன்கொண்டு பயமில்லாமல் திருவசனத்தைச் சொல்லும்படி அதிகமாய்த் துணிவு கொள்ளவேண்டும்" (பிலிப்பியர் 1:14). கிறிஸ்தவர்கள் அனைவரும் கிறிஸ்துவின் நற்செய்திக்கு எதிரான அவிசுவாசிகளின் விரோதத்தை ஒரு காலத்தில் அல்லது இன்னொரு காலத்தில் அனுபவித்திருக்கிறார்கள். ஆகவே இதை நாம் எதிர்பார்க்க வேண்டும். உலகம் அவரை வெறுத்தது மெய்யானால், அது அவருடைய சீஷர்களையும் வெறுக்கும் என்று இயேசு*

கூறினார் (யோவான் 15:18). துன்புறுத்தல்களை எதிர்கொள்வதில் விடாமுயற்சியுடன் இருக்கவும், “ஒரே ஆவியிலே உறுதியாய் நின்று, ஒரே ஆத்துமாவினாலே சுவிசேஷத்தின் விசுவாசத்திற்காகக் கூடப்போராடி, எதிர்க்கிறவர்களால் ஒன்றிலும் மருளாதிருக்கவும்” வேண்டும் என்று பவுல் நமக்கு அறிவுறுத்துகிறார் (பிலிப்பியர் 1:27).

பிலிப்பியர் நிருபத்தின் மற்றொரு பயன்பாடு, கிறிஸ்தவர்கள் மனத்தாழ்மையுடன் ஒன்றுபட வேண்டும் என்பதாகும். நாம் கிறிஸ்துவோடு ஐக்கியமாக இருக்கிறோம், அதே வழியில் ஒருவருக்கொருவர் சக விசுவாசிகளுடன் ஐக்கியமாக இருக்க நாம் முயற்சி செய்ய வேண்டும். பவுல் நமக்கு " நீங்கள் ஏக சிந்தையும் ஏக அன்புமுள்ளவர்களாயிருந்து, இசைந்த ஆத்துமாக்களாய் ஒன்றையே சிந்தித்து, என் சந்தோஷத்தை நிறைவாக்குங்கள் என்றும் ஒன்றையும் வாதினாலாவது வீண்பெருமையினாலாவது செய்யாமல், மனத்தாழ்மையினாலே ஒருவரையொருவர் தங்களிலும் மேன்மையானவர்களாக எண்ணக்கடவீர்கள் என்றும் அவனவன் தனக்கானவைகளையல்ல, பிறருக்கானவைகளையும் நோக்குவானாக” (பிலிப்பியர் 2:2-4) என்று அறிவுறுத்துகிறார். பவுலின் ஆலோசனையை நாம் அனைவரும் மனதில் கொண்டால் இன்று திருச்சபைகளில் மிகக் குறைவான மோதல்களே இருக்கும்.

பிலிப்பியர் நிருபத்தில் காணப்படும் மற்றொரு பயன்பாடு, அவருடைய நிருபம் முழுவதும் காணப்படும் மகிழ்ச்சியையும் சந்தோஷமுமாகும். எப்படியோ கிறிஸ்து அறிவிக்கப்படுகிறார் என்று பவுல் மகிழ்ச்சியடைகிறார் (பிலிப்பியர் 1:8); அவர் தனது துன்புறுத்தலில் மகிழ்ச்சியடைகிறார் (2:18); கர்த்தரிடத்தில் சந்தோஷப்படும்படி அவர் மற்றவர்களுக்கும் அறிவுறுத்துகிறார் (3:1); அவர் பிலிப்பி சபை சகோதரர்களை தனது "மகிழ்ச்சி மற்றும் கிரீடம்" என்று குறிப்பிடுகிறார் (4:1). விசுவாசிகளுக்கு இந்த அறிவுரையை அவர் சுருக்கமாகக் கூறுகிறார்: “கர்த்தருக்குள் எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள்; சந்தோஷமாயிருங்கள் என்று மறுபடியும் சொல்லுகிறேன்” (4:4-7). விசுவாசிகளாகிய, நம்முடைய எல்லா கவலைகளையும் அவர்மீது வைப்பதன் மூலம் நாம்

*மகிழ்ச்சியடைந்து, தேவனுடைய சமாதானத்தை அனுபவிக்க முடியும், “நீங்கள் ஒன்றுக்குங் கவலைப்படாமல், எல்லாவற்றையுங்குறித்து உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்தோடே கூடிய ஜெபத்தினாலும் வேண்டுதலினாலும் தேவனுக்குத் தெரியப்படுத்துங்கள்” (4:6). பவுலின் சந்தோஷமானது, அவருக்கு துன்பம் மற்றும் சிறைவாசம் இருந்தபோதிலும், இந்த நிருபத்தின் மூலம் பிரகாசிக்கிறது, மேலும் நம்முடைய எண்ணங்களை தேவன் மீது மையப்படுத்தும்போது பவுல் அனுபவித்த அதே சந்தோஷம் நமக்கும் உண்டாயிருக்கும் என்று வாக்குறுதி அளிக்கப்படுகிறது (பிலிப்பியர் 4:8).*

# 54. கொலோசெயருக்கு எழுதின நிருபம்

## எழுத்தாளர்:

*அப்போஸ்தலனாகிய பவுல் கொலோசெயருக்கு எழுதின நிருபத்தின் முதன்மையான எழுத்தாளர் ஆவார் (கொலோசெயர் 1:1). தீமோத்தேயுவுக்கும் சிறிது பங்கும் நன்மதிப்பும் வழங்கப்படுகிறது (கொலோசெயர் 1:1, "தேவனுடைய சித்தத்தினாலே இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பவுலும், சகோதரனாகிய தீமோத்தேயும், கொலோசெ பட்டணத்தில் கிறிஸ்துவுக்குள் பரிசுத்தவான்களும் விசுவாசிகளுமாயிருக்கிற சகோதரர்களுக்கு எழுதுகிறதாவது").*

## எழுதப்பட்ட காலம்:

*கொலோசெயர் புத்தகம் கி.பி. 58-62 வரையிலுள்ள காலத்தின் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*கொலோசெயர் புத்தகம் ஒரு சிறு நன்நெறிமுறை பாடமாகும், இது நமது கிறிஸ்தவ வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியையும் குறிக்கிறது. பவுல் தனிப்பட்ட வாழ்க்கையிலிருந்து வீடு மற்றும் குடும்பம் வரை, வேலையிலிருந்து மற்றவர்களோடு நாம் நடந்துகொள்ள வேண்டிய விதத்தில் முன்னேறுகிறார். நம்முடைய வாழ்வின் ஒவ்வொரு பகுதியிலும் நம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதில் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து போதுமானவராக இருக்கிறார் என்பதுதான் இந்த புத்தகத்தின் கருப்பொருள் ஆகும்.*

## திறவுகோல் வசனங்கள்:

*கொலோசெயர் 1:15-16, "அவர் அதரிசனமான தேவனுடைய தற்சூபமும், சர்வ சிருஷ்டிக்கும் முந்தின பேறுமானவர். ஏனென்றால் அவருக்குள் சகலமும் சிருஷ்டிக்கப்பட்டது; பரலோகத்திலுள்ளவைகளும் பூலோகத்திலுள்ளவைகளுமாகிய காணப்படுகிறவைகளும்*

*காணப்படாதவைகளுமான சகல வஸ்துக்களும், சிங்காசனங்களானாலும், கர்த்தத்துவங்களானாலும், துரைத்தனங்களானாலும், அதிகாரங்களானாலும், சகலமும் அவரைக்கொண்டும் அவருக்கென்றும் சிருஷ்டிக்கப்பட்டது."*

*கொலோசெயர் **2:8**, "லௌகிக ஞானத்தினாலும், மாயமான தந்திரத்தினாலும், ஒருவனும் உங்களைக் கொள்ளைகொண்டுபோகாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; அது மனுஷர்களின் பாரம்பரிய நியாயத்தையும் உலகவழிபாடுகளையும் பற்றினதேயேல்லாமல் கிறிஸ்துவைப் பற்றினதல்ல."*

*கொலோசெயர் **3:12-13**, "ஆகையால், நீங்கள் தேவனால் தெரிந்துகொள்ளப்பட்ட பரிசுத்தரும் பிரியருமாய், உருக்கமான இரக்கத்தையும், தயவையும், மனத்தாழ்மையையும், சாந்தத்தையும், நீடிய பொறுமையையும் தரித்துக்கொண்டு; ஒருவரையொருவர் தாங்கி, ஒருவர்பேரில் ஒருவருக்குக் குறைபாடு உண்டானால், கிறிஸ்து உங்களுக்கு மன்னித்ததுபோல, ஒருவருக்கொருவர் மன்னியுங்கள்."*

*கொலோசெயர் **4:5-6**, "திருவசனம் செல்லும்படியான வாசலை தேவன் திறந்தருளும்படி எங்களுக்காகவும் வேண்டிக்கொள்ளுங்கள். புறம்பேயிருக்கிறவர்களுக்கு முன்பாக ஞானமாய் நடந்து காலத்தைப் பிரயோஜனப்படுத்திக்கொள்ளுங்கள்."*

## சுருக்கமான திரட்டு:

*கொலோசேயில் எழுந்த தோல்வியுற்ற மத மரபுகளுக்கு எதிரான கொள்கைக்கு கொலோசெயர் நிருபம் வெளிப்படையாக எழுதப்பட்டது, இந்த துர்உபதேச போலிக் கொள்கைகள் திருச்சபையின் இருப்புக்கு ஆபத்தை விளைவித்தது. பவுலுக்கு என்ன காரியங்கள் சொல்லப்பட்டது என்பது நமக்குத் தெரியாது என்றாலும், இந்த நிருபமானது இப்படிப்பட்ட குழுக்களுக்கும் அவர்களது கொள்கைகளுக்கும் அப்போஸ்தலனாகிய பவுலுடைய பதிலாகும்.*

*கிறிஸ்துவைப் பற்றிய குறைபாடுள்ள பார்வையை அல்லது கண்ணோட்டத்தை பவுல் கையாண்டார் என்பாத்து அவரின் பதிலின்*

அடிப்படையில் நாம் ஊகிக்க முடியும். அதாவது இயேசு கிறிஸ்துவினுடைய மெய்யான மற்றும் உண்மையான மனிதத்தன்மையையும் அவருடைய பரிபூரணமான தெய்வத்தன்மையையும் ஏற்றுக் அநேகர் கொள்ளவில்லை. விருத்தசேதனம் மற்றும் மரபுகளுக்கு "யூதர்களின்" முக்கியத்துவத்தை பவுல் முற்றிலுமாக மறுக்கிறார் (கொலோசெயர் 2:8-11; 3:11). கலாபேதங்களுக்கு எதிரான கொள்கையானது ஒரு யூத-ஞானவாதம் அல்லது யூத-சன்யாசத்திற்கும் கிரேக்க (ஸ்டோயிக்?) தத்துவத்திற்கும் இடையிலான கலவையாகத் தோன்றுகிறது. கிறிஸ்துவின் போதுமானவராக இருக்கும் தன்மையை சுட்டிக்காட்டுவதில் அவர் ஒரு குறிப்பிடத்தக்க பணியைச் செய்கிறார்.

கொலோசெயர் புத்தகமானது கிறிஸ்துவின் தெய்வீகம் மற்றும் தவறான தத்துவங்கள் (1: 15-2: 23) பற்றிய கோட்பாட்டு அறிவுறுத்தல்களை கொண்டுள்ளது, மேலும் கிறிஸ்தவ நன்னடத்தை உட்பட நண்பர்கள் மற்றும் சம்பாஷணை பற்றிய நடைமுறை அறிவுரைகளும் இதில் அடங்கியுள்ளன (3:1-4:18).

## இணைப்புகள்:

அனைத்து ஆரம்பகால திருச்சபைகளையும் போலவே, கொலோசேயில் யூதர்கள் தொடர்மானமாக செய்துவருகிற காரியங்களின் பிரச்சினையும் பவுலுக்கு மிகுந்த கவலையாக இருந்தது. பழைய ஏற்பாட்டு நியாயப்பிரமாணச் சட்டத்தில் மூழ்கியவர்கள் கிரியைகளைப் புரிந்துகொள்வது மிகவும் கடினம் என்று கருதிய கிரியைகளைத் தவிர, கிருபையால் மட்டுமே இரட்சிப்பு என்கிற கருத்து மிகவும் தீவிரமானதாகும். இதன் விளைவாக, இந்த புதிய நம்பிக்கைக்கு நியாயப்பிரமாண சட்டத்திலிருந்து சில தேவைகளைச் சேர்க்க சட்டவாதிகளிடையே தொடர்ச்சியான இயக்கம் இருந்து வந்தது. அவைகளில் முதன்மையானது விருத்தசேதனம் செய்ய வேண்டிய தேவை யூத மதமாற்றம் செய்தவர்களிடையே இன்னும் நடைமுறையில் இருந்தது. பவுல் கொலோசெயர் 2:11-15-ல் இந்த பிழையை எதிர்கொண்டார், அதில் கிறிஸ்து வந்ததால் மாம்சத்தின் விருத்தசேதனம் இனி தேவையில்லை என்று அறிவித்தார். பழைய ஏற்பாட்டு நியாயப்பிரமாணச்

*சட்டத்தின் சடங்குகள் மற்றும் ஆசாரிப்புகள் இனி அவசியமில்லை (உபாகமம் 10:16, 30:6; எரேமியா 4:4, 9:26; அப்போஸ்தலர் 7:51; ரோமர் 2:29).*

## நடைமுறை பயன்பாடு:

*பவுல் பல காரியங்களைக் குறிப்பிட்டு அந்த பகுதிகளைக் குறித்து உரையாற்றினாலும், இன்று நம்முடைய அடிப்படை பயன்பாடு, நம்முடைய இரட்சிப்புக்கும் பரிசுத்தமாக்கப்படுதலுக்கும் கிறிஸ்துவின் முழுமையான மற்றும் பரிபூரணமான போதுமானவராக இருக்கும் தன்மை நமக்குப் போதுமானதாகும். சமய மரபுகள் மற்றும் சட்டபூர்வமான செயல்பாடுகளுக்கு எதிரான கொள்கைகளால் வழிதவறாமல் இருக்க நாம் சுவிசேஷத்தை அறிந்து கொள்ள வேண்டும். கர்த்தரும் இரட்சகருமாக இருக்கும் கிறிஸ்துவின் மையத்தை குறைக்கும் எந்தவொரு விலகலுக்கும் நாம் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். வேதாகமத்தின் சமமான அதிகாரத்தில் நிற்பதாகக் கூறப்படும் புத்தகங்களைப் பயன்படுத்தி சத்தியத்துடன் தன்னை சமன் செய்ய முயற்சிக்கும் அல்லது "இரட்சிப்பில் தெய்வீக செயல்பாடுடன் மனித முயற்சியை இணைக்கும் எந்தவொரு" மதமும் முற்றிலுமாக தவிர்க்கப்பட வேண்டும். பிற மதங்களை கிறிஸ்தவத்துடன் இணைக்கவோ சேர்க்கவோ முடியாது மற்றும் கூடாது. தார்மீக நடத்தை பற்றிய முழுமையான தரங்களை கிறிஸ்து நமக்குத் தருகிறார். கிறிஸ்தவம் என்பது ஒரு குடும்பம், ஒரு வாழ்க்கை முறை மற்றும் ஒரு உறவாகும் - ஒரு மதம் அல்ல. கர்மங்கள், ஜோதிடம், அமானுஷ்யம் மற்றும் ஜாதகம் ஆகியவை தேவனுடைய வழிகளைக் காண்பிக்காது. கிறிஸ்து மட்டுமே அதைச் செய்கிறார். அவருடைய சித்தம் அவருடைய வார்த்தையில் வெளிப்படுகிறது, அவர் நமக்கு எழுதிய அன்பின் கடிதம் தான் அவர் விளம்பின வேதம்; நாம் அதை அறிந்து கொள்ள வேண்டும்!*

# 55. 1 தெசலோனிக்கேயர் புத்தகம்

## எழுத்தாளர்:

*1 தெசலோனிக்கேயர் புத்தகத்தின் முதலாம் அதிகாரத்தின் முதல் வசனம், 1 தெசலோனிக்கேயர் புத்தகம் அப்போஸ்தலனாகிய பவுலால் எழுதப்பட்டது என்று தெளிவுபடுத்துகிறது, அநேகமாக சீலா மற்றும் தீமோத்தேயுவுடன் சேர்ந்து இந்த நிருபத்தை எழுதியிருக்கலாம்.*

## எழுதப்பட்ட காலம்:

*1 தெசலோனிக்கேயர் புத்தகம் ஏறக்குறைய கி.பி. 50-ல் எழுதப்பட்டதாகும்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*தெசலோனிக்கேயா திருச்சபையில் கிறிஸ்துவின் வருகையைப் பற்றி சில தவறான புரிதல்கள் இருந்தன. பவுல் தனது நிருபத்தில் அவற்றை தீர்க்க விரும்பினார். அவர் அதை பரிசுத்த வாழ்வின் அறிவுறுத்தலாக எழுதுகிறார்.*

## திறவுகோல் வசனங்கள்:

*1 தெசலோனிக்கேயர் 3:5, "ஆகையால், நான் இனிப் பொறுத்திருக்கக்கூடாமல், எங்கள் வேலை வீணாய்ப் போகத்தக்கதாகச் சோதனைக்காரன் உங்களைச் சோதனைக்குட்படுத்தினதுண்டோவென்று, உங்கள் விசுவாசத்தை அறியும்படிக்கு, அவனை அனுப்பினேன்."*

*1 தெசலோனிக்கேயர் 3:7, "சகோதரரே, எங்களுக்கு நேரிட்ட எல்லா இக்கட்டிலும் உபத்திரவத்திலும் உங்கள் விசுவாசத்தினாலே உங்களை குறித்து ஆறுதலடைந்தோம்."*

*1 தெசலோனிக்கேயர் 4:14-17, "இயேசுவானவர் மரித்து பின்பு எழுந்திருந்தாரென்று விசுவாசிக்கிறோமே; அப்படியே இயேசுவுக்குள் நித்திரையடைந்தவர்களையும் தேவன் அவரோடேகூடக்*

கொண்டுவருவார். கர்த்தருடைய வார்த்தையை முன்னிட்டு நாங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: கர்த்தருடைய வருகைமட்டும் உயிரோடிருக்கும் நாம் நித்திரையடைந்தவர்களுக்கு முந்திக்கொள்வதில்லை. ஏனெனில், கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதனுடைய சத்தத்தோடும், தேவ எக்காளத்தோடும் வானத்திலிருந்து இறங்கிவருவார்; அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழுந்திருப்பார்கள். பின்பு உயிரோடிருக்கும் நாமும் கர்த்தருக்கு எதிர்கொண்டுபோக மேகங்கள்மேல், அவர்களோடேகூட ஆகாயத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டு, இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனேகூட இருப்போம்.''

*1 தெசலோனிக்கேயர் **5:16-18,** ''எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள். இடைவிடாமல் ஜெபம்பண்ணுங்கள். எல்லாவற்றிலேயும் ஸ்தோத்திரஞ்செய்யுங்கள்; அப்படிச் செய்வதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்களைக்குறித்துத் தேவனுடைய சித்தமாயிருக்கிறது.''*

## சுருக்கமான திரட்டு:

முதல் மூன்று அதிகாரங்கள் தெசலோனிக்கேயாவில் உள்ள திருச்சபையை பார்வையிட பவுல் ஏங்குகின்றதை விவரிக்கின்றன, ஆனால் சாத்தான் அவர்களைத் தடுத்து நிறுத்தியதால் அது முடியாமல் போனது (1 தெசலோனிக்கேயர் 2:18), பவுல் அவர்களை எவ்வாறு கருதினார், மற்றும் அவர்கள் எப்படி இருந்தார்கள் என்பதைக் கேட்கவும் ஊக்கப்படுத்தப்பட்டார். பின்னர் பவுல் அவர்களுக்காக ஜெபிக்கிறார் (1 தெசலோனிக்கேயர் 3:11-13). 4-ஆம் அதிகாரத்தில், பவுல் தெசலோனிக்கேயாவில் உள்ள விசுவாசிகளுக்கு பரிசுத்த வாழ்க்கையை கிறிஸ்து இயேசுவில் எப்படி வாழ வேண்டும் என்று அறிவுறுத்துகிறார் (1 தெசலோனிக்கேயர் 4:1-12). பவுல் தொடர்ந்து அவர்களிடம் இருந்த தவறான கருத்தை அவர்களுக்கு அறிவுறுத்துகிறார். கிறிஸ்து இயேசுவில் மரித்த ஜனங்கள் அவர் திரும்பி மீண்டும் வானத்தின் மேகங்களில் வரும்போது பரலோகத்திற்குக் கொண்டு செல்லப்படுவார்கள் என்று பவுல் அவர்களுக்குச் சொல்லுகிறார் (1 தெசலோனிக்கேயர் 4:13-18, 5:1-11).

*கிறிஸ்தவ வாழ்க்கையை வாழ்வதற்கான இறுதி அறிவுறுத்தல்களுடன் இந்த புத்தகம் முடிகிறது.*

## *இணைப்புகள்:*

*தெசலோனிக்கேயர்கள் தங்கள் "சொந்த தேசத்து ஜனத்திடமிருந்து" அவர்கள் பெற்ற துன்புறுத்தல்களையும் இன்னல்களையும் (வச. 2:15), தங்கள் மேசியாவை நிராகரித்த யூதர்கள் பழைய ஏற்பாட்டுக் காலத்தில் உண்டாயிருந்த தீர்க்கதரிசிகளுக்கு செய்ததைப் போலவே இவர்களும் துன்பப்படுகிறார்கள் என்று பவுல் நினைவுபடுத்துகிறார் (எரேமியா 2:30; மத்தேயு 23:31). தேவனுடைய உண்மையான தீர்க்கதரிசிகள் எப்போதும் அநியாயக்காரர்களால் எதிர்க்கப்படுவார்கள் என்று ஆண்டவர் இயேசு எச்சரித்தார் (லூக்கா 11:49). கொலோசெயரில், பவுல் அந்த உண்மையை அவர்களுக்கு நினைவுபடுத்துகிறார்.*

## *நடைமுறை பயன்பாடு:*

*இந்த புத்தகத்தை நமது வாழ்க்கை சூழ்நிலைகளின் பல நிலைகளுக்குப் பயன்படுத்தலாம். கிறிஸ்து மீண்டும் திரும்பி வரும்போது மரித்தவர்கள் அல்லது உயிருடன் இருக்கிறவர்கள் என யாவருக்கும் நம்பிக்கையை கிறிஸ்தவர்களாக இருக்கிற நமக்கு இது அளிக்கிறது (1 தெசலோனிக்கேயர் 4:13-18). தேவனுடைய கோபாக்கினையை / கோபத்தை நாம் பெறமாட்டோம் மற்றும் அது நமக்குரியது அல்ல என்று கிறிஸ்தவர்களாகிய நமக்கு இது உறுதியளிக்கிறது (1 தெசலோனிக்கேயர் 5:8-9). கிறிஸ்தவ வாழ்க்கையை தினமும் எவ்வாறு நடத்துவது என்று இது நமக்கு அறிவுறுத்துகிறது (1 தெசலோனிக்கேயர் 4-5).*

# *56. 2 தெசலோனிக்கேயர் புத்தகம்*

## *எழுத்தாளர்:*

*2 தெசலோனிக்கேயர் முதலாம் அதிகாரத்தின் முதலாவது வசனம், 2 தெசலோனிக்கேயர் புத்தகம் அப்போஸ்தலனாகிய பவுலால் எழுதப்பட்டது என்பதை தெளிவுபடுத்துகிறது, அநேகமாக சீலா மற்றும் தீமோத்தேயுவுடன் சேர்ந்து பவுல் இதை எழுதியிருக்கலாம்.*

## *எழுதப்பட்ட காலம்:*

*2 தெசலோனிக்கேயர் புத்தகம் கி.பி. 51-52-ன் காலக்கட்டத்தில் எழுதப்பட்டிருக்கலாம்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*தெசலோனிகேயாவில் உள்ள திருச்சபையில் கர்த்தருடைய நாள் குறித்து சில தவறான எண்ணங்கள் இருந்தன. இது ஏற்கனவே வந்துவிட்டதாக அவர்கள் நினைத்தார்கள், அதனால் அவர்கள் தாங்கள் செய்து வந்ததான தங்கள் வேலையை நிறுத்திவிட்டார்கள். அவர்கள் மோசமாக துன்புறுத்தப்பட்டனர். அவர்களுடைய தவறான எண்ணங்களைத் தீர்த்து, அவர்களுக்கு ஆறுதல் கூறும்படியாக பவுல் இந்த நிருபத்தை எழுதினார்.*

## *திறவுகோல் வசனங்கள்:*

*2 தெசலோனிக்கேயர் 1:6-7, "உங்களை உபத்திரவப்படுத்துகிறவர்களுக்கு உபத்திரவத்தையும், உபத்திரவப்படுகிற உங்களுக்கு எங்களோடேகூட இளைப்பாறுதலையும் பிரதிபலனாகக்கொடுப்பது தேவனுக்கு நீதியாயிருக்கிறதே. தேவனை அறியாதவர்களுக்கும், நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்கும் நீதியுள்ள ஆக்கினையைச் செலுத்தும்படிக்கு."*

*2 தெசலோனிக்கேயர் 2:13, "கர்த்தருக்குப் பிரியமான சகோதரரே, நீங்கள் ஆவியினாலே பரிசுத்தமாக்கப்படுகிறதினாலும், சத்தியத்தை*

*விசுவாசிக்கிறதினாலும் இரட்சிப்படையும்படிக்கு, ஆதிமுதல் தேவன் உங்களைத் தெரிந்துகொண்டபடியினாலே, நாங்கள் உங்களைக்குறித்து எப்பொழுதும் தேவனை ஸ்தோத்திரிக்கக் கடனாளிகளாயிருக்கிறோம்.''*

*2 தெசலோனிக்கேயர் 3:3, ''கர்த்தரோ உண்மையுள்ளவர், அவர் உங்களை ஸ்திரப்படுத்தி, தீமையினின்று விலக்கிக் காத்துக்கொள்ளுவார்.''*

*2 தெசலோனிக்கேயர் 3:10, ''ஒருவன் வேலைசெய்ய மனதில்லாதிருந்தால் அவன் சாப்பிடவும் கூடாதென்று நாங்கள் உங்களிடத்தில் இருந்தபோது உங்களுக்குக் கட்டளையிட்டோமே.''*

## சுருக்கமான திரட்டு:

*தெசலோனிகேயாவில் உள்ள திருச்சபையை பவுல் வாழ்த்தி அவர்களை ஊக்குவித்து அறிவுறுத்துகிறார். கர்த்தருக்குள்ளாக அவர்கள் செய்கிறதைக் கேட்டு அவர் அவர்களைப் பாராட்டுகிறார், அவர்களுக்காக ஜெபிக்கிறார் (2 தெசலோனிக்கேயர் 1:11-12). கர்த்தருடைய நாளில் என்ன நடக்கும் என்று பவுல் 2-ஆம் அதிகாரத்தில் தெளிவாக விளக்குகிறார் (2 தெசலோனிக்கேயர் 2:1-12). பவுல் அவர்களை உறுதியாக நிற்கவேண்டும் என்று ஊக்குவிக்கிறார், சுவிசேஷத்தின்படி வாழாமல் சோம்பேறிகளாக இருக்கும் மனிதர்களிடமிருந்து விலகி இருக்கும்படி அவர் அவர்களுக்கு அறிவுறுத்துகிறார் (2 தெசலோனிக்கேயர் 3:6).*

## இணைப்புகள்:

*பவுல் தனது சம்பாஷணையில் பல பழைய ஏற்பாட்டு பகுதிகளை இறுதி காலங்களில் சம்பவிக்கப்போவது தொடர்புபடுத்திக் குறிப்பிடுகிறார், இதன் மூலம் பழைய ஏற்பாட்டுத் தீர்க்கதரிசிகளை உறுதிப்படுத்தி ஒப்புரவாக்குகிறார். இந்த கடிதத்தின் இறுதி காலங்களில் அவர் கற்பித்தவற்றில் பெரும்பாலானவை தீர்க்கதரிசி தானியேல் மற்றும் அவரது தரிசனங்களை அடிப்படையாகக் கொண்டவையாகும். 2 தெசலோனிக்கேயர் 2:3-9-ல், ''பாவ மனுஷன்'' (தானியேல் 7—8) பற்றிய தானியேலின் தீர்க்கதரிசனத்தை அவர் குறிப்பிடுகிறார்.*

## *நடைமுறை பயன்பாடு:*

*2 தெசலோனிக்கேயர் புத்தகம் கடைசிக் காலங்களில் சம்பவிக்கப்போகிறவைகளை விளக்கும் தகவல்களால் நிரப்பப்பட்டுள்ளது. செம்பெரித்தனமுள்ளவர்களாக இருக்கக்கூடாது என்றும் நம்மிடம் உள்ளவற்றில் இருப்பதற்காக வேலை செய்ய வேண்டும் என்றும் இது அறிவுறுத்துகிறது. 2 தெசலோனிக்கேயரில் சில பிரதான ஜெபங்களும் உள்ளன, அவை இன்றும் மற்ற விசுவாசிகளுக்காக எவ்வாறு ஜெபிக்க வேண்டும் என்பதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.*

# 57. 1 தீமோத்தேயுவின் புத்தகம்

## *எழுத்தாளர்:*

*1 தீமோத்தேயு புத்தகம் அப்போஸ்தலன் பவுலால் எழுதப்பட்டது என்பது, "இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனாயிருக்கிற பவுல், விசுவாசத்தில் உத்தம குமாரனாகிய தீமோத்தேயுவுக்கு எழுதுகிறதாவது" (1 தீமோத்தேயு 1:1, 2) என்னும் வார்த்தைகளில் தெளிவாகிறது.*

## *எழுதப்பட்ட காலம்:*

*1 தீமோத்தேயுவின் புத்தகம் கி.பி. 62-66 வரையிலுள்ள காலக்கட்டத்தில் எழுதப்பட்டதாகும்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*எபேசு திருச்சபையின் பணிகளையும், ஆசியா மாகாணத்தில் உள்ள பிற திருச்சபைகளை மேற்பார்வையிடும் பொறுப்பில் அவரை ஊக்குவிக்க பவுல் தீமோத்தேயுவுக்கு இந்த நிருபத்தை எழுதினார் (1 தீமோத்தேயு 1:3). இந்த நிருபம் மூப்பர்களை நியமிப்பதற்கான அடித்தளத்தை அமைக்கிறது (1 தீமோத்தேயு 3:1-7), மேலும் ஜனத்தை திருச்சபை அலுவலகங்களுக்குள் நியமிப்பதற்கான வழிகாட்டுதலை வழங்குகிறது (1 தீமோத்தேயு 3:8-13). சாராம்சத்தில், 1 தீமோத்தேயுவின் புத்தகம் திருச்சபை அமைப்பு மற்றும் நிர்வாகத்திற்கான தலைமை கையேடு ஆகும்.*

## *திறவுகோல் வசனங்கள்:*

*1 தீமோத்தேயு 2:5, தேவன் ஒருவரே, தேவனுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே. எல்லாரையும் மீட்கும் பொருளாகத் தம்மை ஒப்புக்கொடுத்த மனுஷனாகிய கிறிஸ்து இயேசு அவரே."*

*1 தீமோத்தேயு 2:12, "உபதேசம்பண்ணவும், புருஷன்மேல் அதிகாரஞ்செலுத்தவும், ஸ்திரீயானவளுக்கு நான் உத்தரவு கொடுக்கிறதில்லை; அவள் அமைதலாயிருக்கவேண்டும்."*

*1 தீமோத்தேயு 3:1-3, "கண்காணிப்பை விரும்புகிறவன் நல்லவேலையை விரும்புகிறான், இது உண்மையான வார்த்தை. ஆகையால் கண்காணியானவன் குற்றஞ்சாட்டப்படாதவனும், ஒரே மனைவியை உடைய புருஷனும், ஜாக்கிரதையுள்ளவனும், தெளிந்த புத்தியுள்ளவனும், யோக்கியதையுள்ளவனும், அந்நியரை உபசரிக்கிறவனும், போதகசமர்த்தனுமாய் இருக்கவேண்டும். அவன் மதுபானப்பிரியனும், அடிக்கிறவனும், இழிவான ஆதாயத்தை இச்சிக்கிறவனுமாயிராமல், பொறுமையுள்ளவனும், சண்டைபண்ணாதவனும், பண ஆசையில்லாதவனுமாயிருக்கவேண்டும்."*

*1 தீமோத்தேயு 4:9-10, "இந்த வார்த்தை உண்மையும் எல்லா அங்கிகரிப்புக்கும் பாத்திரமுமாயிருக்கிறது. இதினிமித்தம் பிரயாசப்படுகிறோம், நிந்தையும் அடைகிறோம்; ஏனெனில் எல்லா மனுஷருக்கும், விசேஷமாக விசுவாசிகளுக்கும் இரட்சகராகிய ஜீவனுள்ள தேவன்மேல் நம்பிக்கை, வைத்திருக்கிறோம்."*

*1 தீமோத்தேயு 6:12, "விசுவாசத்தின் நல்ல போராட்டத்தைப் போராடு, நித்தியஜீவனைப் பற்றிக்கொள்; அதற்காகவே நீ அழைக்கப்பட்டாய்; அநேக சாட்சிகளுக்கு முன்பாக நல்ல அறிக்கை பண்ணினவனுமாயிருக்கிறாய்."*

## சுருக்கமான திரட்டு:

*பவுலுக்கு உதவியாக இருந்த ஒரு இளம் போதகராகிய தீமோத்தேயுவுக்கு பவுல் எழுதிய முதல் நிருபம் இது. தீமோத்தேயு ஒரு கிரேக்கன் ஆவார். அவரது தாயார் ஒரு யூதர், அவரது தந்தை கிரேக்கன். பவுல் தீமோத்தேயுவுக்கு ஒரு வழிகாட்டியாகவும் தலைவராகவும் இருந்தார், அவர் அவருக்கு ஒரு தந்தையைப் போலவும், தீமோத்தேயு பவுலுக்கு ஒரு மகனைப் போலவும் இருந்தார் (1 தீமோத்தேயு 1:2). கள்ளப் போதகர்களுக்கும் கள்ள உபதேசங்களுக்கும் எச்சரிக்கையாக இருக்கும்படி தீமோத்தேயுவை அறிவுறுத்துவதன் மூலம் பவுல் இந்த நிருபத்தைத் தொடங்குகிறார். இருப்பினும், இந்த கடிதத்தின் பெரும்பகுதி மேய்ப்பர்களின்/ஆயர்களின் நடத்தையைப் பற்றியதாகும். பவுல்*

*தீமோத்தேயுவை ஆராதனையில் அறிவுறுத்துகிறார் **(2-ஆம் அதிகாரம்)** மற்றும் திருச்ச்சபைக்கான முதிர்ச்சியான தலைவர்களை வளர்த்துக் கொள்ளும் படிக்கு அறிவுறுத்துகிறார் **(3-ஆம் அதிகாரம்).** நிருபத்தின் பெரும்பகுதி மேய்ப்பரின் நடத்தை, கள்ளப் போதகர்களைப் பற்றிய எச்சரிக்கைகள் மற்றும் பாவம் செய்கிற சபை உறுப்பினர்கள், சபையிலுள்ள விதவைகள், முதியவர்கள் மற்றும் அடிமைகள் மீதான திருச்சபையின் பொறுப்பு ஆகியவற்றைக் குறிக்கிறது. நிருபம் முழுவதும், பவுல் தீமோத்தேயுவை உறுதியாக நிலை நிற்கவும், விடாமுயற்சியுடன் இருக்கவும், அவருடைய அழைப்பிற்கு உண்மையாக இருக்கவும் பவுல் ஊக்குவிக்கிறார்.*

## இணைப்புகள்:

*1 தீமோத்தேயு புத்தகத்தில் உள்ள பழைய ஏற்பாட்டுக்கான ஒரு சுவாரஸ்யமான இணைப்பு, திருச்சபை மூப்பர்களை "இரட்டை கனத்திற்கு" தகுதியானவர்கள் என்று கருதுவதற்கும், தவறு செய்ததாகக் குற்றம் சாட்டப்படும்போது கனத்திற்கு தகுதியானவர் என்பதற்கும் பவுல் மேற்கோள் காட்டியுள்ளார் **(1 தீமோத்தேயு 5:17-19).** உபாகமம் **24:15, 25:4** மற்றும் லேவியராகமம் **19:13** அனைத்துமே ஒரு வேலையாள் சம்பாதித்த ஊதியத்தைச் செலுத்த வேண்டிய அவசியத்தையும், அதை சரியான நேரத்தில் செய்ய வேண்டியதன் அவசியத்தையும் குறித்துப் பேசுகின்றன. ஒரு மனிதனுக்கு எதிராக ஒரு குற்றச்சாட்டைக் கொண்டுவர இரண்டு அல்லது மூன்று சாட்சிகள் அவசியம் என்று மோசேயின் நியாயப்பிரமாண சட்டத்தின் ஒரு பகுதி கோரியது (உபாகமம் **19:15).** தீமோத்தேயு மேய்ப்பராக இருந்த சபைகளில் இருந்த யூத கிறிஸ்தவர்கள் இந்த பழைய ஏற்பாட்டு தொடர்புகளை நன்கு அறிந்திருப்பார்கள்.*

## நடைமுறை பயன்பாடு:

*தேவனுக்கும் மனிதனுக்கும் இடையிலான மத்தியஸ்தராக இயேசு கிறிஸ்துவைப் பவுல் முன்வைக்கிறார் **(1 தீமோத்தேயு 2:5),** மேலும் அவரை நம்புகிற யாவருக்கும் அவர் இரட்சகராக இருக்கிறார். அவர் திருச்சபையின் கர்த்தராக இருக்கிறார், தீமோத்தேயு அவருடைய*

திருச்சபையை மேய்ப்பதன் மூலம் அவருக்கு சேவை செய்கிறார். ஆகவே, பவுல் தனது "விசுவாசமுள்ள மகனுக்கு" எழுதிய முதல் கடிதத்தின் முக்கிய பயன்பாட்டை இங்கேக் காண்கிறோம். சபைக் கோட்பாடு, சபைத் தலைமை மற்றும் சபையின் நிர்வாகம் போன்ற விஷயங்களில் பவுல் தீமோத்தேயுவுக்கு அறிவுறுத்துகிறார். இன்று நாம் நம்முடைய உள்ளூர் திருச்சபையை நிர்வகிப்பதில் அதே வழிமுறைகளைப் பயன்படுத்தலாம் / கையாளலாம். அதேபோல், ஒரு போதகரின் பணி மற்றும் அவரது ஊழியம், ஒரு மூப்பருக்கான தகுதிகள் மற்றும் ஒரு உதவிக்காரரின் தகுதிகள் ஆகியவை தீமோத்தேயுவின் நாட்களில் இருந்ததைப் போலவே இன்றும் அவைகள் முக்கியமானவை மற்றும் பொருத்தமானவைகளாக இருக்கின்றன. தீமோத்தேயுவுக்கு பவுலின் முதல் நிருபம் உள்ளூர் திருச்சபையை வழிநடத்துவது, நிர்வகிப்பது மற்றும் மேய்த்து பராமரிப்பது குறித்த அறிவுறுத்தல்கள் அடங்கிய புத்தகமாகும். இந்த நிருபத்திலுள்ள வழிமுறைகள் கிறிஸ்துவினுடைய திருச்சபையின் எந்தவொரு தலைவருக்கும் அல்லது வருங்காலத் தலைவருக்கும் பொருந்தும், அவை பவுலின் நாட்களில் இருந்ததைப் போலவே இன்றும் பொருந்தும். தங்கள் திருச்சபையில் தலைமைப் பொறுப்புகளுக்கு அழைக்கப்படாதவர்களுக்கு, புத்தகம் முன்வைக்கிற தகுதிகள் இன்னும் நடைமுறையில் உள்ளது. கிறிஸ்துவைப் பின்பற்றுகிற ஒவ்வொருவரும் விசுவாசத்திற்காக தைரியமாகப் போராட வேண்டும் மற்றும் தவறான கள்ளப்போதனைகளைத் தவிர்க்க வேண்டும். பின்பற்றுகிற ஒவ்வொருவரும் தங்களை அழைத்த பொறுப்புகளில் உறுதியாக நிற்க வேண்டும், விடாமுயற்சியுடன் இருக்க வேண்டும்.

# 58. 2 தீமோத்தேயு புத்தகம்

## எழுத்தாளர்:

*2 தீமோத்தேயு புத்தகத்தின் முதலாம் அதிகாரத்தின் முதலாம் வசனம், 2 தீமோத்தேயு புத்தகத்தின் எழுத்தாளரை அப்போஸ்தலனாகிய பவுல் என்று தெளிவாக அடையாளம் காட்டுகிறது.*

## எழுதப்பட்ட காலம்:

*2 தீமோத்தேயு புத்தகம் அப்போஸ்தலனாகிய பவுல் ரோமாபுரியில் சிரச்சேதம் பண்ணப்பட்டு கொல்லப்படுவதற்கு சற்று முன்பதாக ஏறக்குறைய கி.பி. 67-ல் இந்த நிருபத்தை எழுதினார்.*

## எழுதப்பட்டதன் நோக்கம்:

*ரோமாபுரியில் மீண்டும் சிறையில் அடைக்கப்பட்ட அப்போஸ்தலனாகிய பவுல் தனிமையாகவும் எல்லோராலும் கைவிடப்பட்டதையும் உணர்ந்தார். தனது பூமிக்குரிய வாழ்க்கை விரைவில் முடிவுக்கு வரக்கூடும் என்பதை பவுல் அறிந்திருந்தார். 2 தீமோத்தேயுவின் புத்தகம் அடிப்படையில் பவுலின் "கடைசி வார்த்தைகள்" ஆகும். திருச்சபைகள் மீது குறிப்பாக தீமோத்தேயு மீதுள்ள அக்கறையை வெளிப்படுத்த பவுல் தனது சொந்த சூழ்நிலைகளை கடந்தார். பவுல் தனது கடைசி வார்த்தைகளைப் பயன்படுத்தி தீமோத்தேயுவையும் மற்ற எல்லா விசுவாசிகளையும் விசுவாசத்தில் விடாமுயற்சியுடன் இருக்கும்படிக்கு ஊக்குவிக்க விரும்பினார் (2 தீமோத்தேயு 3:14) மற்றும் இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிக்க திடப்படும்படியாகவும் விரும்பினார் (2 தீமோத்தேயு 4:2).*

## திறவுகோல் வசனங்கள்:

*2 தீமோத்தேயு 1:7, "தேவன் நமக்குப் பயமுள்ள ஆவியைக் கொடாமல், பலமும் அன்பும் தெளிந்த புத்தியுமுள்ள ஆவியையே கொடுத்திருக்கிறார்."*

*2 தீமோத்தேயு 3:16-17, "வேதவாக்கியங்களெல்லாம் தேவஆவியினால் அருளப்பட்டிருக்கிறது; தேவனுடைய மனுஷன் தேறினவனாகவும், எந்த நற்கிரியையுஞ் செய்யத் தகுதியுள்ளவனாகவும் இருக்கும்படி, அவைகள் உபதேசத்துக்கும், கடிந்துகொள்ளுதலுக்கும் சீர்திருத்தலுக்கும், நீதியைப் படிப்பிக்குதலுக்கும் பிரயோஜனமுள்ளவைகளாயிருக்கிறது."*

*2 தீமோத்தேயு 4:2, "சமயம் வாய்த்தாலும் வாய்க்காவிட்டாலும் ஜாக்கிரதையாய்த் திருவசனத்தைப் பிரசங்கம்பண்ணு; எல்லா நீடிய சாந்தத்தோடும் உபதேசத்தோடும் கண்டனம் பண்ணி, கடிந்துகொண்டு, புத்திசொல்லு."*

*2 தீமோத்தேயு 4:7-8, "நல்ல போராட்டத்தைப் போராடினேன், ஓட்டத்தை முடித்தேன், விசுவாசத்தைக் காத்துக்கொண்டேன். இதுமுதல் நீதியின் கிரீடம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது, நீதியுள்ள நியாயாதிபதியாகிய கர்த்தர் அந்நாளிலே அதை எனக்குத் தந்தருளுவார்; எனக்கு மாத்திரமல்ல, அவர் பிரசன்னமாகுதலை விரும்பும் யாவருக்கும் அதைத் தந்தருளுவார்.*

### சுருக்கமான திரட்டு:

*பவுல் தீமோத்தேயுவை கிறிஸ்துவின் மீது ஆர்வமாக இருக்கும்படி ஊக்குவிக்கிறார், மேலும் நல்ல ஆரோக்கியமான உபதேசத்தில் உறுதியாக இருக்க வேண்டும் என்று கூறுகிறார் (2 தீமோத்தேயு 1:1-2, 13-14). தேவபக்தியற்ற நம்பிக்கைகளையும் பழக்கவழக்கங்களையும் தவிர்க்கவும் ஒழுக்கக்கேடான எதையும் விட்டு விலகவும் பவுல் தீமோத்தேயுவை நினைவுபடுத்துகிறார் (2 தீமோத்தேயு 2:14-26). கடைசிக் காலங்களில் கிறிஸ்தவ விசுவாசத்திலிருந்து கடுமையான உபத்திரவம் மற்றும் விசுவாசத் துரோகம் ஆகிய இரண்டுமே இருக்கும் (2 தீமோத்தேயு 3:1-17) என்று கூறுகிறார். விசுவாசிகள் தங்கள் விசுவாசத்தில் உறுதியாக நிற்கவும், தங்களுக்குள்ள விசுவாச ஓட்டத்தை வலுவாக முடிக்கவும் வேண்டுமென பவுல் ஒரு தீவிர வேண்டுகோளுடன் தனது நிருபத்தை முடிக்கிறார் (2 தீமோத்தேயு 4:1-8).*

## ***இணைப்புகள்:***

*மோசேயை எதிர்த்த எகிப்திய மந்திரவாதிகளின் கதையை மேற்கோள்காட்டி, கள்ளப்போதகர்களின் ஆபத்துக்களைப் பற்றி அவர் மேய்ப்பராக இருக்கக் கூடிய சபைகளில் தீமோத்தேயு கவனமாக இருக்கும்படிக்கு பவுல் எச்சரிக்கிறார் (யாத்திராகமம் **7:11, 22; 8:7, 18, 19; 9:11** ). பழைய ஏற்பாட்டில் அவர்களின் பெயர்கள் குறிப்பிடப்படவில்லை என்றாலும், இந்த மனிதர்கள் பொற்க்காளைக் கன்றைக் கட்டியெழுப்பத் தூண்டினர் மற்றும் மீதமுள்ளவர்களையும் விக்கிரகாராதனையுடன் சேர்ந்து கொல்லப்படுபடியாக செய்தனர் (யாத்திராகமம் **32**). கிறிஸ்துவின் சத்தியத்தை எதிர்ப்பவர்களுக்கு அதே கதியை / நிலைமையை பவுல் முன்னறிவிக்கிறார், அவர்களின் முட்டாள்தனம் வெளிப்பட்டதுபோல, இறுதியில் "இவர்களுடைய மதிகேடும் வெளிப்படும்" (**2** தீமோத்தேயு **3:9**).*

## ***நடைமுறை பயன்பாடு:***

*கிறிஸ்தவ வாழ்க்கையில் பக்க கண்காணிப்புகளில் ஈர்க்கப்பட்டு வழிவிலகிப் போவதென்பது மிகவும் எளிது. ஈவைப் பெற்ற நாம் நமது கண்களை அவைகளின்மேல் வைத்திருக்க வேண்டும் — அது இயேசுவால் பரலோகத்தில் வெகுமதி அளிக்கப்படுகிறது (**2** தீமோத்தேயு **4:8**). கள்ளப்போதனை மற்றும் தேவபக்தியற்ற நடைமுறைகள் இரண்டையும் தவிர்க்க நாம் பாடுபட வேண்டும். தேவனுடைய வார்த்தையைப் பற்றிய நமது அறிவில் அடித்தளமாக உறுதியாக இருப்பதன் மூலமும், வேதாகமமற்ற எதையும் ஏற்க மறுப்பதில் உறுதியாக இருப்பதன் மூலமும் இதைச் செய்ய முடியும்.*

# 59. தீத்துவின் புத்தகம்

## *எழுத்தாளர்:*

*தீத்து முதலாம் அதிகாரத்தின் முதலாவது வசனம், அப்போஸ்தலனாகிய பவுல்தான் தீத்து புத்தகத்தின் எழுத்தாளர் என்று அடையாளப்படுத்துகிறது.*

## *எழுதப்பட்ட காலம்:*

*தீத்துவுக்கு எழுதின நிருபம் ஏறக்குறைய கி.பி. 66-ல் எழுதப்பட்டதாகும். பவுலின் பல சுவிசேஷப் பயணங்கள் நன்கு ஆவணப்படுத்தப்பட்டுள்ளன, மேலும் அவர் எபிரஸில் உள்ள நிக்கொப்போலிக்கிலிருந்து தீத்துவுக்கு இந்த நிருபத்தை எழுதியதைக் காட்டுகிறது. சில வேதாகம மொழிபெயர்ப்புகளில், மக்கெதோனியாவில் உள்ள நிக்கொப்போலிக்கிலிருந்து பவுல் இந்த நிருபத்தை எழுதியதாக நிருபத்தின் மேற்குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. இருப்பினும், அத்தகைய ஒரு இடம் எதுவும் இல்லை மற்றும் இந்த மேற்குறிப்புக்கள் உண்மையானவை அல்ல என்பதால் அவைகள் அதிகாரமற்றதாகும்.*

## *எழுதப்பட்டதன் நோக்கம்:*

*தீமோத்தேயுவுக்கு எழுதிய இரண்டு கடிதங்களைப் போலவே தீத்துவிற்கும் பவுல் எழுதிய இந்த நிருபம் மேய்ப்பர்களுக்கு எழுதப்பட்ட நிருபங்களில் ஒன்றாக அறியப்படுகிறது. இந்த நிருபத்தை அப்போஸ்தலனாகிய பவுல் விசுவாசத்தில் தன் சகோதரரான தீத்துவை ஊக்குவிப்பதற்காக எழுதினார், பவுல் தனது மிஷனரி பயணங்களின்பொது நிறுவிய திருச்சபைகளுள் ஒரு திருச்சபையை வழிநடத்தும்படியாக தீத்துவை கிரேத்தா தீவில் விட்டுவிட்டுப் புறப்பட்டார் (தீத்து 1:5). இந்த நிருபம் தீத்துவினை திருச்ச்சபைக்கான தலைவர்களுக்கு என்னென்ன தகுதிகள் காணப்பட வேண்டும் என்று அறிவுறுத்துகிறது. கிரேத்தா தீவில் வசிப்பவர்களின் பண்புகளைக் குறித்தும் அவர் தீத்துவை எச்சரிக்கிறார் (தீத்து 1:12).*

*திருச்சபையில் ஒரு தலைவரில் காணப்படவேண்டிய தகுதிகளைக் குறித்து தீத்துவிற்கு அறிவுறுத்தியதோடு மட்டுமல்லாமல், தீத்துவை நிக்கொபோலிக்கு வருகை தரும்படியும் பவுல் ஊக்குவித்தார். வேறு வார்த்தைகளில் கூறுவதானால், பவுல் தீத்துவையும் அதுபோல் மற்றவர்களையும் தொடர்ந்து கர்த்தருடைய கிருபையில் வளர்த்து அவர்களை சீஷராக்கினார் (தீத்து 3:13).*

## திறவுகோல் வசனங்கள்:

*தீத்து 1:5, "நீ குறைவாயிருக்கிறவைகளை ஒழுங்குபடுத்தும்படிக்கும், நான் உனக்குக் கட்டளையிட்டபடியே, பட்டணங்கள்தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கும், உன்னைக் கிரேத்தாதீவிலே விட்டுவந்தேனே."*

*தீத்து 1:16, "அவர்கள் தேவனை அறிந்திருக்கிறோமென்று அறிக்கைபண்ணுகிறார்கள், கிரியைகளினாலோ அவரை மறுதலிக்கிறார்கள்; அவர்கள் அருவருக்கப்படத்தக்கவர்களும், கீழ்ப்படியாதவர்களும், எந்த நற்கிரியையுஞ்செய்ய ஆகாதவர்களுமாயிருக்கிறார்கள்."*

*தீத்து 2:15, "இவைகளை நீ பேசி, போதித்து, சகல அதிகாரத்தோடும் கடிந்துகொள். ஒருவனும் உன்னை அசட்டைபண்ண இடங்கொடாதிருப்பாயாக."*

*தீத்து 3:3-6, "ஏனெனில், முற்காலத்திலே நாமும் புத்தியீனரும், கீழ்ப்படியாதவர்களும், வழிதப்பி நடக்கிறவர்களும், பலவித இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும். அடிமைப்பட்டவர்களும், துர்க்குணத்தோடும் பொறாமையோடும் ஜீவனம்பண்ணுகிறவர்களும், பகைக்கப்படத்தக்கவர்களும், ஒருவரையொருவர் பகைக்கிறவர்களுமாயிருந்தோம். நம்முடைய இரட்சகராகிய தேவனுடைய தயையும் மனுஷர்மேலுள்ள அன்பும் பிரசன்னமானபோது, நாம் செய்த நீதியின் கிரியைகளினிமித்தம் அவர் நம்மை இரட்சியாமல், தமது இரக்கத்தின்படியே, மறுஜென்ம முழுக்கினாலும், பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்குதலினாலும் நம்மை இரட்சித்தார். தமது கிருபையினாலே நாம்*

*நீதிமான்களாக்கப்பட்டு, நித்திய ஜீவனுண்டாகும் என்கிற நம்பிக்கையின்படி சுதந்தரமாகத்தக்கதாக, அவர் நமது இரட்சகராகிய இயேசுகிறிஸ்து மூலமாய், அந்தப் பரிசுத்தாவியை நம்மேல் சம்பூரணமாய்ப் பொழிந்தருளினார்.''*

## சுருக்கமான திரட்டு:

*தீத்து தனது வழிகாட்டியான அப்போஸ்தலனாகிய பவுலிடமிருந்து ஒரு கடிதத்தைப் பெற்றபோது அது எவ்வளவு அருமையானதாக இருந்திருக்க* வேண்டும். *பவுல் மிகவும் மரியாதைக்குரிய ஒரு மனிதராக இருந்தார், கிழக்கத்திய நாடுகள் முழுவதும் பல திருச்சபைகளை நிறுவியதால் பவுல் மிகவும் கனம்பெற்று விளங்கினார். அப்போஸ்தலரிடமிருந்து வந்த இந்த புகழ்பெற்ற அறிமுகம் தீத்துவால் நிச்சயமாக வாசிக்கப்பட்டிருக்கும்,* "*பொதுவான விசுவாசத்தின்படி உத்தம குமாரனாகிய தீத்துவுக்கு எழுதுகிறதாவது: பிதாவாகிய* தேவனாலும், *நம்முடைய இரட்சகராயிருக்கிற கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலும், கிருபையும் இரக்கமும் சமாதானமும் உண்டாவதாக*" *(தீத்து 1:4).*

*திருச்சபையை வழிநடத்துவதற்காக தீத்துவை பவுல் விட்டுச்சென்ற கிரேத்தா தீவில், தீவின் பூர்வீகவாசிகள் மற்றும் இயேசு கிறிஸ்துவைப்பற்றிய உண்மையை அறியாத யூதர்கள் வசித்து வந்தனர் (தீத்து 1:12-14). கிரேத்தா தீவிலுள்ள திருச்சபையில் தலைவர்களை வளர்த்து அவர்களை ஏற்ப்படுத்துவதில் தீத்துவை அறிவுறுத்துவதற்கும் மற்றும் ஊக்குவிப்பதற்கும் தீத்துவை பின்தொடர்ந்து அவரை* போதனைகளால் *அறிவுறுத்துவதை தனது பொறுப்பாக பவுல் உணர்ந்தார். அப்போஸ்தலனாகிய பவுல் தலைவர்களைத் கண்டறிவதில் தீத்துவை வழிநடத்தியபோது, கிறிஸ்து மீதான விசுவாசத்தில் வளரும்படி தீத்து தலைவர்களுக்கு எவ்வாறு அறிவுறுத்த* வேண்டும் *என்றும் பவுல் பரிந்துரைக்கிறார். அவருடைய அறிவுறுத்தல்கள் எல்லா வயதினருக்கும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் (தீத்து 2:1-8) ஏற்ற வகையில் இருந்தன.*

*கிறிஸ்துவை விசுவாசிப்பதில் தீத்துக்கு உதவுவதற்காக, தீத்து நிக்கொபோலிக்கு வந்து திருச்சபையிலுள்ள மற்ற இரண்டு*

# 69. வெளிப்படுத்தின விசேஷம் புத்தகம்

***எழுத்தாளர்:***

*வெளிப்படுத்துதல் **1:1, 4, 9** மற்றும் **22:8** ஆகிய வசனங்கள் வெளிப்படுத்தின விசேஷம் புத்தகத்தின் எழுத்தாளரை அப்போஸ்தலனாகிய யோவான் என்று குறிப்பாக அடையாளம் காட்டுகின்றன.*

***எழுதப்பட்ட காலம்:***

*வெளிப்படுத்தின விசேஷம் புத்தகம் கி.பி. **90** மற்றும் கி.பி. **95** க்கு இடையில் எழுதப்பட்டிருக்கலாம்.*

***எழுதப்பட்டதன் நோக்கம்:***

*இயேசு கிறிஸ்துவின் வெளிப்பாடு யோவானுக்கு "விரைவில் சம்பவிக்க வேண்டியதை அவருடைய ஊழியர்களுக்குக் காண்பிப்பதற்காக" வழங்கப்பட்டது. இந்த புத்தகம் இனி வரவிருக்கும் விஷயங்களைப் பற்றிய மர்மங்களால் / இரகசியங்களால் நிரப்பப்பட்டுள்ளது. உலகம் நிச்சயமாக முடிவடையும், நியாயத்தீர்ப்பு நிச்சயம் இருக்கும் என்பது இறுதி எச்சரிக்கையாகும். இது நமக்கு பரலோகத்தின் ஒரு சிறிய காட்சியைத் தருகிறது, மேலும் அவர்களின் ஆடைகளை வெண்மையாக வைத்திருப்பவர்களுக்கு காத்திருக்கும் எல்லா மகிமைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. வெளிப்படுத்துதல் அதன் எல்லா உபத்திரவங்களுடனும், அவிசுவாசிகள் அனைவரும் நித்தியத்திற்காக எதிர்கொள்ளும் இறுதி அக்கினியினாலும் பெரும் உபத்திரவத்தின் மூலம் நம்மை அழைத்துச் செல்கிறது. புத்தகம் சாத்தானின் வீழ்ச்சியையும், அவனும் அவனுடைய தேவதூதர்களும் பிணைக்கப்பட்டுள்ள அழிவை மீண்டும் வலியுறுத்துகிறது. பரலோகத்தின் அனைத்து ஜீவராசிகள் மற்றும் தேவதூதர்களின் கடமைகளும், புதிய எருசலேமில் இயேசுவோடு என்றென்றும் வாழும் பரிசுத்தவான்களின் வாக்குறுதிகளும் நமக்குக் காட்டப்பட்டுள்ளன. யோவானைப் போலவே, வெளிப்படுத்துதல்*

*புத்தகத்தில் நாம் படித்ததை விவரிக்க வார்த்தைகளைக் கண்டுபிடிப்பது என்பது மிகவும் கடினம்.*

## திறவுகோல் வசனங்கள்:

*வெளிப்படுத்துதல் **1:19**, "நீ கண்டவைகளையும், இருக்கிறவைகளையும், இவைகளுக்குப்பின்பு சம்பவிப்பவைகளையும் எழுது."*

*வெளிப்படுத்துதல் **13:16-17**, "அது சிறியோர், பெரியோர், ஐசுவரியவான்கள், தரித்திரர், சுயாதீனர், அடிமைகள், இவர்கள் யாவரும் தங்கள் தங்கள் வலதுகைகளிலாவது நெற்றிகளிலாவது ஒரு முத்திரையைப் பெறும்படிக்கும், அந்த மிருகத்தின் முத்திரையையாவது அதின் நாமத்தையாவது அதின் நாமத்தின் இலக்கத்தையாவது தரித்துக்கொள்ளுகிறவன் தவிர வேறொருவனும் கொள்ளவும் விற்கவுங் கூடாதபடிக்கும் செய்தது."*

*வெளிப்படுத்துதல் **19:11**, "பின்பு, பரலோகம் திறந்திருக்கக்கண்டேன்; இதோ, ஒரு வெள்ளைக்குதிரை காணப்பட்டது, அதின்மேல் ஏறியிருந்தவர் உண்மையும் சத்தியமுமுள்ளவரென்னப்பட்டவர்; அவர் நீதியாய் நியாயந்தீர்த்து யுத்தம்பண்ணுகிறார்."*

*வெளிப்படுத்துதல் **20:11**, "பின்பு, நான் பெரிய வெள்ளைச் சிங்காசனத்தையும் அதின்மேல் வீற்றிருக்கிறவரையும் கண்டேன்; அவருடைய சமுகத்திலிருந்து பூமியும் வானமும் அகன்றுபோயின; அவைகளுக்கு இடங்காணப்படவில்லை."*

*வெளிப்படுத்துதல் **21:1**, "பின்பு, நான் புதிய வானத்தையும் புதிய பூமியையும் கண்டேன்; முந்தின வானமும் முந்தின பூமியும் ஒழிந்துபோயின; சமுத்திரமும் இல்லாமற்போயிற்று."*

## சுருக்கமான திரட்டு:

*கிறிஸ்துவின் வருகைக்கு முந்தைய நாட்களிலும், புதிய வானத்தையும் புதிய பூமியையும் கொண்டுவருவதற்கு கடைசி நாட்களில் நமக்கு*

அறிவிக்கும் தரிசனங்களின் வண்ணமயமான விளக்கங்களில் வெளிப்பாடு பகட்டானது. ஆசியா மைனரின் ஏழு திருச்சபைகளுக்கான கடிதங்களுடன் வெளிப்பாடு தொடங்குகிறது, பின்னர் பூமியில் கொட்டப்பட்ட பேரழிவுகளின் தொடர்ச்சியை வெளிப்படுத்துகிறது; மிருகத்தின் குறியீடு "666"; அர்மகெதோனின் உச்சகட்ட போர்; சாத்தானின் கட்டப்படுதல்; கர்த்தருடைய ஆயிரவருட ஆட்சி; பெரிய வெள்ளை சிங்காசன தீர்ப்பு; தேவனுடைய நித்திய நகரத்தின் தன்மை. இயேசு கிறிஸ்துவைப் பற்றிய தீர்க்கதரிசனங்கள் நிறைவேறுகின்றன, அவருடைய கர்த்தத்துவத்திற்கு ஒரு இறுதி அழைப்பு அவர் விரைவில் திரும்புவார் என்று நமக்கு உறுதியளிக்கிறது.

## இணைப்புகள்:

வெளிப்படுத்துதல் புத்தகம் பழைய ஏற்பாட்டில் தொடங்கிய அனைத்து இறுதி காலங்களைப் பற்றிய தீர்க்கதரிசனங்களின் நிறைவேறுதலின் உச்சமாகும். தானியேல் 9:27-ல் குறிப்பிடப்பட்டுள்ள எதிர்க்கிறிஸ்துவின் விளக்கம் வெளிப்படுத்துதல் 13-ஆம் அதிகாரத்தில் முழுமையாக விவரிக்கப்பட்டுள்ளது. வெளிப்படுத்துதலுக்கு வெளியே, வேதாகமத்தில் வெளிப்படுத்தல் இலக்கியத்தின் எடுத்துக்காட்டுகள் தானியேல் 7-12 வரையிலுள்ள அதிகாரங்கள், ஏசாயா 24-27 வரையிலுள்ள அதிகாரங்கள், எசேக்கியேல் 37-41 வரையிலுள்ள அதிகாரங்கள் மற்றும் சகரியா 9-14 வரையிலுள்ள அதிகாரங்கள். இந்த தீர்க்கதரிசனங்கள் அனைத்தும் வெளிப்படுத்துதல் புத்தகத்தில் ஒன்றாக வந்துள்ளன.

## நடைமுறை பயன்பாடு:

கிறிஸ்துவை உங்கள் இரட்சகராக ஏற்றுக்கொண்டீர்களா? அப்படியானால், வெளிப்படுத்துதல் புத்தகத்தில் விவரிக்கப்பட்டுள்ளபடி உலகத்தைப் பற்றிய தேவனுடைய நியாயத்தீர்ப்பிற்கு நீங்கள் பயப்பட ஒன்றுமில்லை. பிரதான நீதிபதி நம் பக்கத்தில் இருக்கிறார். இறுதித் தீர்ப்பு தொடங்குவதற்கு முன், கிறிஸ்துவில் நித்திய ஜீவனை தேவன் அளிப்பதைப் பற்றி நண்பர்களுக்கும் அயலகத்தார்களுக்கும் நாம் சாட்சி கொடுக்க வேண்டும். இந்த புத்தகத்தில் உள்ள நிகழ்வுகள் யாவும்

உண்மையாகவே சம்பவிக்கப்போகிறவைகள் ஆகும். நாம் விசுவாசிப்பதைப் போலவே நாம் நம் வாழ்க்கையையும் வாழ வேண்டும், இதனால் மற்றவர்கள் நம் எதிர்காலத்தைப் பற்றிய மகிழ்ச்சியைக் கவனிப்பார்கள், மேலும் புதிய மற்றும் புகழ்பெற்ற நகரத்தில் நம்முடன் சேர விரும்புவார்கள்.

